தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் : 183.

# ஸ்ரீ ராமர் அம்மானை

(முதல் பதிப்பு)







தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையம்

1981] [ரு. 8—50

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் . 183.

# ஸ்ரீ ராமர் அம்மானை

திருவளர் நூலகம்- எண்.........

"பெரும்புலவர்"
டாக்டர் அ. மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்., டி.,
தமிழ்ப் பேராசிரியர்

❀

மருத்துவர் மறையரசன், ம.இ., அ.இ., பொ.க.க.உ.,
உலகத்தமிழ்க் கழகத் துணைத் தலைவர் (தமிழகம்)





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையம்,
தஞ்சாவூர்.



1981 ] [ ரூ. 8—50

# பொருளடக்கம்





# முன்னுரை

இராமர் அம்மானை என்னும் இந்நூல், தஞ்சை சரபோஜி மன்னரின் சரசுவதி மகால் நூலகத்திலுள்ள அரிய சுவடிகளைப் பதிப்பிக்கின்ற வரிசையில் 183-வது பதிப்பாக வெளியிடப்படுகிறது.

3,980 அடிகளைக் கொண்ட இந்நூல் சிற்றிலக்கியங் களுள் 'அம்மானை' என்னும் வகையைச் சார்ந்தது. இந் நூல் பாமர மக்களேயன்றிப் புலவர் பெருமக்களது மனதை யும் கவரும் வண்ணம் எளிய நடையுடன் சொற்கட்டும் பொருட்செறிவும் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இந்நூல் கம்பராமாயணத்தை முதனூலாகக் கொண்டு எழுதப்பட்டிருப்பினும், படிப்போர் அல்லது கேட்போரனை வரது உள்ளங்களிலும் உணர்ச்சியையும் மன நெகிழ்ச்சியை யும் தோற்றுவிக்கக் கூடிய நிலையில் ஆங்காங்கே சிற்சில மாறுதல்களை செய்திருப்பதுடன் சில நிகழ்ச்சிகளையும் மிக அழகாக சித்தரித்துக் காட்டியுள்ளார்கள்.

இந்நூலாசிரியரின் பெயரும் ஊரும் நன்கு அறிந்து கொள்ள முடியாமலிருப்பினும், இந்நூலின்கண் இடம் பெற்றுள்ள "கச்சிநகரார்க்குக் கண்ணுன புத்திரனுர், வரதன் சிறுவன் சொன்னுன்" என்ற அடியினைக் கொண்டு, இவர் கச்சிமாநகரத்தைச் சேர்ந்தவர் என்றும், வரதன் என்னும் பெயரினையுடையவர் என்றும் கொள்ள வேண்டி யிருக்கிறது.

இந்நூல் தஞ்சை சரபோஜி மன்னரின் சரசுவதி மகால் நூலகத்தில், தமிழ்ப் பிரிவிலுள்ள சுவடி எண் 217 டி / 60 என்ற சுவடியை ஆதாரமாகக் கொண்டு பதிப்பிக்கப் பட்டது.

இந்நூலைப் பதிப்பித்தவர் பெரும்புலவர், பேராசிரியர் டாக்டர் அ. மா. பரிமணம், எம்.ஏ, எம். லிட்., பி. எச்டி., என்பார். இவர் தனது தெளிந்த தமிழறிவாற்றலாலும், நிறைந்த அனுபவத்தாலும், சுவடியிலுள்ள குறைபாடுகளைக் களைந்து, மிகச்சிறப்பாக இந்நூலைப் பதிப்பித்துள்ளார். அன்னார்க்கு எங்கள் உளமார்ந்த நன்றியினைக் கூறக் கடமைப்பட்டுள்ளோம்.

இந்நூலை விரைவில் வெளியிடுவதற்கு ஆவன செய்து கொடுத்த இந்நூலகத்தாரனைவருக்கும், அச்சுப்பிரிவினருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

இந்நூலை அச்சிடுவதற்கும் இதுபோன்ற பிற நூல்களையும் அச்சிடுவதற்கும் அவ்வப்போது பொருளுதவி புரிந்து கொண்டிருக்கும் மத்திய அரசிற்கு எங்களது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலைத் தமிழ் கூறும் நல்லுலகத்திலுள்ள அறிஞர்களும், ஏனையோரும் படித்துப் பயன்பெறுவர் என்பது திண்ணம்.

இங்ஙனம்,

**ச. மெய்கண்ட தேவன்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சியர் & நிருவாகக்குழுத் தலைவர்
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,
*9—11—81.*



# பதிப்புரை

" வைய மீன்றதொன் மக்கள் உளத்தினைக்
கையி னுலுரை கால மிரிந்திடப்
பைய நாவை யசைத்த பழந்தமிழ்
ஐயை தாள்தலை கொண்டு பணிகுவாம் "

தஞ்சைத் தரணியாண்ட மராட்டிய மாமன்னர் சரபோஜியால் பேணிப் புரக்கப்பெற்ற தஞ்சைச் சரசுவதி மகால் நூலகம் இந்திய தேசிய நூலகங்களில் (National Libraries) ஒன்றெனமதிக்கப்படும் சிறப்புக்கொண்டது. தன் கலைக்கருவூலத்தில் ஒளிரும் கலை ஞானச் செல்வங்களை அச்சில் விளங்கச்செய்து, அறிவுலகத்திற்கு அளித்துவரும் அரிய பணியை இந்நூலகம் தன் சீரிய தொண்டாகக் கொண்டு ஆற்றி வருகின்றது. ஏட்டில் உறங்கிக் கிடந்த அரியபல தமிழ் நூல்களை நன்கு பதிப்பித்து நாட்டில் உலவச்செய்த பெருமை இந்நூலகத்திற்குண்டு.

பன்னூற் பயிற்சிமிக்குப் புலமைசான்ற பண்டிதப் பெருமக்களுக்குப் பயன்படும் நூல்களேயன்றிப் பயிற்சி மிகவில்லாத பாமர மக்களும் இலக்கியச்சுவை தேர்ந்து இன்பங்காணும் வகையில் நாட்டுப்பாடலிலக்கியங்களையும் (Folk Literature) புறக்கணிக்காது போற்றி வெளியிடுவது இந்த நூலகத்தின் பாராட்டத்தக்க சிறப்பாகும். இவ்வகையில், பல நாட்டுப்பாடல்வகை இலக்கியங்களை வெளியிட்டுத் தமிழக மொழிக்கும் கலைக்கும் தொண்டு செய்துள்ளது. இந்த வரிசையில் இராமர் அம்மானை என்னும் நூலினை இப்போது வெளியிடுகின்றது.

இராமாயணம் இந்திய நாட்டின் இணையற்ற கலைப் பேழைகளில் ஒன்றாகும். இராமன் வரலாறு இந்திய மண்ணையும் மக்களையும் பன்னெடுங்காலமாகப் பண்படுத்தி

வந்துள்ளது. அது, சிற்பமாய்ச் சித்திரமாய், காவியமாய், ஓவியமாய்க் கவினுர்ந்த உருக்கொண்டு இந்திய மக்கள் இதயத்தைக் கவர்ந்தும்—கனிவித்தும் வருகின்றது.

தமிழகத்தில் தமிழ்மொழியில் இராமகாதை நெடுங் காலமாகவே சிறப்புப் பெற்றுள்ளது. தமிழில் கம்பரால் ஆசை பற்று அறையலுற்ற காசில் கொற்றத்து இராமன் கதை, சிந்து, கும்மி, தாலாட்டு போன்ற, பாமரர் உள்ளங் களையுங் கவரும் பாங்கில் பலவேறு வகையான இலக்கிய வடிவம் பெற்றுத் திகழ்கின்றது. அதனுல் நாட்டில் செல் வாக்குப் பெற்றுள்ள பாமர இலக்கிய வடிவங்களில் ஒன்ரு கத்திகழும் அம்மானையிலும் இராமன் கதை அமைந்திருப்ப தில் வியப்பில்லை.

ஸ்ரீ ராமர் அம்மானை என்னும் பெயரில் அமைந்து இதுவரை ஏட்டில் முடங்கிக்கிடந்த இந்தப் பாமரர் இலக்கி யத்தைப் பதிப்பிக்கும் வாய்ப்பினை நூலகம் எனக்களித்துள் ளது. இது, பாமர இலக்கிய வகை சார்ந்ததாயினும் புல மிக்கவர்க்கும் நலமிக்க நயங்கள் மலிந்து இலங்குவது என் பதனை இதனைப் பயில்வோர் நன்கறிவர். இதன் சிறப்புக் களிற் சிலவற்றை இந்நூலில் இடம் பெற்றுள்ள ஆய்வுரை யால் அறியலாம்.

ஸ்ரீ இராமர் அம்மானை என்னும் இந்நூலினை ஓலைச் சுவடியினின்றும் படிஎடுத்து ஐம்பது ஆண்டுகட்கும் மேல் ஆகின்றது. அதனுல் ஏட்டுப் படியிலுள்ள ஐயங்களை அகற்றுவதில் இதன் ஓலைச்சுவடி பேருதவி புரியும் நிலையில் இல்லை. படியெடுக்கும்போதே சில ஓலைகளின் பகுதிகள் ஒடிந்து விட்டமையால், படியெடுத்தோர் எஞ்சியுள்ள தொடர்களை மட்டுமே குறித்துள்ளனர். இராவணன் படலம்போல இந்த ஓலைச்சுவடியும் இராமபாணத்தால் துளைக்கப்பட்டுள்ளது. அதனுல் இதனைப்பதிக்கும்போது பலவிடங்கள் சிக்கல் மிக்கனவாக இருந்தன.

சிதைந்த இடங்களைச் சந்தமும் பொருளும் நோக்கி நாமே அமைத்துச்செல்லுதல் கூடுமேனும் அப்படித் திருத்துவது பதிப்பறமாகாது. பதிப்பிக்கும் பாங்கில் கலப்படம் ஆகாதெனக் கருதிச் சிதைந்த இடங்கள் (...) எனப் புள்ளிகள் இட்டுக் காட்டப்பட்டுள்ளன. ஒரு ஓலையின் ஒரு பகுதி ஒடிந்தால் அதன் இருபுறமும் அமைந்துள்ள எழுத்துக்கள் மறைந்துவிடுகின்றன. எனினும், இந்நூல் நாடறிந்த கதையின் எளிய வடிவமாதலின் விடப்பட்ட பகுதிகளை ஊகித்துப் புரிந்துகொள்வதற்கு இடர்ப்பாடுண்டாவது இல்லை.

இராமலக்குவர் சீதை முதலியோர் மீண்டும் அயோத்தி அடைதல் வரையிலும் நூல் அமைந்திருந்தாலும் இறுதியில் சிறிது பகுதி இல்லாததாக உள்ளது. அது குறைபோலத் தோன்றினும் நிறைவுடையதாகவே நூல் அமைந்துள்ளது.

இராயர் அம்மானை என்னும் இந்நூலைச் செம்மை செய்து பதிப்பிக்கும் பேற்றினைத் தஞ்சைச் சரசுவதி மகால் நூலகத்தார் எனக்களித்துள்ளனர். அவர்கள் என்பாற் கொண்ட அன்பிற்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன். இதனைப் பதிப்பிக்குங்கால் பல்வேறு வகைகளில் எனக்கு உதவிபுரிந்த நூலக நிருவாக அதிகாரி உயர்திரு பெ. பார்சுவநாதன், பி.ஏ., அவர்கட்கும், நூலகர் உயர்திரு அ. பஞ்சநாதன், எம்.ஏ., பி.லிப்.சி., அவர்கட்கும், ஏனைய அன்பர்கட்கும் என் உளமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்கிறேன்.

அன்பன்,

தஞ்சாவூர்,<br>
5—11—81.

டாக்டர் அ. மா. பரிமணம்,<br>
எம்.ஏ., எம்.லிட். பிஎச்.டி.,<br>
தமிழ்ப்பேராசிரியர்.

# வேண்டுகோள்



கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் எம்மிடம் அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

எம்மிடம் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, எமது சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாக வருமாயின், சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் 5 பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளை, எமது மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

*தஞ்சாவூர்,*
*9—11—81.*

**ச. மெய்கண்ட தேவன்,** I. A. S.,
*மாவட்ட ஆட்சியர் & தலைவர்,*
*நிர்வாகக் குழு, சரசுவதி மகால் நூலகம்.*

# AN APPEAL

Manuscripts on Palm Leaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation, and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our National Culture but also of the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T. M. S. S. M. Library, Thanjavur.

The manuscripts so presented will be accepted and acknowleged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them, will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar-King of Tanjore, Rajah Serfoji, has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world-famous 'Sarasvati Mahal Library'. It is open to you to share the honour of Serfoji, in your own measure, by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it, will you hasten to take it up?. The Library waits for your answer.

Administrative Officer,
T.M.S.S.M. Library.

# ஸ்ரீ இராமர் அம்மானை

## ஆய்வுரை

### பண்பாட்டுப் பேராறுகள்

பாரதப் பெருநாட்டின் எல்லைகளாக இமயமும் குமரியும் விளங்குவதுபோல, அப்பெருநாட்டின் பண்பாட்டு மாட்சியினை உணர்த்தும் வாயில்களாக இராமாயணமும் பாரதமும் திகழ்கின்றன. ஞானத்தையும் பரமோனத்தையும் அடித்தளமாகக் கொண்டு இருடிகளாலும், தவமுனிவர்களாலும் உருவாக்கப்பெற்றுத் தழைத்து நிற்கும் பாரதப் பண்பாடு இராமாயணம் மாபாரதம் என்னும் இரு பேராறுகளாகப் பெருகிப் பரந்து இந்நாட்டு மண்ணையும் மக்களையும் செழிப்புறச்செய்து வருகின்றது.

### இராமாயணம்

'பிறனில் விழைவோர் கிளையொடும் கெடுப' என்னும் மாபெரும் உண்மையினைத் தன் பாவிகமாகக் கொண்டொளிரும் இராமாயண வரலாறு இந்நாட்டில் தோன்றிய எல்லாச் சமயங்களாலும் போற்றிக் கொள்ளப்பெற்ற சிறப்புடையது. புத்த சமண சமய வரலாற்றுக் கதைகளில் இராமாயணச் சார்புடையனவும் உள்ளன. இதனால் காலங்களும் கருத்துக்களும் மாறினாலும் தான் மாறாது நின்று, இந்நாட்டு மக்களை நெறிப்படுத்தும் சாதனமாக இராமாயணம் திகழ்ந்து வந்துள்ளது.

மொழியாலும் சமயத்தாலும் வேறுபட்டு நிற்கும் இந்நாட்டு மக்கள் அனைவரிடமும் பாவும் ஊடும் போலப் பரவி நின்று அவர்களைப் பண்பாட்டினால் ஒரு நாட்டவராக ஓரினத்தவராக இணைக்கும் சிறப்பு இப்பேரிதிகாசத்திற்கு

உண்டு. இந்நாட்டுப் பண்பாடு பரவியுள்ள பிறநாடுகளிலும் இந்நூலின் செல்வாக்கினைக் காணமுடிகிறது.

இந்தியப் பெருநாட்டின் எல்லாப் பகுதியிலும் வாழ்ந்த பெருமக்கள் இராமாயண நிகழ்ச்சிகளில் ஈடுபட்டுத் தாங்கள் வாழும் இடங்களொடு அந்நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்திப் பெயரிட்டுப் போற்றுவராயினர்.

காலப்போக்கில், இராமனும் சீதையும் ஒரு சமயத் தெய்வங்களாக அமைந்தபோதிலும், இராமாயணப் பண்பாடு அனைவராலும் ஏற்கப்பட்ட நிலையில், ஊர்கள்தோறும் அவர்கட்குத் திருக்கோயில்களும், விழாக்களும் எடுக்கப் பெற்றுப் போற்றப்பட்டனர்.

## இந்தியக் கலைக்கருவூலம்

இராமகாதை வான்மீகியால் ஆதிகாவியமாக—இராமாயணமாக அமரத்துவம் பெற்றபின்னர், இந்திய மொழிக் கவிஞர் பலரும் தத்தம் மொழிகளில் இராமாயணத்தைக் காவியமாக—நாடகமாக—இசைப்பாட்டாக அமைத்துப் போற்றினர். சிற்பிகள் கல்லிலும், செம்பிலும், பொன்னிலும், மணியிலும் அதன் பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் உருவாக்கினர். ஓவியர்கள் அவற்றை எண்ண இனிக்கும் வண்ண ஓவியங்களாக வரையலாயினர். இசைக்கலைஞர்கள் இராமகாதையின் ஏற்றத்தினை இன்னியத்தோடு இசைத்துப் போற்றினர். நாட்டியமும், கூத்தும், நாவலர்களின் பேச்சும் இராமாயணச் சிறப்பினை இந்நாட்டுப்பட்டி தொட்டிகள் எல்லாவற்றிலும் வாழும் எண்ணற்ற பாமர பண்டித உள்ளங்களைப் பக்தியால், இன்ப அன்பினால் நிறைவிக்கும் பணியைச் செய்தன.

## தமிழகத்தில் இராமாயணம்

சங்ககாலத் தமிழ் மக்களிடையேயும் இராமாயணச் செல்வாக்கு இடம் பெற்றுள்ளது. வான்மீகி இராமாயணம்

தோன்றுதற்கு முன்னரே, இந்திய நாட்டில் இராமகாதை மக்களுக்குத் தெரிந்த ஒன்றாக இருந்தென்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அடிப்படை மாற்றமின்றிப் பாத்திரங்களிலும் நிகழ்ச்சிகளிலும் மட்டும் மாற்றம்கொண்டு இராமாயணம் அறியப்பட்டிருந்தது. சங்க நூல்களாகிய புறநானூற்றிலும் அகநானூற்றிலும், இரண்டு இராமாயணச் செய்திகள் உவமைகளாக இடம் பெற்றுள்ளன.

இராவணன் தன்னைக் கவர்ந்துகொண்டு வானிற் சென்றபோது தன் அணிகலன்களை, ஆடைப் பகுதியில் பொதிந்து சீதை தரையிற் போட்டதாகவும், அம்முடிப்பு கிட்கிந்தையில் விழுந்ததாகவும் அங்கிருந்த குரங்குகள் அதனை எடுத்துப் பிரித்து அணிகளை முறைப்படி அணிந்து கொள்ளத்தெரியாமல், விரலில் அணிவதனைக் காதிலும், காதில் அணிவதனை விரலிலும் இவ்வாறாக மாற்றி அணிந்தனவாகவும் அமைந்த செய்தி உவமையாகப் புறநானூற்றில்,

“ கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தாங்கு ”
புறம் 70—18, 21

என்று இடம் பெற்றுள்ளது. சீதையை மீட்கும் எண்ணத்தொடு இலங்கைச் செலவு மேற்கொண்ட இராமன், பாண்டியர்க்குரிய நாட்டின் கடற்கரைப் பகுதியில் (இப்போதைய இராமேசுவரப்பகுதி) குரங்குப் படையொடு ஓரால மரத்தடியில் தங்கியதாகவும், தான் மேற்கொண்ட அரசியற் சூழ்வுக்கு இடையூறாக அம்மரத்திலிருந்து ஒலி செய்த பறவைகளின் ஒலியை இராமன் அடக்கியதாகவும் ஒருசெய்தி,

“ வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை

வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம்போல "              (அகம் 70—13, 16)

என்று உவமையாகவே இடம் பெற்றுள்ளது. இவ்விரு செய்திகளும் உவமையாக அமைந்திருப்பதுகொண்டு, இராமகதை அக்காலத்தமிழ் மக்களுக்கு நன்கு அறிமுகமாகி விளங்கிய பாங்கினை உணரமுடிகின்றது. இருவேறு சங்கப் புலவர்களாற் சுட்டப்பட்ட இவ்விரு செய்திகளும், பின்னர் தமிழில் பதினாயிரம் பாடல்களளவில் பாடப்பெற்ற கம்ப ராமாயணத்தில் இடம் பெறவில்லை.

**சிலம்பில் இராமாயணம்**

நிகழ்ச்சிகளில் சில வேறுபாடுகளோடு அறியப்பெற்றிருந்த இராம காதையின் நாயகனை இராமன் தமிழ் மக்களால் தெய்வமாக மதிக்கப்பெற்ற பாங்கினை,

" தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துய ருழந்தோன்
வேதமுதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந்திலையோ நெடுமொழி யன்றோ "
என்றும்,                              (சிலம்பு 14—46, 49)

" ... ... ... தம்பியொடு கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கைக்
                                        கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே "

என்றும் வரும் சிலப்பதிகாரப் பகுதிகள் உணர்த்துகின்றன.

**கம்பராமன்**

தமிழகத்தில் பக்தி இலக்கிய முன்னோடிகளாகத் திகழ்ந்த ஆழ்வார்களின் பாசுரத் தொண்டிற்குப் பின்னர், இராமகாதை தெய்வமாக்கதையாகவும், இராமன் பரம்

பொருள் அவதாரமாகவும் போற்றிப் பரவும்நிலை பெருகி வளர்ந்தது. இராமாயணத்தைத் தமிழில் கம்பர், 'இராமாவதாரப் பேர்த்தொடை நிரம்பிய தோமறு மாக்கதை'யாகப் படைத்தளித்தார். 'இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்ற இராம கோட்பாடு, ஒருவனுக்கு ஒருத்தி என்னும் தமிழ்ப் பண்பாட்டில் ஊறிய கம்பருக்கு மிகவும் உகந்ததாக அமைந்தது. அதனால் இராமகாதை, தோமறுமாக் கதையாகவும், இராமன்சீர் காசில் கொற்றமாகவும் ஆகியது. கம்பராமாயணத்தைத் தொடர்ந்து, தமிழ்க்கவிஞர்கள் இராமன் புகழைத் தனிக் காவியமாகவும், சிறுபிரபந்தமாகவும் பாடலாயினர். இராம நாடகக் கீர்த்தனை என்ற பெயரில், நாடகப் பாங்கமைந்த இசைத்தமிழிலும் இராமகாதை இடம் பெற்றது.

புலமக்களேயன்றிப் பொதுமக்களும் அறிந்தின்புறுமாறு இராமசரிதம் எளிய நாட்டுப் பாடல் இலக்கிய வகையிலும் உருவாகியது. கும்மியாகவும், தாலாட்டாகவும், ஏற்றப் பாட்டாகவும் இன்னபிற பாமரர் இலக்கியமாகவும் அது வடிவம் பெற்றது. இவ்வகையில், பிற்காலத்தில் எளிய மக்களின் செவிவழிச்சென்று சிந்தையைக் கவர்ந்து இடங் கொண்ட நாட்டுப்பாடல் இலக்கிய வகையான அம்மானை வடிவிலும் இராமாயணம் இடம் பெற்றது. (அம்மானை இலக்கிய வகையின் தோற்றம், வளர்ச்சி வரலாற்றினைச் சரசுவதி மகால் நூலக வெளியீடான வீரையன் அம்மானை போல்வனவற்றில் காண்க.)

## இராமர் அம்மானை

### நூலாசிரியர்

ஸ்ரீ இராமர் அம்மானை என்ற பெயரில் அம்மானை இலக்கிய வடிவில் ஒரு நூல் தோன்றி எழுதா இலக்கியமாக வழங்கிப் பின்னர் ஏட்டில் இடம்பெற்றுத் திகழ்கின்றது. நாட்டுப்பாடல் வகைசார்ந்த வாய்மொழி இலக்கியங்களின்

ஆசிரியர் பெயர் பொதுவாகத் தெரிவதில்லை. இராமர் அம்மானை ஆசிரியர் பெயரும் தெளிவாக அறியக்கூடவில்லை. எனினும் இந்நூலில் இடம் பெற்றுள்ள 'கச்சி நகரார்க்குக் கண்ணுனை புத்திரனுர், வரதன் சிறுவன் சொன்னுன் என்ற பகுதிகொண்டு, வரதன் என்பது இந்நூலாசிரியருடைய பெயராகக் கருத இடமுண்டு. ஆனுல், 'சொன்னுன்' என்ற சொல்லை, நோக்குங்கால், இவ்வாய்மொழி இலக்கியத்தினை வரதன் இயற்றினுன் என்று கொள்வதனைவிட, அதனை மக்கட்குப் பாடிச்சொன்னுன் என்று கொள்வது பொருத்த மாகத் தெரிகின்றது. தொடர்ந்து செவி வழியாகக் கேட் கப்பட்டுவந்த இந்த அம்மானை, ஏட்டில் எழுத்து வடிவம் பெற்றபோது இதனைச் சொன்னவன் வரதன் என்று கொள்ளுவது ஏற்புடையதாகத் தெரிகின்றது. 'கச்சி நகரார்க்குக் கண்ணுனை புத்திரனுர்' என்பதனுல், இவ்வரதன் காஞ்சிபுரம் என்னும் கச்சி நகரைச் சார்ந்தவன் என்பது புலனுகின்றது.

## நூலாசிரியர் ஊர்

இந்த அம்மானை நூல் காஞ்சிபுரத்திலுள்ள அத்திகிரி நாதர் என்னும் பெருமாள்மீது பாடப்பட்டது என்பதனை, இதன்கண் இடம்பெறும் "எத்திசையும் எண்ணும் இயல் பெரிய கச்சியிலே, அத்திகிரி நாதற்கு அம்மானை பாடுகி றேன்" எனவரும் தொடரால் அறியலாம். கவிஞர்கள் தாம் உகக்கும் இறைவன்மீது உலா, கலம்பகம் போன்ற இலக்கியங்கள் பாடுவதுபோல, எழுதா இலக்கியமான அம்மானை எழுத்துருவம் பெற்றநிலையில், காஞ்சிபுரத்தில் கோயில்கொண்டுள்ள அத்திகிரிநாதர்மேல் இவ்வம்மானை பாடப்பெற்றதாகலாம்.

## நூலாசிரியர் தமிழ்ப்பற்று

இவ்வம்மானையை உருவாக்கிய கவிஞர் யாவராயினும் அவர், நல்ல தமிழ்உணர்வு மிக்குடையவராகத் தோன்று கின்றுர். தசரதன் தன் பரிவாரங்கள் புடைசூழ மிதிலை

நகர் வருங்கால் அங்கு, 'தெள்ளுதமிழ் தெரிந்து செந்தமிழோர் பாடி' வந்தனர் என்று கூறுகின்றார். சீதையைத் தேடி இலங்கைசென்ற அனுமான் அசோகவனத்தில் அவரைக்கண்டபோது, அவர்க்குத் தன்வரவை உணர்த்தும் பாங்கில்,

" மின்னுமுகில் வேதியனார் வேதக் கவியனுமான்
பன்னுதமிழ் தெரிந்து பாடலுற்றா ரம்மானை "என்று

தமிழ்ப்பாட்டுப் பாடியதாகக் கூறியுள்ளார். தசரதனுடன் சென்ற சிலர் தமிழ்ப் பாட்டிசைத்தனர் என்றும், அனுமன் வடமொழி வல்லனாதலேயன்றித் தமிழும் அறிந்து தமிழ்ப் பாட்டிசைத்தான் என்றும் கூறுவதனால் இந்நூலாசிரியருடைய தமிழ்ப்பற்றினை உணரமுடிகின்றது.

## நூலாசிரியர் நன்றி

கன்னித் தமிழில் காகுத்தன் புகழ் பரவும் கம்பராமாயணம் தோன்றியபின்னர், அதன் பெருமை தமிழகத்தில் உள்ள ஏட்டுப் பள்ளிகளிலும், நாட்டுக் கூடங்களிலும் நன்கு போற்றப்பட்டது. கம்பராமாயணக் களஞ்சியத்திலிருந்து செய்திகளைப்பெற்று இவ்வம்மானையைப் பாடியதாக இதன் ஆசிரியர், 'தேசத்தில் பள்ளியிலும் கண்டுமிகக் களித்து அக்கம்பனிட தன் கதையில் மொண்டுகொண்டு சொல்லலுற்றேன்' என்று கூறுகின்றார். இதனைப்பாடியவர் இவ்வம்மானையின் இடையிடையே சில விருத்தங்களையும், வெண்பாக்களையும் பாடிச் சேர்த்துள்ளார். சிற்சிலவிடங்களில், அவ்விடங்கட்குப் பொருத்தமான கம்பராமாயணச் செய்யுட்களையும் இணைத்துள்ளார். இதனால் கதைப் போக்கில் மட்டுமேயன்றிக் கம்பனுடைய செய்யுட்களிலும் இவ்வாசிரியர் கொண்டிருந்த பற்றும், பாமர மக்கள்பால் கம்பர் பாடல்களுக்கிருந்த செல்வாக்கும் புலனாகின்றன. இவ்வாறு கம்பனுடைய கதைப்போக்கையும், கவிதைகளையும் அம்மானை ஆசிரியர் எடுத்தாண்டுள்ள உண்மையினை,

கம்பனிட தன்கதையில் மொண்டுகொண்டு சொல்லலுற்றேன்' என்றுகூறித் தம் முதனூலாசிரியன்பால் தமக்குள்ள ஈடுபாட்டினைப் புலப்படுத்தியுள்ளார்.

## நூற்றிரன்

கம்பன் தன் முதனூலாசிரியனிடமிருந்து வேறுபட்டுச் சில நிகழ்ச்சிகளை மாற்றியும், புதிதாகப் படைத்துக்கொண்டும் அமைத்தமை போலவே, அம்மானை ஆசிரியரும் சிற்சில மாற்றங்களை அம்மானையில் மேற்கொண்டுள்ளார். தமிழில் தனியே ஒரு நாட்டுப் பாடலிலக்கியமாக உள்ள மயில் ராவணன் கதையினைத்தம் இராமர் அம்மானையில் இணைத்துக்கொண்டுள்ளார்.

## தசாவதரமாட்சி

திருமாலின் அவதாரமான இராமனுடைய கதையினைப் பாட முற்பட்ட ஆசிரியர், தொடக்கத்தில் கடவுள் வாழ்த்துப் பகுதியினை அடுத்துத் திருமாலின் பல்வேறு அவதாரங்களின் பெருமையினையும் சுருக்கமாகச் சுட்டிப் போற்றியுள்ளார்.

'மச்சமாய் வளர்ந்தவர் காணம்மானை' என்று மச்சாவதாரமும்,

" தாமரை ஓராழித் தரணி வளருகைக்கு
ஆமையாய் வந்த அருளாளன் " —என்று

கூர்மாவதாரமும்,

" சீரடர்ந்த மெய்யார் சிவனுர் அடிதேடிப்
பாரிடந்து பார்க்கவந்த பன்றிகா ணம்மானை "

என்று வராகவதாரமும்,

" நாட்டிய தூணில் நரசிங்கங் காணம்மானை "—என்று நரசிங்காவதாரமும்,

" பூமருவு சோலை புடைசூ ழுலகறிய
மாவலியை வன்சிறையில் வைத்தவர் காணம்மானை'

என்று வாமனவதாரமும்,

" பரக்கும் புகழ்நாட்டில் பத்துத்தலை படைத்த
அரக்கர் குலத்தை அறுத்தவர்கா ணம்மானை "

என்று இராமாவதாரமும்,

" மெய்யா யசுரர்களை வேரறுத்து மேதினியில்
கையாயிரம் கலப்பை கண்டவர்கா ணம்மானை "

என்று பலராமாவதாரமும்,

" நொய்ய மனஞ்சேரும் நூற்றுவரை ஓடவிட்டு
அய்வர் சகாயம் அறிந்தவர்கா ணம்மானை "

என்று கிருட்டிணாவதாரமும்

" வன்னப் பசுங்குதிரை வாகனமும் வையகத்தே
இன்னம் பிறக்கும் இராமன்கா ணம்மானை "

என்று கற்கி அவதாரமும் சிறப்பித்துப் பேசப்படுகின்றன. பரசுராமனை வென்ற சிறப்பு இந்நூலில் இடம் பெறுவதால் முன்னர்த்தனியே அவ்வவதாரச் சிறப்பினைக்கூறாது விடுத்துள்ளார் போலும்!

கன்றால் விளவெறிந்தது, குன்றால் மழை காத்தது, பேய்ச்சி முலையுண்டது, உரலிற் கட்டுண்டது போன்ற பல கண்ணன் லீலைகள் அழகாகக் கூறப்பட்டுள்ளன. சிவனார் அடியினைத் திருமால் தேடியதாகச் சைவபுராணம் கூறும் செய்தியினை வராகவதார நிகழ்ச்சியாகக் கூறியுள்ளார்.

## நூலாசிரியர் சமயப்பொறை

அம்மானை ஆசிரியர் மிக்க திருமால் பக்தி கொண்டவராயினும் முருகன், சிவன் போன்ற தெய்வங்களை இகழாது ஏத்திப் போற்றும் இயல்புடையவராக உள்ளார்.

" நச்சரவில் பள்ளிகொள்ளும் நாரணன் மருகன்
பச்சை மயிலேறி வரும் பாலகன் "

என்று முருகனைப் போற்றுகின்றார். சிவபெருமானைக் குறிக்கும்போதும்

" செங்கை இளம்பிறையும் செருடக் கொடியரவும்
மங்கையும் மானும் மழுவுடனே வெள்ளெருக்கும்
வேங்கையும் வாரணமும் மெய்த்தோலும்
பூண்டுகொண்டு
அங்கையில் ஓடேந்தும் அரனே"

என்று அழகுபெற வருணிக்கின்றார்.

**கற்பனை**

பாமரர் இலக்கியமாக அமைந்திருந்தாலும் இவ்விராமர் அம்மானை உயர்ந்த கவிதைக்குரிய உணர்ச்சி கற்பனை முதலிய பண்புகள் பலவும்பெற்று விளங்குகின்றன. 'கால் வண்ணம் அங்குக் கண்டேன்' எனக் கம்பர் போற்றிய அகலிகை சாப நீக்க நிகழ்ச்சியை நினைவிற்கொண்டு,

" கல்லைப் பெண்ணாக்கி விட்ட காலை இருகைதொழுது
அல்ல பிறப்பறவே அம்மானை பாடுகின்றேன் "

என்று வணங்கும்போது, அம்மானைக் கவிஞர்தம் இராமாவதார ஈடுபாடு நன்கு புலப்படுகின்றது. இந்த நிகழ்ச்சியை மறவாமல் பின்னர், கங்கையில் குகனுடைய ஓடத்தில் இராமர் கால்வைத்து ஏறும்போது,

" அன்றுகல்லைப் பெண்ணாக யாகசாலை சென்றுற்றான்
இன்று மரஓடமிது என்னாகப் போகுதென்று "
குகன் நினைத்ததாகக் கூறியிருப்பது அரிய கற்பனையாகும்.

தன் அண்ணனைத்துறந்து, அண்ணல் இராகவனிடம் சரண் புகுந்த வீடணனுக்கு இலங்கை அரசினைத் தருவதாக இராமன் உறுதியளித்தார். அதுகண்ட இலக்குவன் தமையனிடம், இராவணனும் பணிந்துவந்து சரணடைந்தால்

அவனுக்கு என்னகொடுப்போம் என்று கேட்க, 'அயோத்தி அரசில் நாலிலொரு பாகத்தினை நாம் கொடுப்போம் என்ற கருத்தில்,

" மன்றலந்த சிரமுடியான் வந்துகண்டால்
என்கொடுப்போம்
நன்றாய் அயோத்தியிலே நாலிலொன்று
நாம்கொடுப்போம் "

என்று உரைத்ததாகப் பாடியிருப்பது ஆசிரியர்தம் திறத்தினைக் காட்டுவதாக உள்ளது. இதனால் அயோத்தி அரசு நால்வர்க்கும் உரியது என்று இராமன் கருதியிருந்ததாகக் காட்டி, அவனுடைய பகைவர்க்கருளும் பண்பையும், தியாக சீலத்தையும் புலப்படுத்துகின்றார்.

## சந்த இனிமை

சுவைக்கேற்ற சந்தங்களை அமைத்துக் கவிதையை அழகுறச்செய்வது காப்பியக் கவிஞர் இயல்பு. அம்மானை ஆசிரியரும் அவ்வாறே இடத்திற்கேற்ற சந்தத்தினை விருத்தத்தில் அமைத்துப் பாடியுள்ளார். இராவணனும் அனுமனும் போர்செய்யும் காட்சியினை,

" வெடித்தெழு சினத்தெழு மிகுத்தவ னரக்கன்
கடித்தெழு கரத்தினை மிகுத்தவ னடித்தான்
அடித்தகை பிடித்தென அதற்கென முனிந்தேன்
முடித்தலைகள் பத்தினும் முகத்தினு மறைந்தான்"

என்று வல்லோசை மிக்க சந்த விருத்தத்தில் அமைத்துள்ளார்.

## சொற்சுவை

சூர்ப்பணகையின் சொல்லால் வெறிகொண்ட இராவணன், சீதையைக் கவர நினைத்து மாரீசனை அனுப்புகின்றான். அவன் செல்லவும் விரும்பாது, செல்லாதிருக்கவும் இயலாது துன்புற்ற நிலையினைக் கவிஞர்,

"மானுருவாய்ச் சென்றால் மாயனெனைக்
கொல்லுவன்காண்
நாளுமினி அல்லவென்றால் நீயுமெனைக்
கொல்லுவைகாண்'

என்று இராவணனிடம் கூறுவதன் வாயிலாகக் காட்டுகின்றார். இறுதியில் செல்கின்ற மாரீசன் அங்குள்ள மேகநாதன் கும்பகன்னன் போன்றாரிடம்,

"ஏற்கனவே சென்று இயமனிட கோயில்இடம்
பார்க்கவே போறேன் பதறாமல் வாருமென்றார்'

என்று கூறுகின்றான். அவர்கட்கெல்லாம் அடுத்து நிற்பது அழிவே என்பதனைப் 'பதறாமல் வாரும்' என்ற தொடரால் சுட்டுகின்றான்.

பெண்களின் கண்களை வருணிக்கும் கவிஞர்கள் காதளவோடிய கண் என்று கூறுவது மரபு. சீதைப் பிராட்டியைக் 'கொப்பொடியத் தாண்டிக் குழையைப் பொரும் விழியாள் என்று கூறுகின்றபோது ஆசிரியருடைய கற்பனை மரபுவழிச் சென்று உயர்ந்து நிற்கின்றது.

பெண்டிர்தம் சொற்களைக் கேட்டுநடத்தல் தீயது என்பது பிற்காலத்தில் இடம்பெற்ற கருத்தாகும். அக்கருத்தினை ஏற்றுக் கவிதை அமைத்து, அதன் வாயிலாகத் துயருற்ற இராமனுடைய மனநிலையினை நன்கு புலப்படுத்துகின்றார்.

இராவணன் வஞ்சக வடிவுடன் வந்து சீதையைக் கவர்ந்து சென்றபின் அங்குவந்த இராமர் துயருற்றுத் தம்பியிடம் வருந்தியுரைக்கின்றார். நம்தந்தை சிற்றன்னையின் சொற்கேட்டு வானகம் அடைந்தார். மனைவியின் சொற்கேட்டு நானும் மானின் பின்னர்ப் போந்தேன். அண்ணியின் சொற்கேட்டு நீயும் காத்தலைக் கைவிட்டாய். நம் குடிக்குப் பெண் சொற்கேட்டலால் தீங்குவருவது விதியின்பயனே என்னும் கருத்தில்,

" பெண்சொற் கேட்டு நம்மையா
பெரிய வான மதுஅடைந்தார்
பெண்சொற் கேட்டு நானுமிந்தப்
பெரிய மானின் பின்வந்தேன்
பெண்சொற் கேட்டு நீயுமிந்தப்
பெண்ணுதல் தன்னைக் கைவிட்டாய்
பெண் சொற்கேட்க நம்குடிக்குப்
பெரிய விதியின் பயனென்றார் ".

என்று பாடுகின்றார். பெண் சொற்கேட்டல் பிழை என்ற கருத்து ஏற்கத்தக்கதன்றாயினும் அதுகொண்டு, இராமனுடைய மனத்துயரின் ஆழம் தெரியுமாறு செய்திருப்பது கவிஞரின் சிறப்பினைக் காட்டுகின்றது-

சிலேடை

பாமரர் பாடல்வகை எனத்தகும் இவ்வம்மானை, தன்பால் கொண்டிருக்கும் அணிச்சிறப்பினாலும் இலக்கிய நயம் மிக்கு விளங்குகின்றது.

" இரா வணற் காகிநின்ற
எரிசுடர் தன்னைக் கவ்வி
இரா வணங்கில்லில் வைத்து
இறந்ததோ ரெலியே போல
இரா வணக் குழலினாளை
இருஞ்சிறை தன்னில் வைத்து
இரா வணங் கருதினாயே
என்செய்தாய் இலங்கை வேந்தே "

என்னுமிப்பாடல் தூதுசென்ற அங்கதன் இராவணனிடம் கூறிய கூற்றாக அமைந்தது. இராவணனுடைய அரண்மனையிலுள்ள தீபச்சுடரை ஓரெலி இழுத்துச்சென்று இருண்ட கூரை வீட்டில் வைக்க அதனால் வீடு பற்றிய தீயில் அந்த எலியும் அழிந்ததுபோலக் கற்பின் கனலியாகிய சீதையைச் சிறையில் வைத்து, நீ அழிவுறும் வழியினைத் தேடிக்கொண்டாயே என்றுஅங்கதன் இராவணனை இடித்துரைக்கின்றான்.

இச்செய்யுள் அடிதோறும் முதற்கண் அமைந்துள்ள சீரினை, இராவணன்+கு என்றும், இரா+அணங்கு என்றும், இரா +வ(ண்)ணம் [இருள் நிறம்] என்றும், இரா+வண்ணம் (இல்லாதவாறு) என்றும் பிரித்துப் பொருள் காணுமாறு சிலேடை நயமிக அமைந்திருப்பது சிறப்பாக உள்ளது.

**உவமை**

வெண்மையாக நரைத்துள்ள முடியினை, 'இலந்தைக் கனிப்புழுப்போல் நரைத்த தலையும்' என்று எளிய சொற் கொண்டு அமைத்துள்ள உவமை நடையில், 'மீனுண் கொக்கின் தூவியன்ன வால்நரைக் கூந்தல்' என்னும் சங்கத் தொடரின் சால்பு நலத்தினை உணரமுடிகின்றது.

இவ்வாறு ஏட்டில் இடம் பிடித்துக்கொண்ட வாய் மொழி இலக்கியமான 'ஸ்ரீ இராமர் அம்மானை', பிற்காலச் சிற்றிலக்கிய வகைகளிற் காணுமாறு சொற்பொருள் நயங் கள் எளிமையொடு இணைந்து விளங்குகின்றது.

சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள இராமர் அம்மா னைச் சுவடிகள் மூன்றில் இரண்டு படிக்கமுடியாதபடி சிதில முற்றிருந்தமையால் பிரதி செய்யப்பெற்ற ஒரே சுவடியின் துணைக்கொண்டு இந்நூல் வெளியிடப்பெற்றது. அச்சுவடி யும் சிற்சில விடங்களில் ஒடிந்துவிட்ட ஏட்டினைக் கொண்டு இருப்பதால், ஓடிந்த பகுதியிலுள்ள உண்மை வடிவினைக் காண்பது அரிதாக உள்ளது. அதனால் அப்பகுதிகள் விடப் பெற்றுப் புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. வாய் மொழியாகத் தோன்றி ஏட்டில் இடம்கொண்ட இவ் விராமர் அம்மானை, அச்சுவாகனம் ஏறுவதன் வாயிலாக இராமகாதை பற்றி எழுந்த தமிழிலக்கிய வரிசையில் சிறப்பான ஓரிடத்தினைப்பெற்றுச் சிறக்கும் என்பதில் ஐயம் இல்லை.



உ

# ஸ்ரீ ராம ரம்மானை

"நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
விடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலைஇ ராமன் தோள்வலி கூறுவோர்க்கே."

இராமசெயம்

## கடவுள் வாழ்த்து

அம்மானை அம்மானை ஆடியசீர் அம்மானை
ஆரையினிப் பாடி ஆடுவோம் அம்மானை
சீரார்பனி மதியும் செங்கதிரோ னுள்ளளவும்
வாரீ ருலகமதில் மழைபொழியு மண்ணிலுள்ளோர்
ஆராரும் வாழவென்று அம்மானை பாடுகிறேன்

அரிய தமிழ்தெரிந்து அம்மானை பாடுகிறேன்
கரிய முகமுடைய கற்பகமே[1] முன்னடவாய்
எண்டிசையு மெண்ணுர் இயல்பெரிய கச்சியிலே
வண்டமிழோர் சீர்பாதம் வாழ்த்தி மனமகிழ்ந்து
கண்டு தொழுது கயிலைமலைக் காவலனார்

அண்ட மளந்தார்க்கு[2] அம்மானை பாடுகிறேன்.
எத்திசையு மெண்ணும் இயல்பெரிய கச்சியிலே
அத்திகிரி நாதற்கு அம்மானை பாடுகிறேன்,
கல்லைப்பெண் ணாக்கிவிட்ட காலை[3]யிரு கைதொழுது
அல்ல பிறப்பறவே அம்மானை பாடுகிறேன்.

1 விநாயகர் 2 திருமால் 3 அகலிகை சாப வரலாறு சுட்டியது.

நச்சரவில் பள்ளிகொள்ளும் நாரணன் மருகன்
பச்சைமயி லேறிவரும் பாலகனே[1] முன்னடவாய்.
அப்பிலே கண்வளர்ந்தார்க்[2] கம்மானை பாடுகிறேன்
தப்பாமல் வந்தெனக்குச் சரசுவதி முன்னடவாய்.

## திருமால் பெருமை

நீட்டு புகழ்நாட்டில் செம்பொன் மணி யழுத்தி
நாட்டிய தூணில் நரசிங்கம்[3] காணம்மானை.
கன்றால் விளவெறிந்து காலியின்பி ன்னே திரிந்து[4]
அன்று விலையில் அமர்ந்தவர்கா ணம்மானை
மன்றுரும் சீர் துளசி மாலையணி மார்பன்
குன்றால் மழைகாத்த கோவிந்தன்[5]கா ணம்மானை.

காய்ச்சியபால் நெய்தேடிக் கன்னைப் பிசைந்தமுது
பேய்ச்சிமுலை யுண்ட பெருமாள் காணம்மானை.
பிள்ளையும் கண்ணும் கொடுக்கும் பெருமாள்காண்
அன்றிடைச்சி கையில் அணைகயிறு தன்னாலே
கன்றவடி பட்டுரலில் கட்டுண்டான்[6] காண் அம்மானை

[7]புழுகாருஞ் சீர் துளசி பூந்தா மரைமணக்கும்
அழகிய கோனேரி யப்பன்கா ணம்மானை.
ஆடுமயி லேறி[8] தனக் கம்மான்கா ணம்மானை.
நடுக்கந் தவிர்த்தருளும் நாராயணன் காணம்மானை
நாராயணன் பெரிய நாலுமறை தனக்கும்

பேரால் பெரிய பெருமாள்கா ணம்மானை
நொய்ய மனஞ்சேரு நூற்றுவரை ஓடவிட்டு
அய்வர் சகாயம் அறிந்தவர் காணம்மானை[9]
பூமருவுஞ் சோலை புடைசூ ழுலகறிய
மாபலியை வன்சிறையில் வைத்தவர் [10]கா ணம்மானை

---

1 முருகப்பெருமான் 2 பாற்கடலிற் பள்ளிகொண்டவர்
3 நரசிங்காவதார வரலாறு சுட்டியது 5, 6 கிருஷ்ணவதார நிகழ்ச்சிகள் கூறியது 6 கட்டுண்டவன் 7 புனுகுமணம்
8 முருகன் 9 பாரத நிகழ்ச்சி 10 வாமனவதார நிகழ்ச்சி

பரக்கும் புகழ்நாட்டில் பத்துத் தலைபடைத்த
அரக்கர் குலத்தை அறுத்தவர்[1] காணம்மானை.
தாமரை யோராழித் தரணி வளருங்கைக்கு
ஆமையாய் வந்த அருளாளன் [2]காணம்மானை.
சீரடர்ந்த மெய்யார் சிவனா ரடிதேடிப்

பாரிடந்து பார்க்கவந்த பன்றிகா ணம்மானை
பச்சைமுகில் மேனியனார் பாதமிகச் சிவந்து
நச்சரவின் உச்சி நடித்தவர்கா ணம்மானை
ஆறணிந்த செஞ்சடையார்[3] அன்று புரமெரிக்க
ஏறுமென்று வந்த இடபங்கா ணம்மானை.

இலக்காய் அரக்கரைத்தான் இராம சரந்தொடுக்கச்
சிலைக்கை யுடையசீ ராமர்கா ணம்மானை
பாரெங்கும் மீளவந்த பாம்பணையிற் பள்ளிகொள்ளும்
சீரங்க ராய சீராமர் காணம்மானை
அச்சந் தவிர்த்தவர்காண் அன்றோர் வயித்தில்

மச்சமாய் நீரில் வளர்ந்தவர்கா ணம்மானை
மெய்யா யசுரர்களை வேரறுத்து மேதினியில்
கையாயிரங் கலப்பை கண்டவர்கா ணம்மானை
பொய்யாத நெஞ்சில் புகழ்பெரிய புண்ணியன்காண்
மெய்வந்தார் நெஞ்சில் விளக்கொளி காணம்மானை.

பைகொண்ட நாகம் படுத்துறங்கப் பள்ளிகொள்ளும்
வைகுண்டம் வாழவந்த மாயவன்கா ணம்மானை.
வன்னப் பசுங்குதிரை வாகனமூர் வையகத்தே
இன்னம் பிறக்கும் [4]இராமன்கா ணம்மானை
அத்திகிரி நாதர்க்கு அம்மானை பாடுகிறேன்

நூலாசிரியன்

கச்சி நகரார்க்குச் கண்ணன புத்திரனார்
வரதன்சிறுவன் சொன்னான் அவர்வாணாள் அவனியிலே
சீருமிகப் பொழியும் தேசத்தில் பள்ளியிலும்

---

1 இராமாயண நிகழ்ச்சி 2 கூர்மாவதாரச் சிறப்பு
3 கங்கைசூடிய சிவபெருமான் 4 கற்கி அவதாரம்

கண்டுமிகக் களித்தக் கம்பனிட தன்கதையில்
மொண்டு கொண்டு சொல்ல லுற்றேன்.

நண்பட்டு வருகின்ற நற்றமிழோர் தன்பாதம்
பண்புடனே போற்றிநன்றாய்ப் பழையமறை வேதியனுர்
வண்கடுவை யுண்டோன் மகனைத்[1] தினம் போற்றும்
தென்கடுவை வாழும் தீயருளும் நச்சவுணன்
பூவலருங் கொடியீந்தான் புண்டரிகப் பொய்கையிலே

நாவலரைப் போலே நானுரைத்த புன்சொல்தனை

**நூற்பயன்**

கேளும் பெரியோர்கள் கிள்ளை மொழியதனை
ஆளு மிராச்சியமும் அன்புடனே யுண்டாவீர்
நீளும் புவியதனில் நீலவண்ணன் தன்கதையை
நாளுந் தினங்கேட்பீர் நன்றாக வாழ்ந்திருப்பீர்.

பேயின் முலையுண்ட பெருமாள் மகன்
வாயுபக வான்தனக்கு மண்சுமந்த சேடனுக்கு
சண்டை வந்து மீளுனக்கு... ... ... ...
கொண்டுவந்து கானவர்கள் கூலியங்கே தானெறிய
காடுமுடி தன்னிலவன் கோட்டையங்கே தானுமிட்டு

நெடுமுடி ராவணனுர் நீலவண்ணன் தன்னருளால்
திக்குவிசயங்கள் பண்ணித் தெய்வமுனி வர்கள்தொழ
... ... ...வேலைசெய்து மெத்தகலித்து நொந்து
... ... ...தேவர்களும் முப்பத்து முக்கோடி
புனிதனும் நான்முகனும் போற்றும் புரந்தனும்

பாற்கடலில் பள்ளிகொண்ட பச்சைமுகில் வண்ணன்
ஆர்க்குமிது எங்கட்கு அய்யா முடியாது
ஆராமம் [2]சூழும் அயோத்திப் பதிதனக்குச்
சீராக வாழும்சீ ராமர்கா ணம்மானை.
பத்தியும் அன்பும் பலபாக்கிய முண்டாக்கி

---

1 முருகன்  2 சோலை

புத்திரனை (அன்றியிலே) போற்றிமிக மகிழ்ந்து
வெற்றித் திசதரனும்[1] விசுவாமுனி முன்சென்று
பத்தியுடன் கச்சியிலே பாதமலர் பணிந்து
சோத்தம்பல செய்தேனே கொடும்பாவம் செய்தேனோ
என்னவினை செய்தேன் யாக முனிக்கரசே

... .. ...யன்றியிலே யிருப்பேனோ
... ... ...தப்பாமல் நீதா(ன்) தாடகையைக் கொல்லு
இப்போதே யாகம் வளர்க்கிறேன் அஞ்சாதே!
புவனூர் பதிக்கரசே போர்வேந்தே யும்முடைய
மகனைத் துணையாக வரவிட நீ வல்லாயே

பிள்ளைஎனக் குண்டாகில் பிட்டுக்கு மண்சுமந்த
வள்ளல்[2] திருவாணை வரவிடுறேன் தப்பாமல்
அழகு புயத்தரசே அஞ்சாதேயுன் சரத்தால்
எழுபது யானைபட எய்யவல்லி ராமன்
நிச்சயமாக இராச்சியத்தை யாளுகைக்கு

நாராயணன் பெரிய நாலுமறை தனக்குப்
பேரால் பெரிய பெருமாள்கா ணம்மானை
புத்திரனு முண்டாகப் போகுதென்று ரம்மானை

## தசரதன் வேட்டைக்குச் செல்லலும் சாபம் பெறலும்

கோட்டித்த[3] வில்லும் கொடுங்கணையுந் தானெடுத்துச்
சேனையணி காட்டில் சென்றார் திசதரனும்

ஆனைபடவே யதரா அறுபத்தொன்பது விழவே
துன்றுமலர்ச் சுனையில் தும்பிவரும் வழிக்கே
ஒன்றுக் கொளிவைத்து ஒளித்திருந்தா ரம்மானை.
மத்தம் பூங்காட்டில் மாமுனிவன் சொற்கேட்டுப்
புத்திரன் கையிலே கமண்டலத்தைக் கொண்டுசென்று

தண்ணீர் முகந்தெடுக்கத் தந்திவந்ததென்று சொல்லி
எண்ணித் திசதரனும் எய்துவிட்டார் பட்டுவிழ
அந்தச் சுருதி[4]மகன் அய்யோவென அழுதான்

---

1 தசரதன் 2 மதுரைச் சொக்கநாதர் 3 வளைந்த
4 முனிவர் பெயர்

இந்தத் திசதரனும் ஏங்கிமுகம் வாடிநின்று
வார்த்தை யறியாமல் மயக்கம் வருகையிலே

பார்த்துத் தெளிந்துமிகப் பாலகனு மென்சொலுவான்
என்னை யறியாமல் எய்துவிட்டாய் ராசாவே
மன்னுஇத் தண்ணீரை மாதாவுக் கீயுமென்றார்
தண்ணீர் சொரியக் கமண்டலத்தைக் கொண்டுசென்று
பாயு மருவிப் பழஞ்சுனையி லுட்புகுந்து

தண்ணீர் கொடுக்கமுனி தான்மதிப்பானே யென்றார்
வேற்றுக் குரலா யிருந்துதென்றார் வேதமுனி
போனதிசதரனும் போதகத்தை நாட்டிவைத்துக்
கூரம்புநான் தொடுத்துக் குஞ்சரமென் றெய்துவிட்டேன்
பாரம்பு தைத்துருவிப் பட்டுவிட்டார் பாலகனார்

பத்தியுள்ள பாலகனார் பட்டுவிட்டா ரெனக்கேட்டுப்
புத்தி கலங்கிப் பொறிகலங்கி மாமுனியும்
எத்துயரங் கொண்டுநீ யென்மகனை யெய்தாய்
புத்திர சோபத்தால்[1] போவா யெனமொழிந்தார்
மூவர்களும் எண்ணரிய முப்பத்து முக்கோடித்

தேவர்களும் சூரியருந் தேவேந் திரனும்
செங்கை யிளம்பிறையும் செருடக் கொடியரவும்
மங்கையும் மானும் மழுவுடனே வெள்ளெருக்கும்
வேங்கையும் வாரணமும் மெய்த்தோலும் பூண்டுகொண்டு
அங்கையி லோடேந்தும் அரனே அபயமென்றார்.

மாயவற்குச் சொல்லுமென்றார் மாடேறும் ஈசுரனார்
போயவற்குச் சொல்லிப் போகவிட்டா ரம்மானை.
பைகொண் டரவம் படுத்துறங்கப் பள்ளி கொள்ளும்
வைகுண்ட நாதர்முன்னே வந்தபய மிட்டார்கள்
புரக்கும் புகழானே புவலோக மித்தனைக்கு

கருவத் திரத்தா லாற்ற முடியாது
பேசற்கரிய பச்சை திருத்துழாய் மாலையுடன்
பாற்கடலிற் பள்ளிகொள்ளும் பங்கையர்கா ணம்மானை

1 சோகம்

செஞ்சொற் பெருமாள் திருக்கதை யமைத்தருளி
அஞ்சா தென்று அவரை அழைத்துவிட்டு

அன்று வருவோம் அரக்கர் தலையறுக்க
நிங்கள் குரங்குமுசு கரடியாகப் பிறவுங்கோள்
ஆங்கே அவரை அனுப்பிவிட்டா ரம்மானை
அன்று பெருமாள் அனந்தர் தமையழைத்துச்
சென்று திசதரற்குத் தெரிசனத்தில் செப்புமென்றார்.

அப்போ பெருமாள் அயோத்திக் கெழுந்தருளி
இப்போ திசதரனே இயாகம் நடத்துமென்றார்.
தப்பாம லுந்தனக்குச் சந்ததி யுண்டாகுதென்றார்.

## தசரதன் மகப்பேற்று வேள்வி செய்தல்

கோட்டித்த மண்ணுழுது குங்குமத் தாலேபரப்பி
நாட்டில் திசைதோறும் நல்லமுத்து மாணிக்கமும்

பூட்டித் திசதரனார் புத்திரயா கம்வளர்த்தார்.
நற்கனகக் குண்டத்தில் நல்லதொரு வேதியனார்
தெற்பத் துளிருடனே சீராக நாலுபிண்டம்
பொற்கலத்திற் கொண்டு புறப்பட்டா ரம்மானை.
கண்டு திசதரனும் கண்களிக்கத் தெண்டனிட்டுப்

பிண்டந் தனைவாங்கித் தேவிமார் கைக்கொடுத்தார்.

## இராமன் பிறப்பு

கந்தக் குழலாள் கவுசலையாள் மிழுங்க[1]
முத்துத் தரளம் முழுதுநல்ல பாக்கியமும்
பெத்த பெருமாள் பிறந்தனர்கா ணம்மானை
ஆயிரம் ஆதித்தர் ஒளிபோல் அழகுடைய

மாயவனார் வந்து பிறந்தனர்கா ணம்மானை
காலுக்குப் பொற்சிலம்பும் கைக்குவெள்ளிக் காப்புமிட்டு
மின்னு மரைவடமும் மேலான கிண்கிணியும்

---

1 விழுங்க

பொன்னின் மணியுள்ள தெல்லாம் பூட்டிமணித்
தாயார் துளசிமலர் தாமரைப்பூ மாலையிட்டு

வாயார வாழ்த்தி வளர்த்தனர்கா ணம்மானை
தொட்டிலுக் குள்ளிருந்து துள்ளி விளையாடியபின்
தாயார் மகிழ வளர்ந்தனர்கா ணம்மானை.
தேடு மறையுஞ் சிவனுமுள்ள தேவர்களும்
நாடு மறிய நடக்கலுற்றா ரம்மானை.

தொட்டார் மிதியடியுஞ் சுண்டுவில்லுந் தாமெடுத்தார்,
கட்டினார் தோட்பாரம் காதில் கடுக்கனிட்டார்
கட்டினார் கச்சைதனைப் பச்சைநிறம் படைத்தார்
முத்தாரம் பூண்டார் விரல்நிறைய மோதிரமும்
முன்பு சுருதி முனியிட்ட சாபத்தினால்

பின்பு திசதரனார் பெற்ற பெருமாள்காண்.
மாறுகொண்ட ராவணனை வாங்கவந்த மாயவன்காண்
ஆறிரண்டு தான்வயதில் அம்புவில்லுந் தாமெடுத்தார்
எதிரிட்டார் தம்மை இயமலோகம் ஏத்திவிக்கப்
பதினெட்டு ஆயுதமும் பண்ணுதமி ழும்படித்தார்

## இலட்சுமணன் பிறப்பு

கொங்கை [1]சிமித்திரையாள் கோகனகத் தேன்மொழிக்கு
எவ்வுலகும் ஏத்தும் இலட்சுமண ரும்பிறந்தார்
பிறந்தார் தவழ்ந்தார் இருந்தா ரெழுந்திருந்தார்
காட்டினார் பூங்காவில் காதில் கடுக்கனிட்டார்
கட்டினார் கச்சைதனைக் கசுத்தூரிப் பொட்டுமிட்டார்

சூடினார் சுரிகை சுழற்றி விளையாடினராம்
பட்டையமும் முப்பிடியும் பதினெட்டு ஆயுதமும்
வனப்புற்ற சோலை இலங்கைகொள்ள மாயவற்குத்
தம்பி துணையாகத் தான்வளர்ந்தா ரம்மானை
வெண்ணெய் திருடி மிழுங்கியடி யுண்டவற்குக்

1 சுமத்திரை

கண்ணும் கவசமும்போல் கண்டிருந்தா ரம்மானை
எத்திசையும் எண்ணும் இலட்சுமண ரும்பிறந்தார்
அத்திகிரி நாதர் அடிபணிந்தா ரம்மானை.

## பரதன் பிறப்பு

கார்செறியும் பூங்குழலாள் கைகேசி கன்னியர்க்குப்
பார்புரக்க வென்று பரதாழ்வார் தான்பிறந்தார்

மருப்புலவுந் திண்புயத்தான் மாலுக்குத் துணையாக
விருப்பமுடன் வில்லெடுத்து வேண்டும் வகைபடித்தார்

## சத்துருக்கனன் பிறப்பு

சித்திர மான சிமித்திரையாள் புத்திரனார்
சத்துருக்கன் கண்டனென்று தான்வளர்ந்தா ரம்மானை.
குன்றை யெடுத்தாரும் கொற்றவரும் தம்பியரும்

சென்று திச தரனார் சீர்பாதந் தெண்டனிட்டார்

## தாடகை வதம்

இருஷி வளர்த்த யாகத்தைத் தாடகைதான்
வருஷம் பொழிந்த மழைபோல வந்தெதிர்த்தாள்
மாலுக்கு இலக்காய வாளரக்கன் தங்கையவள்
காலிற் புகுந்துடிக்கிக் கண்ணுல் விழிசிவப்பக்

கண்கள் மிகக்கலங்கிக் கருணைவிசு வாமுனியும்
தெண்டிரைசூழ் மன்னன் திசதரனை வந்துகண்டான்
என்னு யகமே யாகம்நிறை வேத்தவினி
பொன்னுன புத்திரனை வரவிடநீ வல்லாயோ
எனக்குத் துணையாக யாகக் கரைதனிலே

வினைக்குப் போர்செய்ய இராமனைநீ கூட்டுமென்றார்
மெய்யப் பாகத்தானும் விசுவாமுனி யுரைக்க
அப்போ திசதரனார் அவர்க்கருளிச் செய்தபடி
சென்றுபோர் வெல்ல சிறுவனல்லோ மாமுனியே
என்றுதான் சொல்ல இருசிமிக வெகுண்டான்

குன்றெடுத்த மாயவரைக் கொற்றவரைத் தாமழைத்து
வென்று வரச்சொல்லி விடைகொடுத்தா ரம்மானை
மேகமொத்த மேனியனை வேதமுனி தன்னுடனே
யாகக் கரையை நடத்துமென்றா ரம்மானை
ஏத்துஞ் சிலையெடுத்து இளையபெரு மாளுடனே

காத்தும் பெருமாள் துணைவந்தார் மாமுனிக்கு
வேதநிறத்தா ரும் வேதமுனி தன்னுடனே
கண்டந்தத் தாடகைதான் கருமேகம் போலெழுந்தாள்
வண்டார் குழலி வருகிறாள் மாமலைபோல்
கருமா முகில்போலே குதித்தெழுந்து கொக்கரித்துப்

பெருமாளும் மாமுனியும் பின்தொடர்ந்து ஓடலுற்றார்
நெச்சிறுக்கும் பூங்குழலாள் நெட்டெனவே கிட்டவந்து
அச்சிறுவன் ஆரடா அவன்பிறகே ஓடுறவன்
என்னப் பெருமாள் இவள்யாரெனக் கேட்டார்
மின்னுமுகில் மாயவற்கு வேதமுனி என்சொலுவான்

ஏற்றமுடைய இராவணனார் தங்கையவள்
கூற்றுவனார் தங்கையவர் கூசாமற் கொல்லுமென்றார்
பண்போர் படையுமல்ல பாருலகில் முந்தமுந்த
பெண்போர் பொருவர்களோ பேர்பெரிய மாமுனியே
கெட்டேன் நீலிகிடீர்[1] கேவலமென் றெண்ணாதே

விட்டீராய் நம்மை இருவரையுந் தின்னிடுவாள்
நன்முனிவன் சொற்கேட்டு நாராயணன் நடந்து
தோள்புரள அம்பு தொடுத்து மிகவாங்கிச்
சென்றுநின்று நன்றாய்ச்சீ ராமபாணம் விடவே
ஒன்றிரண்டுமூன்று நாலஞ்சாறு துண்டாய் விழுந்தாள்

சென்று புவிமீதில் சிதறிமுக விழுந்தாள்
ஏற்றமுடனே யாகம் நிறைவேற
போற்றும் பெருமாளும் போதமன மகிழ்ந்தார்

---

1 காண்மின்.

## சீதை பிறப்பு

எண்ணிச் செனகனார் யாகம் நடத்தவென்று
மண்ணை யுழுதுவர மாணிக்கப் பெட்டியிலே

நற்கனக வில்லுடனே நல்ல லெட்சுமியார்
பொற்கலப்பை நாவிற் புறப்பட்டா ரம்மானை
செந்தாமரை போல் சிற்றடியும் பொற்சிலம்பும்
சந்தாப மான மருங்குந்[1] தனமிரண்டும்
பொன்னின் புறங்காலும் போதகத்தை[2] ஒத்தடியும்

கன்னிவிரரல் போலக் கணைக்காலுங் காரிகைக்கு
வண்ணக் குறங்கிரண்டும்[3] வாழைக் குருத்துப்போல்
எண்ணரிய சேலை யுடைய இடையழகும்
அன்ன நடையாட்கு ஆலிலைபோ லேவயிறும்
பச்சைக் குழைத்தோடும் பயத்தங்காய்போல் விரலும்

கச்சுப் பொருமுலையும் கமலத் திருமுகமும்
சங்குத் திருக்கழுத்தும் தாழ்ந்த குழை[4]யிரண்டும்
வெள்ளிவட்டி நாவற் பழம்போல் விழியிரண்டும்
தெள்ளியிட்ட சொல்லழகும் தேய்பிறைபோல் நெத்தியதும்
செந்தூர மிட்டபொட்டும் சீரான மூக்கழகும்

சந்திரவட் டம்போலச் சமைந்த திருமுகமும்
காமன் கரத்தில் கருப்புச் சிலைபோலப்
பூமன்[5] எழுதரிய புருவச் சிலையழகும்
மாலைக் குழல்முடியும் மாணிக்கச் சுட்டியுடன்
சோலைக் கிளிமொழிக்குச் சொரிமுத்துத் தாவடமும்[6]

வேலனைய கண்ணாட்கு மெய்நிறைந்த பூஷணமும்[7]
சேலை யுடையழகும் செனகனார் தன்மகளார்
தாரணிக் குள்ளே தழைத்தெழுந்த ஞாயிறுபோல்
பொங்கி வந்து பிறந்தனர்கா ணம்மானை

---

1 வருந்தும் மெல்லிடை  2 யானை  3 இருதொடைகள்
4 காதணி  5 பிரமன்  6 கழுத்து மாலை  7 ஆபரணம்.

## சீதை சுயம்வரம்

தந்தம் பெரிய தனத்தா ருடன்பிறந்த

இந்தச் சிலையெடுத்து வளைத்தார்க்குப் பெண்குடுப்போம்
என்று சினகரனார்ஏழுலகி லுள்ளோர்க்கும்
நன்று பெறஎழுதி நாலுதிக்கும் போகவிட்டார்
கொம்பனைய கொங்கையர்க்குக் கோலக்கலி யாணமென்று
அம்புவியோர் எண்ணும் அயோத்தி நகர்க்காகச்

செம்பொன் மிதிலைச் சினகரனார் ஓலைபோகவிட்டார்

## தசரதன் மிதிலை வருகை

வம்புறையு மாலை மருவு மணத்துடனே
வந்தோலை வாசகத்தை மன்னன் திசதரனார்
கந்தமலர்க் குழலாள் கலியாணமென்று சொல்லி
வந்தவர்க்குச் சொன்னம்[1] வழங்கி மனமகிழ்ந்து

மந்திரிகள் கோடி மனிதர் பலகோடி
குஞ்சரங்கள் கோடி குதிரைபல கோடி
வஞ்சியர்கள் கோடி மனிதர்பல கோடி
வெள்ளிக் குடைநிழற்ற வெண்சா மரம்வீச
தெள்ளு தமிழ்தெரிந்து செந்தமிழோர் பாடிவர

சிரிய நாகஞ் சின்னந் தொனி முழங்க
பேரிகையும் மத்தளமும் பெருந்திடியும் முழங்கப்
போற்ற முரசுடனே பொற்காளந் தானூத
ஏற்றமுள்ள சங்கூத இராச கெடி[2] முழங்க
தோற்றும் அனுமக் கெருடக் கொடிமுழங்க

நாற்றிசையு மெண்ணு நடந்துமகா சேனையுடன்
பாரேழு மெண்ணும் பரதாழ்வார் தம்பியரும்
தேரேழு கோடி தேசத்தாரும் தேவர்களும்
கானகத்து வாழுங் கலைக்கோட்டு மாமுனியும்
வானவர் கோனும் மணமிடவே தான்கூட்டி

1 பொன்    2 கீர்த்தி

நானிலத்தி லுள்ளோரும் நாலுமறை வேதியரும்
மந்தாரம் பூகம் வயற்கச்சி மங்கையர்க்கு
செந்தாமரை யார்க்குத் திருக்கலி யாணமென்று
செல்லப் பெருமாள் சீராமனுக்கு சேவையிட்டார்

### அகலிகை சாப நீக்கம்

வில்லைப் பொருநாட்டில் மிதிலைநகர் தானோக்கி
மல்லைப் பொருந்தோளான் மாயன் வரும்வழிக்கே
கல்லை மிதித்தேறக் கமலத் திருமகள்போல்
அல்லைப் பொருங்குழலாள் அகலி[1] எழுந்திருந்தாள்
தொல்லை வினைதீரச் சுவாமிதனைத் தெண்டனிட்டாள்

### விருத்தம்

இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் ஏயதிவ் வுலகுக் கெல்லாம்
மெய்வண்ண மாகி நின்று விளம்பிய முனிசொற் கேட்டு
மைவண்ண மனைய மேனி மழைவண்ணத் தண்ணலேயுன்
கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக் கண்டேன்

### நடை

அந்நேரம் மாயன் அகிலம்வந்த வாறுதனை
முன்னாளில் சாபத்தைக் கேட்டு முனிமொழிந்து
அன்று பெருமாள் அயோத்தித் தளத்துடனே
சென்று புகுந்தார் சினகரனார் பட்டணத்தே[2]

### சீதை திருமணம்

சாந்து புழுகுபன்னீர் சந்தனத்தா லேமெழுகிச்
சேந்தமலர்ப் பிச்சியினால் சித்திரக்கோ லங்கள்செய்து
பட்டண மெங்கும் பருமுத்தின் தோரணங்கள்
கட்டி அலங்கரித்துக் கனக மணிபரப்பிச்
சந்தனத்தால் கால்நாட்டித் தாமரைப்பூப் பந்தலிட்டு

---

1 இருள்போல் கருங்கூந்தலுடைய அகலிகை.
2 ஜனக மன்னரின் மிதிலை நகர்.

அந்தப்புறங் குங்குமத்தால் அரசாணி தானுமிட்டு
பட்டுமேல் கட்டிப் பளிங்கால் நிலமழுத்தி
முட்டமணிப் பாலிகையால் முத்தால் முளைதெளித்து

ஓதுமறை வேதியர்கள் ஓமந் தனைவளர்க்க
வேதமொழி முழங்க வேதச் சடங்குசெய்யப்
பொன்னின் சிலையிருக்கப் போர்வேந்த ராதற்கு
மன்னர் பெருமாள் மகிழ்ந்திருந்து வந்துநிற்க
அங்கஞ் சிவந்தார்க்கு அரசாணி முன்னிருக்கக்

கொங்கை இலட்சுமியைக் குங்குமத்தால் சோலஞ்செய்து
மெய்நிறைந்த முத்தும் விரல்நிறைய மோதிரமும்
கைநிறைய இட்டார் கமலத் திருமகளார்
மாணிக்க மிட்ட வயிர விளக்கெரிய
ஆணிப் பொன்னாலே அலங்கரித்தார் பந்தலிலே

வேத சடங்கேற்ற விண்ணோர்கள் சேஷையிட
மாதா இலட்சுமிக்கு மங்கலியம் தான்பூட்டி
மங்கையர்கள் சூழ மணிவிளக்கு நின்றெரிய
சங்கு முழங்கச் சமுத்திரமே மும்முழங்க
செனகனார் பெற்றெடுத்த சீதை இலட்சுமிக்குக்

கனக முலையழகும் கமலத் திருமுகமும்
வண்டுகொண்ட பூங்குழலும் வஞ்சி யிடையழகும்
கண்டு சிலையை வளைத்தெடுத்துக் கையாலே
மானார் விழியாட்கு மங்கலியம் தான்தரித்தார்
தேனார் விழிமொழியார் சிறுவிரலைக் கைப்பிடித்துத்

தோழனும் தோழியும்போல் சுகித்துமிக வாழ்ந்திருந்தார்
ஆழியுஞ் சங்கும் அடிமைநல்ல பாற்பசுவும்
மேதினியோர் எண்ணும் மிதிலைவள நகரும்
சீதனங்கள் மெத்தச் சினகரனார் நீர்வார்த்தார்

**பரதன் முதலியோர் மணம்**

எத்திசையு மெண்ணும் இளையோர் மணமகிழப்

பத்தியுடன் தம்பி பரதாழ்வார் லட்சுமணர்
சத்துருக்கனுவார்க்குத் தனித்தனியே பெண்முகித்து

**பரசுராமன் வெற்றி**

அத்திகிரி நாதர் அடைவுப் பரிகலமும்
பாரோர் புடைசூழப் பல்லக்கின் மீதேறிக்
கொத்துமுத்து மாலையுடன் கொண்டு வருகையிலே

பாரச் சிலையுடனே பரசிராமன் வந்தெதிர்த்தான்
காரைப் பொருதேத்தும் காயாம்பூ மேனியரை
ஓங்கு பரசிராமன் உயிருஞ் சிலையுடனே
வாங்கி அயோத்தியிலே வந்துபுக்கா ரம்மானை
காரடந்த மேனிக் கண்ணரும் தம்பியரும்

பாரடந்த சேனைப் பரிகலமும் பல்லோரும்
போரடந்த பெண்ணுக் கழகான பெய்வளையும்
சீரடந்த மன்னன் திசதரரும் தான்வரவே

**இராமன் முதலியோர் அயோத்தி அடைதல்**

எக்காள நாகசரம் ஏற்றுசின்னந் தானூத
மைக்காள மாமுகில்போல் மத்தளமெல் லாமுழங்க

வெடியோசை தான்கேட்டு விண்ணோர் முழங்கிடவே
இடியோசை போலே எங்கும் முழக்கலுற்றார்
வன்னி ஒளிநீக்கும் வாளரவ நன்மணியைக்
கன்னியர்கள் பொற்கலத்தில் கண்ணேறு தான்கழித்துச்[1]
செங்கனக மேசொரியும் செல்வ அயோத்தியிலே

சங்குத் தொனியுடனே தான்புகுந்தா ரம்மானை
மாநிலத்தோர் எண்ணும் வண்மையுள்ள தம்பியரும்
வானவர்கள் போற்றும் மகுடமுடி மாயவரும்
கன்னி யிளங்கமுகின் கனத்த சிலையுடனே
அன்னையர்கள் மூவரையும் அடிபணிந்தா ரம்மானை

---

1 திருஷ்டி.

வாயார வாழ்த்தி மனமகிழத் தானெடுத்துத்
தாயார்கள் கண்ணேறு தான்கழித்தா ரம்மானை
பாரளந்த மாயவரைப் பல்லோருங் காணவென்று
ஊரைவல மாகவந்து உகந்திருந்தா ரம்மானை
சொன்னங் கொடுத்துச் சுவைபலவுந் தான்கொடுத்துக்

காயாம்பு வண்ணர் கலியாணப் பேர்முழக்கம்
கோசல நாடுடையான் கொண்டே மனமகிழ்ந்து
நாலு திசையிலுள்ள நல்லோரைத் தாமழைத்துப்
பாலும் பழமும் படைத்தனர்கா ணம்மானை
கண்டு மகிழ்ந்து கனத்த பெலத்துடனே

உண்டு சுகித்து உகந்திருந்தா ரம்மானை
சாந்து புனுகு சவ்வாதுபனி நீருடனே
சேர்ந்ததிரு மேனியெல்லாம் சேறளைந்தா ரம்மானை
காயச்சுண்டைக் கற்பூரம் காயிலையுந் தான்கொடுத்து
வாயச்சுண்டை போயவரை வாருமென்றா ரம்மானை

## இராமனுக்கு முடிசூட்டுமாறு தசரதன் கூறல்

எல்லா ரையுமனுப்பி யிருந்தார் திசதரனார்
நல்லோரைத் தானோக்கி நன்முனியைத் தானழைத்தே
வல்லவரா யுள்ளவர்கள் வந்தே அடிபணியச்
சொல்லாரு மாயவரைத் தெய்வபட்டம் கட்டுமென்றார்.

### விருத்தம்

குலுங்கிய நகரி யுள்ள கோகுலம் பொருந்தி வாழக்

கலங்கிய முனிவற் கெல்லாம் காக்கின்ற காவ லாளன்
விலங்கிய மேக மொத்த மேனியன் ராம னுக்குத்
துலங்கிய முடியைச் சூட்டும் சுத்தனே முனியே யென்றான்.

### நடை

பாராளு மாயவற்குப் பட்டங்கட்ட வேணுமென்றார்.
சீரா யயோத்தித் திசதரரும் தேவர்களும்

மற்றுமுள்ள மந்திரியும் மன்னவரும் மாயவரும்
கற்றைக் குழலாள் கவுசலையாள் கைகேசி
சிற்றிடையா ளந்தச் சுமித்திரையு மிக்கோரும்
நற்றமிழோர் சாரி நல்வசிட்ட மாமுனியும்
பத்தி யுடனே பரதனைவா வென்றழைத்து

எத்திசையுஞ் சென்றுங்கள் அம்மானார் எல்லோர்க்கும்
அத்திகிரி நாதற்கு அபிஷேகஞ் சூட்டுதென்று

**கூனியின் சூழ்ச்சி**

காரார் குழல்மடவார் கைகேசி தன்னருகே
கூராகும் வேல்விழியார் கூனிவந்தங் கென்சொலுவாள்
நாரா யணனையிந்த நாட்டுக்கர சாளவைத்தால்

பாராள உன்மகனைப் பட்டங்கட்டச் சொல்லுமென்றாள்
ஆரம்பூண் கைகேசி அந்த மொழிகேட்டுக்
கொள்ளை நா ளாகநின்று கோடிதவம் பண்ணியபின்
வள்ளலவ னெங்களுக்கு மஞ்சள்முளை யாகவந்து
தெள்ளு திரைதீர்த்த சீராமன் காணம்மானை

ஆற்றுகைக்கு வந்தாற் கபிஷேகம் சூட்டுகைக்கு
மாற்றுகைக்கு மெந்தன் மனம்எழுமோ மாபாவி
சக்களத்தி பிள்ளை சதமோடி யுன்றனக்கு
மக்க ளிருக்க வளர்ப்பார்களோ மாற்றானை
கண்சிவந்த நீலி கடும்பாவி நெட்டூரி

எண்ணுந் திசரதனை என்னவென்று கேட்பேனான்
தேரச் சொடிந்தஅன்று செங்கை கொடுத்தவரம்
தார்மெச்சுந் தோளானே தாருமென்று கேளுமென்றாள்.
வையகத்தை என்னவென்று கேட்பேன்நான் மாபாவி
மைந்தனுக்குத் தான்மகுடஞ் சூட்டியர சாளவென்று

கொந்தலரும் பூங்குழலாள் கூனிவந்து கைகேசி
காரார் குழலாள் கணவனைப்பார்த்துக் கைதொழுது
பாராளப் பட்டம் பரதனுக்கு வேண்டுமென்றாள்

மெத்தக் கலங்கி வெடுவெடென மெய்ந்நடுங்கிச்
சித்தங் கலங்கி விழுந்தார் திசரதனார்

அங்க மழியுதென்று அமரர்வந்து தான்புலம்பும்
மங்கையவள் கைகேசி மாயவற்குச் சொல்லுமென்றார்

## இராமன் வனஞ் செல்லல்

பைய வருஷம் பதினாலு மங்கையுடன்
ஐயா வனவாசம் போகச்சொன்னா ரம்மானை
என்ற மொழிகேட்டு இராமன் எழுந்திருந்து

சென்றவர் தாயாரைத் தெண்டனிட்டுக் கைதொழுது
அன்று பெருமாள் வனவாசம் தான்போக
என்று சமைந்தார் இளைய பெருமாளும்
கொங்கை இலட்சுமியும் கொற்றவரும் தம்பியரும்
அங்கஞ் சிவந்தார் வனவாசம் தான்போக

மங்கையுடன் காடுறைய வந்தனர்கா ணம்மானை

## இராமன் குகன் சந்திப்பு

கங்கைக் கரையில் குகனாரைக் கண்டாரம்மானை
ஆலிலைமேற் பள்ளிகொள்ளும் அச்சுதரே யும்முடைய
காலிரண்டும் நோகவந்த காரியமென் எம்பெருமான்
மையாருஞ் சோலை வளரும் அயோத்திவிட்டு

கைகேசி சொற்படிக்குக் காடுறைய வந்தோம்காண்

### வெண்பா

கோதை விடாத்தோழன் குகனை முகநோக்கிப்
பாதைவிடாய் என்னப் பணிந்தவனும்—மாதாவாய்
அந்த நெடுங்கல்லுங் காடு முளவழியும்
இந்தமா னோடே கினி.

### நடை

அன்றுகல்லைப் பெண்ணாக யாகசாலை சென்றுற்றான்
இன்றுமர மோடமிது என்னாகப் போகுதென்று

ஏற்றம் பெரிய இடம்பெரிய ஓடமதில்
ஆற்றைக் கடக்கக் குகன்விடுத்தா ரம்மானை

### விருத்தம்

எய்ய இன்னல் வந்தபோது
யாவை யென்னு மியாவையும்
செய்ய வல்லவ னென்று
கொள்க வன்தீநெறிக் கணைகவும்
... ... ... ... ... ...
பர்ணசாலை கட்டிவைத்த தம்பியான்.

### நடை

என்றுமிளைய பெருமாள் இடஞ்ச மைக்கச்
சென்று புகுந்திருந்தார் சித்திரப்பூங் காவனத்தே

### தயரதன் மரணம்

நாடளந்த மாயவரைக் காடுறைத்தா ரென்றுசொல்லிக்
கோடுயர்ந்த வெற்றிக் கொற்றவனார் தானேங்கிப்
புத்திரசோ பத்தாலே செத்தார் திசதரனார்
எத்திசையில் மன்னவரும் என்செய்வோ மென்றழுதார்

பாரோர் புகழும் பரதனுக்கு மந்திரிகள்
ஆராருங் கூடியிருந் தாளோலை போகவிட்டார்.

(ஏடு இல்லை)

### பரதன் ஏங்கி அழுதல்

மயிரை விரித்தலறி மண்மேல் விழுந்தழுது
உயிரை விடவாளை உறைகழித் தான்பரதன்
கைகேசி தன்னைக் கழுத்தறுக்க ஓடியபின்

வெய்ய சினங்கொண்டு விலக்கினா ரெல்லோரும்
அய்யரையுங் கொன்றுஎங்கள் அண்ணரையும் ஓட்டிவிட்டு

(ஏடு இல்லை)

அடுத்து மிகவழுது அலங்காரக் கட்டிலிலே
எடுத்தடக்கி உள்ளசடங் கத்தனையும் தான்முடித்துத்
தென்னிலங்கு திண்டோளான் திசதரனார் செத்தபின்பு

என்னசெய்யப் போறோ மிதற்கினிநா மென்றுசொல்லி
வேதா[1] வுமிப்போ விதித்த விதிப்படியே
மாதாவுந் தங்கள் மன(ங்)கருகி யாடிநின்று
அய்யா அரசாள ஆனதவம் பெற்றிலனே
அண்ணா அரசாள அரியதவம் பெற்றிலனே

என்று பரதாழ்வார் ஏங்கி அழுதபின்பு
சென்று சொல்லி வாருமெனத் திருவாசக முரைக்க
மன்னுபுகழ் மந்திரிகள் வந்துசொன்னார் மாயவற்குக்
கண்ணன் கதறியழக் கண்டங்கே நின்றவரும்
மண்ணும் மலையும் மரங்களும்போய் ஒக்கழுது

அழுது மிகத்தெளிந்து ஆற்றில் மூழ்கிவந்து
பழுதற்ற பிண்டமிட்டுப் பச்சைப்புல்லுங் கைப்பிடித்து
உள்ள மகிழ்ந்து உளுந்துமா பச்சரிசி
நல்லறுகு தெற்பையுடன் நற்பிண்டம் தான்முடித்து
வல்லபடி யேசடங்கு வகைப்படவே தான்முடித்துத்

தற்பிதங்கள் சொல்லித் தண்ணீருந் தானிறைத்துத்
தற்பித்தே தாங்கள் சடங்கனுத்தா ரம்மானே.

### வெண்பா

ஐய ருயிர்போக அன்னைமொழி பாழ்போக
வைய முடையான் வனம்போக—பையவொரு
தம்பி யுடன்போகத் தானிளை யோர்கேளீர்
அம்புவில் லாமே அறிவு.

### நடை

### பரதன் இராமனைத் தேடிவரல்

பண்ணாருஞ் செந்தமிழோர் எண்ணும் பரதாழ்வார்
மண்ணோர் புகழவரும் மாயவரைக் காணவர

1 பிரமன்

கண்ணீர் சொரியநின்று கைகேசி தன்னைநொந்து
மண்ணீர மாக மன்னருளம் கருகிவாடிப்

பன்னுதமிழ்ப் புலவோர் பட்டணத்தார் தான்கோடி
மன்னர்கள் மந்திரிகள் மகுட வர்த்தனர்கோடி
கோட்டானை கோடி குதிரை பலகோடி
நாட்டார் மதிக்க நடந்துமகா சேனையுடன்
வந்துவிட்டார் கங்கை வடகரையி லம்மானை

இந்து[1]வொத்த செம்முகத்தாள் இலட்சுமியார் என்சொல்வாள்
அரவக் கொடியுடனே அந்தரக்கன் மாயவரே
பரதன் படையெடுத்து வாரானே பாருமென்றார்
பைந்தொடி யேகேளாய் படையலகா ணும்பரதன்
அன்புடைய அய்யா அவமிரித்தா[2] ரென்றுசொல்லி

ஆறாத துக்கமுடன் அவர்வாரார் ஆரணங்கே
மாறாகு மென்று மனத்தில் நினையாதே
உரைக்கு மொழிகேட்டு ஒன்றுக்குமே அஞ்சாதே
பற்றிக் குகனை பரதன் நினைவாய்

## இராமன் பரதன் சந்திப்பு

என்னக் குகனும் இடம்பெரிய ஓடமதில்

மன்னர்பர தாழ்வாரை வந்தழைத்து ஏறவிட்டார்
மண்ணோருஞ் செந்தமிழோர் எண்ணும் பரதாழ்வாரும்
மண்ணோர் புகழவரும் மாயவரை வந்துகண்டார்
ஆலையெல் சூழும் அவனி முழுதுடையார்
காலில் விழுந்தழுது கதறினர்கா ணம்மானை

பண்ணாருஞ் சொல்லான் பரதன் விழுந்தழுது
புண்ணியரே நம்மையா போனார் எனவழுதார்
ஆனையிருந்து அரசாளும் மண்டபத்தைப்
பூனை யிருந்து புலம்புமதே அண்ணாவி
கதறியழுந் தம்பியரைக் கண்ணீருந் தான் துடைத்து

1 சந்திரன் 2 தந்தையார் துன்மரணம் எய்தினர்.

மெத்தணைத்து நம்மால் விதிவசத்தை என்செயலாம்

**பரதன் பாதுகை பெறல்**

இங்கே வருஷம் பதினலுஞ் சென்றபின்பு
அங்கே வருவோம்நாம் அவ்வளவும் நீயிருந்து
துங்கமுடி சூடித் தொல்லை யுலகுதன்னில்
செங்கோல் நடத்துமென்று திருவடியைக் கொடுத்தார்.

வாங்கித் திருவடியை மாயன் முகம்நோக்கிப்
பூங்கமலத் தாள்தொழுது போற்றிப் பரதாழ்வார்
பாரோர் புடைசூழப் பல்லக்கின் மீதேறிப்
பாரேழு வருஷம் பதினலுஞ் சென்றுபின்பு
வாரீரே யாமாகில் வன்னிக் [1]குழிதன்னில்

நாராயணு விழுவேன் நல்ல திசமியிலே
வாரமொழி கேட்டு இராமன் அருளிச்செய்வார்
தப்பாது வந்திலனேல் தானெரியில் தம்பியரே
அப்போ விழுமென்று அவற்கு விடைகொடுத்தார்.
நீண்டா னனுப்ப நிறைந்துமகா சேனையுடன்

மீண்டான் பரதன் மிகுந்தபெருஞ் சேனையுடன்
அப்போது மாயன் அவதாரந் தானிருக்க
இப்போ பரதன் இராகவனைக் கண்டுவந்து
பாரோர் புடைசூழப் பல்லக்கின் மீதேறி
ஆராரும் வாழவென்று அயோத்திதனை ஆண்டிருந்தார்

## விருத்தம்

அன்னைசொற் கேட்டு மாயன் அருஞ்சுனை நீரு முண்டு
மன்னவ ரிருவ ரோடு மாதருந் துணையாய்க் கூட்டி
தென்னவன் கயிலை நாதன் திருப்பதம் நினைந்து கொண்டு
பொன்னக ரயோத்தி விட்டுப் புண்ணியன் அடவி
யாண்டான்.

## நடை

வேகத்துடன் வீரர்கள் வேங்கைப் புலியுடனே

1 தீக்குழி

ஆகமுடன் வேட்டை ஆடினர்கா ணம்மானை.
பன்றி புலிகரடி பாயுங் கலைமானும்
கொண்டெடுத்துக் காவுடனே கொண்டு வருகையிலே
கண்டுகொண்டான் மாயவரைக் கற்றைச் சடையுடனே
அண்டர் தொழுமுனியோ ஆரோ எனக்கேட்டான்

வந்தோம் வனவாசம் மாதாச்சொல் மீறுமல்
விந்தை நெடுவீரன் மெத்தித்துக் கொக்கரித்து
மிகத்தாண்டி யுயர்ந்து மெத்தத் தாணிமிர்ந்து
கொங்குமலை தானெடுத்துக் கொல்வேனென்று மாயவரை
மங்கை இலட்சுமியை மகிழ்ந்து பிலத்துடனே

## விராதன் வதை

தங்கள் திருவை எடுத்தோடிப் போகலுற்றான்.
வெய்யகடுங் கோபத்தால் வெவ்வாளி யைத்தொடுத்து
எய்யசிலை யைவளைத்தார் இலட்சுமணர் அப்போது
எட்டிப் பிடித்து இராமன் இராகுவனைக்
கட்டிப்பி டித்திரண்டு காலா லுதையலுற்றார்

அப்போ விரகன்[1] அறிந்துமிக ஞானமுற்றுத்
தப்பாது பாதந் தனிலே சரணமென்றார்.
வைய முலகளந்த மாயவனார் தாள்பூண்டு
வையகத்தோர் மைத்துனனே விண்ணப்பங் கேட்டருளீர்
ஆயுதத்தால் சாகேன் அகத்திமுனி சாபத்தினால்

பூமியைக் கீறிப் புதையுமென்றா ரம்மானை.
நீண்டதிருப் பாதத்தால் நெறுநெறெனத் தான்மிதித்துப்
பூண்ட விரகன் போய்விட்டா னப்போதே

## விருத்தம்

ஆணிக்கை வயிரம் பூணும் அண்டர்கோன் தேவர் கேட்கில்
காணிக்கை அயோத்தி வேந்தன் கார்வனம் போந்த
வன்றே

1 விராதன்

வேணிக்கை விரகன் தன்னை மேதினிக் கிறிப் போட்டு
மாணிக்கப் பாதம் வைக்க வைகுண்டம் அவனுஞ்
சேர்ந்தான்

நடை

அவ்வனத்தை விட்டு அகன்று பெருமாளும்
செவ்வனத்தை நோக்கித் திசைசேரவே தான்வாச
செகத்திற் பெரிய சமத்தன் பெருமாளை

அகத்தி முனிவந்து அடிதொழுதா ரம்மானை
எந்தம் பிரானே இராக்கிஷ குலமடிய
அந்தப் பிறப்பை அடியறுக்க வேணுமென்றார்.
அப்போ பெருமாள் அகத்திமுனி சொற்கேட்டுத்
தப்பாமல் கேட்டவரந் தான்கொடுத்தா ரம்மானை

தண்டமிழோர் எண்ணும் சங்கரனும் இந்திரனும்
எண்டிசையுங் காண இராசியங்கள்[1] பேசுகையில்
மன்ன னிராமனைத்தான் கண்டு மறைந்துவிட்டார்
அந்நேரம் மாயன் அரிய வனம்புகுந்து
காயுங் கிழங்குங் கனியு மிகப்பருகி

ஆயன் பதினாலு மாண்டிருக்க அம்மானை.
தன்னந் தனிப்பெருமாள் தம்பியரைத் தானழைத்து
முன்னே ஒருசாலை முந்தச் சமையுமென்றார்.
சுந்தரப் பூங்குழலாள் சூர்ப்பணகை தன்மகனார்
அந்தாலின் கீழிருந்து அந்தணரைக் கொன்றுகொன்று

செங்கரத்தைக் கூப்பித் திருவடியைக் கைதொழுது
சங்கரனை நோக்கித் தவசுநின்றார் அம்மானை
எட்டுத்திக்கு மெண்ணும் இளைய பெருமாள்தான்
அட்டகிரி போலுயர்ந்து ஆலடியில் வந்துநின்றார்
அந்தரமே வந்துலவும் மந்திரவா ளைப்பூட்டிச்

சிந்தி யுடல்துணியச் செங்குருதி மேல்தெறிக்க
வெட்டி இளைய பெருமாள் மிகப்பயந்து

---

1 இரகசியம்

பட்ட துவாலைப் பயத்துடனே ஓடிவந்தார்
கண்டு பெருமாளுங் கையமர்த்தி என்னவென்று
அண்டர் தொழுமுனியோ ஆரோ எனவறியேன்

மிஞ்சு முடல்துணிய வெட்டிவந் தென்னாவி
அஞ்சாதே என்றுபய மாற்றி அருகணைத்து

### சூர்ப்பனகை தோற்றம்

#### விருத்தம்

ஓங்கிய வாளை வாங்கி உலகெலாங் குருதி கொள்ளத்
தாங்கிய அரக்கி முன்னே தானது பரந்து சொல்லப்
பாங்கியர் பாவை காணப் பதறியே பக்கல் வந்து
நீங்கிய காதல் கொண்டு நேரிழை அணுகச் சென்றாள்.

#### நடை

தந்தையுடல் துணியத் தன்மகன் பட்டிடத்தே
குந்தி விழுந்தழுது கூப்பிட்டாள் சூர்ப்பணகை
கோட்டுமுலைச் சூர்ப்பணகை குமரன் பழிவாங்க
வேட்டை வாளி[1] போலிடையும் வேதமுகத் தழகும்

கொண்டை முடித்தழகும் குங்குமத்தால் பொட்டழகும்
சண்டையிட வேண்டியவள் தன்னுருவம் வேறுகொண்டாள்
பச்சைத் துகிலிடையும் பாதமணிச் சிலம்பும்

### சூர்ப்பணகை அழகிய வடிவு கொள்ளல்

கச்சுப் பொருமுலையாள் கையில் சுருளுடனே
மையுலவுங் கண்ணாள் மருட்டிமிக விழித்துத்

தெய்வகன்னி போலழகாய்ச் சிரித்து மிகவுருகித்
தெண்டிரைசூழ் மன்னன் சீராமனைமுன் வந்துகண்டாள்
அண்டர் பெருமாள் அவர்முகம்பார்த் தேதுசொல்வார்

---

1 அம்பு

## விருத்தம்

சீதை சிறையி ருப்பும் தென்னி லங்கை அழிவதற்கும்
ஆதி மகனுனை அனுமான் அவன்தூது போவ தற்கும்
பேதை மதிதனை நினைந்து கொண்டு பின்வருவ தறியாமல்
மாது நல்லாள் சூர்ப்பணகை மாயன்முன் தோன்றி னாளே.

## நடை

கந்த மலர்க்குழலாள் காரிகையாள் இங்குளர்காண்
இந்து நுதலாய இளையோ ரடிதொழுதுபோய்ப்

**சூர்ப்பணகை காமம்**

பச்சைப் பெருமான் பாதந்தொழும் சூர்ப்பணகை
இச்சித்து நின்றாள் இளையோனைக் கண்டுருகி
அண்ணர் அடிதொழுத ஆரணங்கே அங்கேநில்
பெண்ணணங்கே நீரெனக்குப் பெற்றெடுத்த மாதாகாண்
என்றே பெருமாள் இளையோன் உரைத்ததற்பின்
நன்றே யவளும் நெடுமா லென்றறியாமல்
விண்ணதிர மண்டி எதிர்வி ழுந்தாள்
விண்ணிறைந்த கூந்தல் விரித்தாள் விழிசிவந்தாள்
பண்டையிலு மெண்மடங்காய்ப் பார பிலத்துடனே
வண்டமரும் பூங்குழலாள் வாளரக்கன் பட்டணத்தே
எண்டிசையும் எண்ணும் இளைய பெருமாளைக்
கொண்டுபோக வேணுமென்று குடுத்தெடுத்தாள்
சூர்ப்பணகை.
சேலையுடைய அழகன் சீராவைத் தானுருவி
ஊக்கமுடன் சூர்ப்பணகை தோள்மீதில் தானிருந்து
சொற்கரிய சூர்ப்பணகை மூக்கறிந்தா ரம்மானை.

## விருத்தம்

கையது நெகிழ்ந்து மெத்தக் கனக்கவே மூச்செ றிந்து
மெய்யது நடுங்கிக் கொண்டு வேந்தனுக் கேது சொல்வேன்
மைவளர் கண்ணு ளந்த மற்றவற்கு ரைக்க வென்று
ஐயகோ அபைய மென்று அலறினாள் அரக்கி யங்கே.

### நடை

'விட்டா னிளைய பெருமாளை மின்கொடியாள்
அட்ட கிரிபோலே அலறி விழுந்தழுதாள்

எத்திசையு மெண்ணும் விண்ணோர் தங்கையிவள்
கத்திக் கதறிக் கரதூசண னுடனே
குத்தி விழுந்தழுது கூப்பிட்டாள் சூர்ப்பணகை.
முத்தின் குடையான் திரிசுராமன்[1] முன்னேயும்
மங்கா மதில்இலங்கை மன்னவனார் தங்கையவள்

பங்கப் படுவளென்று படையெடுத்தா ரம்மானை.
அதிபா ருலகளந்த அச்சுதனார் தம்மருகே
பதினாயிரங் கோடி படையெடுத்தா ரம்மானை
வட்டச் சிலையெடுத்து மாயனெங்குந் தானோக்கிக்
கட்டும் பரிஅரக்கன் கண்கொள்ளாச் சேனையுடன்

பட்டுவிடப் பகழி தொட்டுவிட்டா ரம்மானை.
கிட்டுங் கரதூசணனார் திரிசுராமன் பட்டபின்பு

### சூர்ப்பணகை இராவணன்பால் சென்று கூறல்

பட்ட விரத்தம் பழுதுடனே தானோடி
வட்டமுலைச் சூர்ப்பணகை வாளரக்கன் முன்சென்று
இலங்கை விளங்க இலங்குமுடி சூட்டி

இலங்கை யுடைய இராவணனுக் கென்சொல்லுவாள்
அண்ணே ஒருத்தி அழகெழுத ஒண்ணாது
விண்ணோர்கள் தெய்வமோ வேதமோ நானறியேன்
மின்னியெழு முகில்போல் வேடரிரு வரையும்
கன்னி ஒருத்தியையும் கண்ணெதிரே கண்டேனன்

தென்னிலங்கை மன்னவனே தேவியுனக் காகுமென்று
அன்ன நடையாள் அவளருகே சென்றேன்நான்
செப்பார் முலையாரைச் சேருவையே எனச்சொல்லி
அப்போது மூக்கை அரிந்துவிட்டான் அண்ணாவி.

---

1 திரிசிரா எனும் அரக்கன்.

### இராவணன் சீற்றம்

துய்ய மலர்க்குழலாள் சூர்ப்பநகை சொற்கேட்டு

செய்யகுலை வாளரக்கன் சீறி எழுந்திருந்து
கொடிய சினத்துடனே கோவித்துக் கைமுறுக்கிப்
படியை யுறமிதித்துப் பார்த்தான் பொறிபறக்க
ஆரென் றெழுந்திருந்தான் ஆறாச் சினத்துடனே
சீரெழுந்த செம்பொன் திருத்தேரில் மீதேறிப்

போரெழுந்த மாமனைப் போவென் றாரம்மானை.
ஊன்வடிவு கொண்ட உயர்வேல் இராவணன்முன்

### மாரீசனை அனுப்ப அவன் கூறுதல்

மான்வடிவு கொள்ளுகிற மாரிசன் என்சொல்வான்
ஊழி யுலகில் உலகில் திசைதோறும்
ஏழுலகும் எண்ணும் இராவணனே நீகேளாய்.

### விருத்தம்

மானெனும் வடிகொள்ள மன்னவன் இராமன் கொல்வான்
யானினி யல்ல வென்றால் நீயினி இங்கே கொல்வை
நானினி முன்னே சென்று நமனிட கோயில் புக்குச்
சேனைக்கு முனக்கு முன்னே சென்றிடம் பிடிப்பே னென்றான்

### நடை

மானுருவாய்ச் சென்றால் மாயனெனைக் கொல்லுவன்காண்

நானுமினி யல்லவென்றால் நீயுமெனைக் கொல்லுவைகாண்.
எண்ணி யிருந்த இலங்கை இராசவே
விண்ணுலகை யாளும் மேகனாதன் தனக்குந்
தன்னறி வில்லாத தம்பிகும்ப கரணனுக்கும்
மன்னன் செகராயன் மற்றுமுள்ள சேனையர்க்கும்

ஏற்கவே சென்று இயமனிட கோயிலிடம்
பார்க்கவே போறேன் பதறாமல் வாருமென்றார்.

## மாரீசன் மானுருக் கோடல்

மானுக்கும் எண்மடங்காய் மாணிக்கம் போலழகாய்த்
தேனுற்ற செங்கமலம் போலே திருமுகமும்
வேலைப் பொருங் கணைபோல் வீரக் கயல்விழியும்

காலிற் குளம்பழகும் கனக மணிக்கழுத்தும்
சீருஞ் சிவனெறியும் தெள்ளியமான் துள்ளியதும்
நேரும் விளையாட்டும் நின்றிளமான் கன்றாக
மற்பொருந் திண்டோளான் மாரீசன் மான்வடிவாய்
மானலகாண் வந்ததிது மாயங்காண் வாணுதலே.

கொப்[1]பொடியத் தாண்டி குழையைப்[2] பொரும்விழியாள்[3]
எப்படியு மானைப் பிடித்துவர வேணுமென்றார்.
வண்டாருஞ் சீர்துளசி மாலையணி மார்பன்[4]
தண்டாமரை யாட்குத் தம்பியரைக் காவல்வைத்து
வெள்ளிச் சிலையெடுத்து வேந்த ரவர்தாமும்

## மாயமானை அழித்தல்

துள்ளிவரு மானைத் தொடர்ந்தனர்கா ணம்மானை,
மேகமொத்த மேனியன்தான் விண்மானின் பின்போகத்
தாகமொத்த மானோடத் தானோடி யேசலித்து
மையாருங் கண்ணி மலர்க்குழலாள் சொற்கேட்டு
எய்தார் பெருமாள் இராம சரத்தாலே

வளையுஞ் சிலைவாங்கி வாளியுறப் பட்டுருவி
'இளைய பெருமாள்' எனவிழுந்தது அம்மானும்.

## மானின் அபயக்குரலும் சீதை கலக்க உரையும்

இந்து நுதலாள் இராமச்சந் திரன்தேவி
செந்தா மரையாள் திருச்செவியில் கேட்டதுவே
மன்றலரும் பூங்காட்டில் வந்தஇளமான் பிறகே

---

1 கொப்பு, காதில் அணியும் ஒரு வகை அணி 2 காதணி,
3 சீதை 4 இராமன்.

ஏதென்று சொல்லி அறியீர் இளையபிள்ளை
விண்ணகரத்தில் மாதவற்கு மிக்கவினை வந்தாலும்
அண்ணற்குத் தீங்கு வருமோ அவனியிலே
என்றார் இளைய பெருமாள் இலட்சுமிக்கு
மாதேவி சொல்ல மறுவார்த்தை சொல்லியபின்

கன்றி முகங்கடுத்துக் கண்ணாலும் பாராதே
போனவர் கூரை இருந்தாற் குரியதென்று
மாண்டவர் சொல்லும் வழக்காய் இருந்ததுவே.
கனக்க மனம்அழன்று கண்ணிரண்டு நீர்சொறிய
வனத்தில் வழியேபோய் மாயவரை வந்துகண்டான்

கச்சணிந்த கொங்கையர்க்கு காவலென்று வாசலிலே
வைத்துவந்தே னங்கிராமல் வந்தாயே மாபாவி
வளையுங் கடலுலகில் மலர்மகள் தேடுமென்று
அளவற்றுக் கோவித்த அளவில்வந்தேன் அண்ணாவி.
பண்வாய்த்த சொல்லான் பகர்ந்திடும் நம்மையருந்தான்[1]

பெண்வார்த்தை கேட்டுப் பிழைப்பட்டார் தம்பியரே
பின்மாயன் நானும் பெண்வார்த்தை கேட்டலவோ
பொன்மானின் பின்பே புறப்பட்டோம் தம்பியரே

## விருத்தம்

பெண்சொல் கேட்டு நம்மையா பெரிய வானமது அடைந்தார்
பெண்சொல் கேட்டு நானுமிந்தப் பெரிய மானின் பின்வந்தேன்
பெண்சொல் கேட்டு நீயுமிந்தப் பெண்ணுதல் தன்னைக் கைவிட்டாய்
பெண்சொல் கேட்க நங்குடிக்குப் பெரிய விதியின் பயனென்றார்.

## நடை

ஏதுதான் சொல்லியுன்னை எப்படித்தான் வைதாலும்
மாதாச் சொல்கேட்டு வருவரோ மாபாவி
என்றார் பெருமாள் இலட்சுமண ரைப்பார்த்து

---

1 தந்தையாகிய தசரதன்

நின்றா ரிருவருமாய் நினையாதெல் லாம்நினைந்து

## இராவணன் சூழ்ச்சி

ஏற்ற முடைய இலங்கை இராவணன்தான்
போற்று மணித்தேரைப் பூமியிலே தானொளித்துத்
தண்டுங் கமண்டலமும் சீரான பொத்தகமும்
வெண்டரள மொத்தபல்லும் வேட்டியுடை யழகும்

இரைத்த பெருமூச்சும் இலந்தைக் கனிப்புழுப்போல்
நரைத்த தலையும் நடுநடுங்கி வந்துநின்று
அன்னா யகியின் அகத்தில் திசைநோக்கிச்
சன்னியாசி யாகவந்து தையல்நல்லீர் பிச்சையென்றார்
வட்டமணி வாசலிலே மாதாவே பிச்சையென்று

பத்தடிவந் திட்டார்க்குப் பாவங்கள் நீங்குமென்றார்.
வைத்தஅடி அத்தனையும் மாயமென எண்ணாமல்
மையாருங் கண்ணியந்த மாயவனார் தம்தேவி
ஐயமிடச் சென்றார் அரக்கன்மணித் தேர்மேலே
ஓட்டினான் சாரதிதேர் ஓடாம லுற்றபின்பு

நீட்டினான் கையரக்கன் நேரிழையாள் தன்னெதிரே
ஏடலந்த தோளான் இராவணன்இ தென்னவென்று
ஓடுசங்கு தென்றார்தேர் ஓட லுற்றா ரம்மானை.

## சீதையை வஞ்சனையாற் கவர்ந்து செல்லல்

மாசார் குழலாளை வைரமணித் தேர்மேலே
ஆகாசங் கொண்டு பறந்ததுகா ணம்மானை.

அல்லைப் பொருமேனி அரக்கனிட தேர்மேலே
எல்லை முடிந்துதென்று இராவணனும் போமளவில்
இந்துவொத்த செம்முகத்தார் இலட்சுமியார் அப்போது
கொந்தார்குழல் விளித்துக் கூப்பிட்டார் மாயவரை
முத்தா ரணிமாலை மோதிரங்கள் தான்கழத்தி

வித்தார மாகமுன்னே விட்டெறிந்தா ரம்மானை.
விண்ணதிர மண்ணதிர வேலைப் பொரும்விழியாள்

கண்ணற்கு அபயமென்று கத்தினர்கா ணம்மானை.
சேணுடர் போற்றும் திருவும் முறையிடவே
பூணாரந் தான்கழத்திப் பூமியிலே விட்டெறிந்தாள்

வேலைப்பொரும்விழியாள் விண்ணோற் கபயமென்று
காலிற் சிலம்பைக் கழற்றி எறியலுற்றார்.
மற்பிடித்த தோள்அழகன் மாயவரைக் காணாமல்
பொற்கொடியைக் கொண்டரக்கன் போகலுற்றா ரம்மானை

**இராவணன் சடாயு சண்டை**

கண்டான் சடாயுமுனியுங் கடல்வண்ணன் தேவியரைக்

கொன்று வருவையென்று கோவித் தெழுந்திருந்தான்
அழியு மிலங்கை அரக்கன் திடுக்கிடவே
வழியை மறித்து வளைத்துக்கொண்டா ரம்மானை.
மறுகிடவே நெஞ்சமஞ்ச வாழரக்கன் பின்னிடவே
சிறகடிக்கொண்டு பொருதான் சடாயு முனிவன்

போரார் சடாயுமுனிதான் போதமிகக் கொக்கரித்து
தேரொடியத் தாண்டிச் சிறகடிக்கொண் டேபொருதான்.
வீரமுடன் வெட்டி மிகுத்தரக்கன் தன்னுடைய
பாரமுடி பத்தும் பறித்தெறிந்தா ரம்மானை.
ஆண்ட யிலங்கை அரக்கன் மணிமுடிகள்

மீண்டு முளைத்து மிகவளர்ந்த தம்மானை.
செட்டைச் சடாயுமுனியும் தேர்மீதில் ராவணனும்
ஒட்டிப் பொருதார் உயர்நிலைக ளம்மானை.
உன்னுயி ரெங்கே இருக்குஞ் சடாமுனியே
உன்னுயி ரெங்கே இருக்குமிடா வாழரக்கா

என்னுயிர் தான்வலது பெருவிர லிருக்குமென்றார்
அச்சாருந் தேரை நிறுத்தியங்கே வாளரக்கன்
மெச்சாக வெட்டிவிழ விட்டான் சடாயுமுனியை

காயாம்பூ மேனியனார் கண்ணர் வருமளவும்
தாயார் சடாயுமுனிக்குச் சாபமிட்டார் சாகாமல்.

## சீதையை அசோக வனத்துச் சிறையிடல்

கச்சார் முலையாரைக் கண்ணார் திருத் தேவியரைத்
தேர்ச்சூ ழிலங்கையிலே தேருடனே கொண்டுவந்து
வித்தார வில்லியரை வேதத் தலைவியரை
வைத்தார் அசோக வனந்தனிலே அம்மானை
சொரியு மலர்க்காவில் சுத்தினார் அக்கினியை

எரியை வளர்த்து இருந்தார் இலட்சுமியோர்
ஏலக் குழலாள் இருக்கும் அசோகையிலே
மாலைக் குழல்முடியாள் வாழுந் திருச்சடையாள்
பாங்கி யரும்சூழப் பலமாதர் தான்சூழ
காங்கிசையத் தான்வருந்தும் கானக் குயில்கூவ

பொன்னளிகள் பண்பாடப் போர்மயில்கள் தாமாட
இன்ன மிசைபேசி இரங்குங் கிளிசூழக்
காசாம்பூ வண்ணர் கருத்தை யுருக்கவல்ல
மாசத்த சீதை மனமகிழ வேணுமென்று
வீசும் புகழார் விபூசணனார் தன்மகளார்

ஆசார மாக அருகிருந்தா ரம்மானை.
கருமா முகில்போலக் கறுத்து முகம்வாடித்

## இராமலக்குவர் சீதையைத் தேடல்

திருமாலுந் தம்பியரும் தேவியரைத் தேடலுற்றார்.
சீதை யிருந்த செழுவனத்தில் காணாமல்
போதமுகங் கருகிப் புலவாட லாயிருந்தார்

இந்துவொத்த செம்முகத்தாள் ஏந்திழையைக் காணாமல்
சிந்தைமெத்த நொந்தயர்ந்து தேவியரைத் தேடலுற்றார்

## விருத்தம்

உள்ளமே உருகி வேறாய்
உயிரெலா முருகி ஒன்றாய்க்
கள்ளமே செய்து போன
காரிகை யானைக் காட்டாய்
வெள்ளமே முகிலே நாளும்
விடாதுநின் றழைக்கும் புள்ளே
துள்ளுமான் தொடர்ந்து போன
துயரனை விடாது கண்டாய்.
கழையிற் காணேன் நின்கழுத்து
.. ... ... ... ...
மழையிற் காணேன் நின்கூந்தல்
மயிலிற் காணேன் நின்சாயல்
இழையிற் காணேன் நின்னிடைகள்
என்னை மின்னே யான்செய்த
பிழையிற் காணேன் ஒருபிழையும்
பெண்ணே நம்மைப் பிரிந்தாயே.

## நடை.

### இராமலக்குவர் சடாயுவைக் காணல்

சிற்றடியைப் பொற்கொடியைத் தேடி வரும்வழிக்கே
சற்றுயி ரோடே கிடந்தான் சடாயுமுனிவன்
மண்களிக்கப் பச்சை வடிவுசங்கு சக்கரமும்

கண்களிக்கக் கண்டு கைதொழுதா ரம்மானை
அம்புலவுங் கையாநீ ஆரடா வென்றுசொல்லி
நம்பா வுனதடியேன் நான்காண் சடாயுவென்பான்
வாரஞ்சு மென்முலையாள் மாபாவி லட்சுமியை
ஆரிங்கே கொண்டுவந்தார் அஞ்சாதே சொல்லுமென்றார்

ஈரஞ்சு சென்னி உடைய இராவணன்தான்
கூரஞ்சேர் வாழரக்கன் கூசாதே கொண்டுவந்தான்
வீரங்கள் சொல்லியவன் மேன்மேலும் பொய்கள்சொல்லிப்

போரிங்கே செய்திலங்கை போய்ப்புகுந்தா ரம்மானை.
தேவப் பெருமாள் திறல்முனிவன் சொற்கேட்டு
ஆவல் துயர் தீர ஆரணங்கைக் காணாமல்
சொன்ன சடாமுனியைச் சொர்க்கத்தே தான்சேர்த்துப்
பின்னும் பெருமாள் பிறைநுதலைத் தேடலுற்றார்.
வண்டார் குழலாரை மாயவனார் தேடிவரக்

## கவந்தன் வீடு பேறெய்தல்

கண்டான் கவுந்தன் கழுத்துமுடி இல்லாதான்
செய்யணிந்த நாடுடையார் சீராவைத் தானுருவிக்
கையைத் துணியவெட்டிக் கடந்துவழி போகலுற்றார்
கையும் மொண்டியான கவுந்தனவன் அருளால்
வைகுண்டஞ் சேர வரங்கொடுத்தா ரம்மானை.
சென்றா ரிலட்சுமியைத் தேடிவழி எண்ணாமல்
மன்றார் குழலி வழியில் அவளொருத்தி
மண்குளிரப் பச்சை வடிவாய் வெருகையிலே
கண்களிக்கக் கண்டு கைதொழுதா ளம்மானை.
தேனுங் கிழங்குஞ் சிறப்பிட்டா ரம்மானை.
சிந்தை மகிழ்ந்து திருமால் வரிசைபெறக்
கந்த மலர்க்குழலாள் கண்ணாற் களிகூர்ந்து
அஞ்சினையு நானும் அரிய தவம்புகுந்து
(வஞ்சினைய சித்த மிருந்திரோம் மாயவரே
பொன்னின்னார் நாளும் பொற்கோ வனத்துடனே)
மன்ன ரறிய வகைக்காதில் குண்டலமும்
பத்தானைக் குள்ளதொரு பலவியவா னானதொரு
புத்திரனைப் பெத்தெடுத்துப் போனாள்காண் அஞ்சனையும்
எந்தன் மகனை ஈசனுக்கு மீறாக
... ... ... ... ... ...
மெத்த மனமகிழ்ந்து வேண்டும் வரம்கொடுத்தார்.
சித்தம் வருந்தத் திகைத்துநெடுங் காவனத்தே

வந்தார் பெருமாள் மலர்மகளைத் தான்தேடி.
கந்தாருங் கம்பைக் கரையி லடிதனிலே
கன்றால் விளாவெறிந்து காய்கனியை யுண்டவர்தாம்
அன்றாலின் கீழே அமர்ந்திருந்தா ரம்மானை.
துய்ய விளைய பெருமாள் துடைதனிலே
பையமுகம் வாடிப் பள்ளிகொண்டா ரம்மானை.

## அனுமன் வருகை

கண்துயிலும் மாயவரைக் கண்டு களிகூர்ந்து
வண்டலர்ந்த சோலை மரத்தி லுயர்ஏறிக்
குண்டலமுங் காதுங் குரங்கு முகத்துடனே
தோன்றுபட வந்தனுமான் தோன்றினர்கா ணம்மானை.
வரைஎடுத்தவன் காத்தான் மன்னன் துயிலுகைக்கே
இலைபறித்து மார்பில் எறியலுற்றார் அம்மானை.
அலையடைத்தார் ஆழி அப்பருட தம்பியர்தான்
சிலையெடுத்து வாளி தெரியலுற்றா ரம்மானை
மலைச்செ றிந்த புயத்துடனே வந்தனுமான்
வில்லைப் பறித்தெறிந்து விட்டனர்கா ணம்மானை.
பள்ளிகொண்டார் கண்மலர்ந்தார் பார்த்தார் அனுமானை
கொள்ளிகொண்ட கண்ணனுமான் குழைக்காதிற் குண்டலமும்
கண்டுகொண்டு தம்பியருக்குக் காட்டினர்கா ணம்மானை.
பண்டுதா யார்மொழிந்த பள்ளிகொண் டார்மேலே
ஆலி லிறங்கி அடிதொழுதா ரம்மானை.

## இராமன் அனுமன் உரையாடல்

மாலை வணங்கி வழியடிமை நானென்றார்.
சீரார்ந்த மெய்யார் திருமா லனுமானை
வாராயென வழைத்து மகிழ்ந்து முகநோக்கி
அய்யா அடியேன் அவனிமுழு துஞ்சுமந்த

வாய்அறியச் சொன்ன திருமாய னுக்குத்தான்
பையா டரவின் பகவன்மகன் நானென்றான்.
அங்கே அயோத்தி அவனிமுழு தாளாமல்
இங்கே எழுந்தருளக் காரியமென்ன பெருமாள்.
வந்தோம் விதியின் பயனறிய மாட்டாமல்

செந்தாமரை யாளைத் தேடிவந்தோம் காணனுமான்
மான்வேட்டை யாடிவருமுன் னிராவணன்தான்
தான்தேரை ஓட்டித் தரணி யிடந்தெடுத்துப்
பூமகளைக் கொண்டிலங்கை போய்ப்புகுந்தா ரம்மானை.
நாமவளைத் தேடி நடந்துவந்தோம் காணனுமான்

என்றார் பெருமாள் எழுந்திருந்து தெண்டனிட்டு
நின்றா னனுமான் நெடுநேரம் வாய்புதைத்து
ஆதிபா ருலகை அடியளந்த மாயவரே
இதுவோ பொருட்டாய் எழுந்தருளும் எம்பெருமாள்
எட்டிலங்கை வென்று இலட்சுமியை மீளவிட்டுச்

சுட்டிலங்கை கொள்ளவல்ல சுக்ரீபன் என்றொருவன்
அமட்டி யிலங்கை அழித்தரக்கனைச்செயித்து
சிமிட்டி முழிப்பளவில் சீதை யிலட்சுமியைக்
கொண்டுவந்து சன்னதியில் கூட்டவல்ல சுக்ரீபன்
தெண்டிரை சூழெண்ணும் திசதரனார் தன்வரத்தால்

காட்டகத்தில் வாழும் கலைக்கோட்டு மாமுனிக்காய்த்
தாடகையைக் கொன்ற சகாயம்போ லெங்களுக்குச்
சோலைவிட்டு நாடளந்த சுக்ரீப னுக்காக
வாலிதனைக் கொன்று மலர்க்குழலாள் தாரகையைத்
தாலிகட்ட வல்ல சகாயம் பண்ணவல்லீரோ

நீல முகில்மேனி நிமலரே என்றுசொன்னான்.
என்னச் சீராம னிலட்சுமண ரென்சொல்லுவார்.
சொன்னபடி செய்துதர சுக்ரீப னெங்கேஎன்றார்.
அந்நா ளிகையில் அனுமான் விரைந்தோடி
முன்னாக வந்து முகுந்தன் பராக்கிரமம்

மன்னான வாலியுயிர் வாங்க உபாயந்தனையே
சொன்னானே சேதியெல்லாம் சுக்ரீப னுக்கனுமான்
வாரிக்கை வீசி வருமனுமான் சொற்கேட்டு
மூரிக்கை கொட்டி முறுவலித்தான் சுக்ரீபன்
தம்பங்கந் தீர அறியாதார் தாயெனக்கு

என்பங்கந் தீர இவனோ அறியேனென்றான்.

### அனுமன் உரைத்த இராமன் பெருமை

மாயவன்காண் வைகுண்டம் வாழும் பெருமாள்காண்
ஆயன்காண் வாழும் அயோத்திக் கரசன்காண்
ஓரடியா லிந்த உலகை அளந்தவன்காண்
நீரழியுஞ் செஞ்சடையோன் என்னும் நெடியோன்காண்

சங்குசக்கரத் தால்வரத்தைத் தவிர்க்க வல்லவன்காண்
எங்குந் தானாக இருக்கவல்ல மாயவன்காண்

### இராமன் சுக்ரீவன் சந்திப்பு

என்றா னனுமான் எழுந்திருந்தான் சுக்ரீபன்
சென்றான் பெருமாள் திருமுன்பே சீராக
எவரை வணங்க அனுமான் எனக்கேட்டான்.
அவனி முழுதும் அளந்தார் இவரென்றான்
மையாரு மேனியனை மதியாமல் சுக்ரீபனொரு
கையால் தொழுது கடக்கநின்றா னம்மானை.
அடைத்துக் கடலை அரக்கர்பதி அழிக்கப்
படைக்குத் துணையாக வருவையோ பார்த்திபனே.

தோடணிந்த வாலிக்குத் தோராமல் சுக்ரீபன்
நாடறியச் சொல்லுகிறோம் நாமுனக்கு நன்றாகப்
பெண்ணணங்கு தாரகையைப் பெண்டுவைத்து நீயிருந்தால்
மண்ணுலகை யாளுகைக்கு வாலிதனைக் கொல்லுகிறோம்.

### சுக்ரீவன் ஐயம் அகற்றல்

ஆலால மேழு கடலை அடைத்தவனென்

வாலிதனைக் கொல்லும் வலுமான நானறியேன்
சோலையினம் பாரளந்த துந்துமியைப் பேர்த்தெடுத்தால்
வாலிதனைக் கொல்லும் வகையிதுகா ணம்மானை.
வாசமுத்த தாளால் வரவுருட்டி மெள்ளவைத்து
வீசிவிட்டார் துந்துமியை விண்ணுறவே யம்மானை.

வாழுங் குளக்கரைக்கே மரனாக மேல்முளைத்த
ஏழு பலாமரமும் எய்யுமென்றா ரம்மானை.
வண்டலர்சூழ் பொய்கைக் கரையில்நின்ற மாமரத்தை
வண்டு நிறத்தவர்தான் வாலையுற மிதித்து
வாழு முலகரிய மரனாக மேல்முளைத்த

ஏழு பலாவுருவ எய்தனர்கா ணம்மானை.
கண்டிரண்டு கண்ணும் களிகூர்ந்து காதலித்து
எண்டிசையு மெண்ணு மிலங்கை யிடந்தெடுத்துக்
கொண்டுவர வாலிதனைக் கொல்லுமென்றா ரம்மானை.

## வாலி வதை

அண்டர் பெருமாள் அதிபிரியமாய் மகிழ்ந்து

தண்மதியும் சூரியனும் அக்கினியுஞ் சான்றாக
அல்லைப்பொரு மேனியனார் அம்பைத் தெரிந்தெடுத்து
வில்லுக்கு நேரே மிகவே தனுப்பார்த்துச்
சொல்லுக் கரசன் சுக்ரீபா அஞ்சாதே
மல்லுக்கு வாவென் றழை வாலிதனை இப்பொழுதே.

## வாலி சுக்ரீவன் சண்டை

வேலைவிட்டு நாடிழந்த வேத்தியனார் சொற்கேட்டு
சேலைகட்டி மற்பிடிக்கச் சென்றணைந்தான் சுக்ரீபன்
வாலிகட்டிக் கொண்டெடுத்து மண்மேல் விழப்போட்டுக்
காலால் விழவுதைத்துக் கழுத்தை நெரித்தெடுத்து
வீசிவிட்டான் போய்விழுந்தான் விண்ணுறவே சுக்ரீவன்

மோசம்போய்த் தானெழுந்து முகுந்தர் தமைநோக்கிக்
கண்ணாரே யும்மைக் கனக்கமிக நம்பியபின்

எண்ணமெனென் கோடி இழந்தேன் மூனைகளென்றான்.
ஏற்றுஞ் சிலைக்கை இராமரே யும்முடைய
வார்த்தை தனைக்கேட்டு மதியிழந்து விட்டேனே.

என்னாணை தம்பி இலட்சுமணர் தம்மாணை
உன்னாணை யுங்கள்முகம் ஊடறுக்க வொண்ணாமல்
நின்றுவிட்டேன் கண்டாய் நெடுங்கணையைத் தான்தெரிந்து
இன்றுநம்மை நம்பி எடுத்தமல்லுச் சேர்ந்தவுடன்
மானேந்துங் கையான் மகாதேவர்[1] தன்னாணை

தானேந்து வாலிதனைத் தப்பாமல் கொல்லுகிறேன்
காந்த மலரைக் காதிலடை யாளமிட்டுப்
பூந்து பொரவிடுத்துப் போயே ஒளித்திருந்தான்.
நம்பாமல் தம்பி நடுவே மறுமனதாய்
அம்பார் சடையார்[2] அரனைத் துணையாக

மெத்ததிகம் கொக்கரித்து வீரபாசை யுங்கூறி
மத்தகத்தில்[3] ஆனைபோல் மதம்பொழிந்து சுக்ரீபன்
நின்றுதித் ததுமிக்க நிலத்தை யுறமிதித்து
இன்று தெரியுமிடா இனிவாடா வாலியென்றான்.
மண்ணதிர விண்ணதிர வான்முகடு தானதிர

எண்ணரிய அட்டகிரி எட்டுங் கிடுகிடென
மென்றுபல்லைத் தான்கடித்து விழியால் விளக்கெரியக்
கொன்றுவிட வாலி கோவித் தெழுந்திருந்தான்.
அப்போது வாலி அகமுடையாள்[4] என்சொல்வாள்
இப்போ மதியாமல் இவன்வந் தெதுப்பானேன்

தடக்கை யுடையானே தட்டுப்படப் போகிறீர்
வடக்கிலும் வேடன் இருவர்[5]வந்தா ரென்றுசொல்லிக்
கடுக்கைச் சடையாரோ[6] காயாம்பூ மேனியரோ[7]
படைக்குத் துணையாக வந்தார்கள் பாருமென்றார்.
புன்னை மலர்க்குழலாள் புத்திசொல்லக் கேளாமல்

---

1 சிவபெருமான் 2 கங்கை முடி சூடிய சிவன் 3 யானையின் நெற்றி 4 தாரை 5 இராமலக்குமணர் 6 கொன்றை சூடிய சிவ பெருமான். 7 நீலவண்ணத் திருமால்

தன்னிகரில்லா வெற்றித் தாடாளன் என்சொல்லுவான்
மின்னுங் கடல்புடைசூழ் மேதினிக்கு மப்பாலும்
என்னில் மிகுந்த பெலவானு மில்லையென்று
சிரித்தான் மிகவாலி தீப்பறக்கக் கண்ணாலே

### வாலி வதமும் வாதமும்

விரித்துக் கரத்தை மிகத்தட்டிக் கொக்கரித்து
நெருக்கிப் பிடித்தளவில் நீலவண்ணர் கண்டுகொண்டு

### விருத்தம்

வெளியிலே மாயன் நிற்க
வெகுண்டுடன் வாலி தானும்
அளிகள்[1]சூழ் மலரே போல,
அகன்றனன் சுக்கி ரீபனைத்
தளிரிலே வார்த்த நீர்போல்
தம்பியைக் கீழே போட்டுச்
சுருளித்த கதிரோன் போலச்
சுக்ரீபன் தன்மே லிருந்தான்.

### நடை

ஏற்றமுள்ள மாயன் இராமசரந் தொடுக்க
ஊற்றமுள்ள வாலி உடல்துணியப் பட்டதுவாம்.

### விருத்தம்

நெஞ்சிலே பட்ட அம்பை
நெடுங்கையாற் பிடித்து வாலி,
அஞ்சிலே ராம னென்னும்
அவர்சிலை எழுத்தைக் கண்டு
செஞ்சிலை வீரா யுந்தன்
சேவுகத் தனங்க ளெல்லாம்
துஞ்சுவாய் எந்தன் முன்னே
தோன்றிநின் றெய்தா யாகில்

1 வண்டுகள்

### நடை

அம்பைப் பிடித்து அவன்வாலி என்சொலுவான்
உம்பர்க் கரசே ஒளிசூடியோ[1] உங்கள்குலம்.

### விருத்தம்

வாலிதன் மார்பி ருந்து
மாயனை முனிந்து சொல்வான்
காலியே மேய்த்த வித்தாய்
காணடா எந்தன் வீரம்
கோலியே சரந்தொ டுத்துக்
குறித்துட னெய்ய வந்தாய்
வாலி மாரறியு மீதோ
வந்தவற் கழகி தம்மா.

### விருத்தம்

வீரமே செய்ய வந்தாய்
மேதினி அளந்த மாலே
தூரமே போந்த பின்பு
தோகையை இழந்து விட்டாய்
சோரமே செய்ய வென்றோ
சொற்பனங் கண்டு வந்தாய்
தாரமே இழந்தார் தம்மைத்
தாரமிழந் தார்தாங் குவரோ.

### நடை

தார மிழந்தாரைத் தாரமிழந்தார் தாங்குவரோ
நீராழி பாம்பணையில் தூங்குகின்ற நெட்டூரா[2]
வெல்லேனோ உன்கரத்தில் வில்லைப் பறியேனோ
எல்லாருங் காணஉன்னை என்னெதிரே கண்டேனாய்க்

கொல்லாம லுன்னைக் கொடியசினந் தீரேனோ
வந்தரக்கன் சிக்கெனவே வாலி மயிருடனே

---

1 சூரியன். 2 கொடியவரே.

அந்தரக்கள் கட்டுண் டிருந்த தறியாயோ
சொன்னபோர் வெல்லறியாச் சுக்ரீப னுக்காக
என்னையுங் கொல்ல எழுந்ததோ கையுமக்கு.

### வெண்பா

முன்னே எனக்கு மொழிந்தா லவன்முடியைத்
தின்னே திருமுன்பு சேரேனோ—என்னே
வலியப் பொருசிங்க மாட்டாதோ கேட்டேன்
எலியைத் துணை கொண்டா யின்று.

### நடை

இந்நா ழிகையில் இலங்கைப் பொடிபடுத்தி
அந்நா யகியை அழைத்துவர மாட்டேனோ
என்றுதான் வாலி இராம சரத்துடனே
நின்று திகைத்து நெடுமால் முகனோக்கிப்
புழுகார்[1] புயத்தரசே போறேனான் என்மகனே
அழுதான் மிகவாலி அங்குதனைத் தான்நினைந்து

### அங்கதன் அழுகை

வாலி மயங்கியழ மைந்தன் கதறிவந்து
காலில் விழுந்து கதறினர்கா ணம்மானை.
அந்தப் பலமுடைய ஐயரே யும்மையினி
எந்தப் பிறப்பில் இனிக்காண்பேன் என்றழுதான்
மைந்தன் கதறியழ வாலியுயிர் போகாமல்

சிந்தை கலங்கிச் சிவனே எனவழுதான்
வாசப்புவி யில்பறக்க வையத்தார் மக்கள்சுற்றம்
ஆசைப் பிறப்பை அழியாமல் வைத்திலையோ
வம்பிட்டு நாடளந்த மாயவனார் தப்முடைய
அம்புக் கிலக்காய் இருந்தீரோ என்றழுதான்.

---

1 புனுகு மணம் பொருந்திய

## தாரையின் தவிப்பு

தாராரும் பூங்குழலாள் தாரகையும் வந்தலறி
ஈரே ழுலகதிர ஏங்கி விழுந்தழுதாள்
தேராத சேவுகனே துந்துமியைக் கொன்றவனே
காராழி தன்னைக் கடைந்தமுதங் கண்டவனே
மட்டுறையுந் தோளானே வாளரக்கனைவாலில்

கட்டிவைத்த சேவுகனே கண்ணாளா கட்டழகா
என்று வாரிஎடுத்து மடிமே லணைத்தவனே
குன்றெடுத்த தோளானே குற்றமிவன் செய்தானா
நன்றுநடு வெண்ணாமல் நாரணரே கொன்றாயே.

### விருத்தம்

மரங்கள் ஏறிக் கனிகள்தின்று
வாழும் புனத்தே யாமிருந்தோம்
கரங்கள் கூப்பி எப்பொழுதும்
கயிலை மலையைக் கைதொழுவோம்
அரங்கனே எம்மை யாளும்
இராமனே ... ...
குரங்கையோ எய்ய வென்று
குறித்து வில்லு வாங்கினீரோ.

### நடை

என்றவர்கள் தான்கூற இராமச்சந் திரருரைப்பார்
அஞ்சாதே சேவுகனே அறியாமல் எய்தோம்நாம்
நஞ்சோதி யாணையிந்த நாலுமறை தன்னாணை
என்னாணை தம்பி இலட்சுமணர் தம்மானை
உன்னாணை உன்மே லுருவியபுண் ணாத்துகிறோம்.
... ... ... ... ...
சென்றுபோர் வென்று சினேகமுடன் ஏகுமென்றார்.

### விருத்தம்

கொம்பிற் றூங்கும் மாங்கனியும்
கொடிய வருக்கைப் பிலாச்சுளையும்

நம்பித் தின்றோம் நாந்திரிவோம்
நாரா யணனுக் கென்செய்தோம்
தம்பித் துணையே சாரதியே
தக்க தறியும் பெரியோனே
அம்பிற் கிடந்த திருநாமம்[1]
அடியேன் தலைமேற் கொண்டேனே.
... ... ... ... ...

### நடை

பட்டங்கட்டிச் சுக்ரீவனைப் பாரித்தார் அம்மானை.
சீராகச் செங்கோல் செலுத்தி யரசாண்டு

தாரகையைப் பெண்டுவைத்துத் தானிருந்தான் சுக்ரீவன்
அந்நேர மாயவனும் அரிய இலட்சுமணனும்
முன்னுள மாருதியும் மூவர்களும் தான்கூடி
அந்தவனங் கடந்து அறுகாதம் போயிருந்தார்
சிந்தை கலங்கித் திகைத்திருந்தார் மாயவரும்

தம்பி இலட்சுமணர் தமையனுட னேதுசொல்வார்
வெம்பி முகம்வாடி மெலிந்து இருப்பானேன்

### விருத்தம்

தினைத்தனை வயிறிலாச் சிற்றெறும்புகள்
வனத்திடைத் திரிவதும் வருந்தி யங்ஙனே
அனைத்துள உயிர்களு மருளு மெங்கனே
மனத்துயர் நீங்கின வில்லை மன்னரே.

எண்ணிய கருமமும் இராவணன் சேனையும்
கண்ணிமைப் பொழுதொரு கணைக்குப் பற்றுமோ
அண்ணல்தந் தேவியை அருஞ்சிறை வைத்து
மண்ணுள்ள போதெலாம் வார்த்தை நிற்குமே.

### நடை

என்று மனந்தேறி இருவருந்தா னுட்புழுங்கி
பொன்னிலங்கை புக்களித்துப் பொற்கொடியை மீட்டுவரத்

---

1 " இராமன் என்னும் செம்மை சேர் நாமம் "

தன்னைமன்னர் வந்தழைக்கத் தானிருந்தான் சுக்ரீவன்
முன்னுமுகில் வேணியனார் மேகவண்ணர் தூதுவிடச்
சொன்னதொன்று மெண்ணாமல் சுக்ரீபன் வீற்றிருந்தான்.

### விருத்தம்

வாரியைக் கடைந்த வாலி
மார்புறத் துளைத்த அம்பு
கூரினும் குறைந்த தில்லை
கொன்று நாமிங் கிருந்தோம்
தாரகை தனக்குத் தானே
தாரமாய்த் தந்தோ முங்கள்
காரியத் தளவே சொல்லீர்
காதலித் துறவு தானே.

### நடை

தந்தமையன் வாலிதனைத் தப்பாமல் கொன்றுவந்த
அந்தம் பிருக்குதென்றான் அஞ்சி யெழுந்திருந்தான்
கூட்டி எழுபதுவெள்ளம் குரக்குத் தளத்துடனே
காட்டில் பவுஞ்சுடனே வந்துகண்டான் சுக்ரீவன்

### விருத்தம்

மெத்தவே மனம கிழ்ந்து
வேந்தனுந் தம்பி தானுஞ்
சுற்றனாய்க் கதிரோன் தந்த
சுக்கி ரீபனைத் தழுவி
மற்றநா ளிலங்கை சென்று
மாமகள் தன்னைத் தேடிப்
பித்தனா யிருந்த வெந்தன்
பின்னது தெளிந்து கொண்டார்.

## வானரங்களுடன் இராமன் கூறல்

### நடை

எண்ணமில்லா வானரங்கள் இத்தனையும் தான்பார்த்தும்
பொன்னன மேனியனார் புழுக்கமிகச் சொல்லலுற்றார்.

முந்தப் பெருமாள் அனுமான் முகம்நோக்கி

அந்தக் குமுதன் நீலன் அங்குதனும் சாம்புவனும்
கானகத்தில் வாழும் கவிக்குலங்கள் தானிருக்க
வீரச் சிலையேந்தி விதித்தானே வேதாவும்
மையாருங் கண்ணி மணவாளர் வேதியனாய்
... ... ...பாத்து அனுமான் வாவென்றழைத்து

... ... ...வாழும் திருவாழி கைக்கொடுத்து
... ... ...சேனை அணியிலங்கை புகலறிந்து
... ... ...கொங்கை மின்னை ஆராய்ந்து
... ... ...தேடி வாருமென்றார்
... ... ...போமென்றார் தூதாக

அந்நேரந் தானும் அனுமான் எழுந்திருந்து
மின்னான மாயவரே விண்ணப்பங் கேட்டருளீர்

## விருத்தம்

சாம்புவ னொருவ னுண்டு தழலொரு குமுதன் உண்டு
ஓங்கிய பனச நீலன் உரஞ்சொல்ல வசந்தனுண்டு
ஆங்கிய முசுவும் கரடி எழுபது வெள்ளஞ் சேனை
ஈங்கிவை இனிதி ருக்க என்னைஎன் விதித்த தென்றான்.

## நடை

சொன்னீர் அடியேனும் நானும் போறேன்
எந்தவகை யாகிலும்நான் எங்கெங்குந் தான்தேடிக்
கண்டு வருவேன்நான் காயாம்பூ மேனியனே
அண்டிவரும் பேர்கள் அடியேனுடன் அனுப்பீர்

அந்தமொழி கேட்டு ஆயருமங் கேதுரைப்பார்
இந்தப்படை வீரரில் எவனடா போறவன்
அந்தக்குமுதன் நீலன் அனுமானும் ஆதித்தனும்
இந்தக் கடலுலகில் ஏரேழுந் தானறிய
பொங்கியசீர் மாலுமப்போ போகவிட்டா ரம்மானை.

## விருத்தம்

எழுந்திருந் தனுமன் வந்து
இராமனை வணங்கி நின்று
மொழிந்தனர் முகத்தை நோக்கி
மூலமே சரண மென்று
அழிந்தனன் இலங்கை வேந்தன்
அதுதிண்ண மென்று சொல்லிக்
கழிந்தனன் அடவி யெல்லாம்
கங்குலில் வந்து சார்ந்தான்.

## நடை

நீலன் குமுதனுடன் ஆதித்தனுமே யனுமான்
மாயனுட ஏவலினால் வந்து பறந்துமிக
தாயுலகில் ஈரேழும் தப்பாமல் தேடவென்று
கம்பார் குழல்மடவாள் காரிகையைக் கண்டுவர
சப்பரதம் சொல்லி வழிநடந்தார் தூதுவர்கள்
... ...வருந்தான அத்திசையுந் தான்பார்த்து

... ...பாதாளம் பூமித் துவாரத்திலே
திக்குந் திசையும் தெரியாமல் நிற்கலுற்றார்.
அந்த இருளில் அரக்கிதான் நிற்கலுற்றாள்
தன்னந் தனியே தவசுநின்றாள் தானரக்கி
கன்னல்மொழிக்[1] காரிகைதான் கண்ணேறத் தான்பார்த்து

என்னவென்ன காரியங்கள் தேடிவந்தீர் என்றுரைத்தார்
நாமகளார் தான்மாயன் நாரா யணன்தேவி
பூமகளைத் தேடிவந்தோம் பொற்கொடியே என்றுரைத்தார்
கண்ணைச் சிமிட்டிநின்று காரிகையாள் என்சொலுவாள்
எண்ணற் கரியஅது இங்கில்லைபோ மென்றுரைத்தார்

ஏக மனஞ்சிந்தி இங்கேவழி இல்லையென்றாள்.
அந்நேரந் தானனுமான் அறிவுமிக வுருகி
எல்லா ரையுங்கூட்டி இராசியங்கள் பேசலுற்றான்

---

1 கரும்பு போலும் இன்சொல்

அல்லாரு மேனி அரக்கிதாம் நம்மைப்பேர்
சொல்லாது சொல்லியவள் குக்கிஷமாய்ப் பேசுகிறுள்

இதுவோ வாரிதான் எல்லாரும் பாயவென்ருர்
மதுவோ செறிந்திலங்கு மன்னவா மாருதியே
இந்தஇரு லில்பாய எங்களுக்கும் வாராது

**அனுமான் போகமுற்படல்**

அந்த மொழிகேட்டு அனுமானு மென்சொல்லுவான்
ஏகநினைத்து உள்ளே இமைத்து நொடிப்பளவில்

போக நினைந்து புறப்பட்டான் தானனுமான்.
அஞ்சினுர் சத்தே அனுமானிட தூதுவர்கள்
நஞ்சாழி தாண்டி நடக்குமுடி யாதென்ருன்.
... ... ...நான் நேரிலங்கை புக்கறிந்து
சிராமன் தேவியரைத் தேடி யடிபணிந்து

வெற்றிகொண்டு மீள்வேனுன் வேந்தரே மீளேனே
என்றவைகைக்குச் சொல்லி எழுந்திருந்து நின்றனுமான்

**அனுமன் சபதம்**

**விருத்தம்**

ஆண்டா னுதல் அவனுதல் அன்றுசொன்னவன் தானுதல்
மீண்டா ருண்டாய் மீளுங்கொள் வெற்றி யல்லது
யான்மீளேன்
தீண்டா திலங்கையைத் தீயிட்டுச் சீதையைச் சிறைமீ
ளேனுகில்
வேண்டா தாளே வேண்டியிருந்த வெட்கக் கேட
ஞவேனே

**விருத்தம்**

அஞ்சினுர் போகை போகை
ஆற்ருதார் போகை போகை
குஞ்சி வாயமுத முண்ட
கோழைகள் போகை போகை

எண்டிசை யிலங்கை புக்கு
இராகவன் தேவி தன்னைக்
கண்டியான் மீள்வ தன்றிக்
கனவிலு மீளே னென்றான்

### நடை

தென்னிலங்கை புக்கறிந்து சீராமனிட தேவியரைக்
கண்டடங் கடிபணிந்து கண்குளிரத் தெண்டனிட்டு
கொண்டு மீள்வேனான் என்றங் கெழுந்திருந்தான்

### விருத்தம்

சலந்தலை வீரனே கேண்மின்
சலந்தாவு[1] கைக்கைய மில்லை
நலந்திகழுங் கோடிய நன்னுதலைத்[2]
தேடிநானுங் காணே னாகில்
மலங்குதல தசமுகனைப்[3] பிடித்து
வான்சி றையி லிடுதல்
இலங்கை யிடந்துகொடு வருதல்
இரண்டிலு மொன்று தவிரேனே.

### விருத்தம்

பரிந்துநான் பாய வென்னில் பகலவன் மறைந்து போவன்
விரைந்துநான் பாய வென்னில் விண்ணவர் வெருவி யோடும்
முனிந்துநான் பாய வென்னில் முழங்கிய கடல்க டப்பேன்
இருந்தநான் பாய வென்னில் இலங்கையு மழிப்பே னென்றான்

### நடை

சிக்கென்று கொண்டு சீராமசந்திரன் தூதன்
கொக்கரித்துத் தாண்டிக் குதித்தங் கொருநொடியில்
அக்கடலைத் தாண்டிநின்றான் அங்கார தாடகைதான்[4]
புக்கவனுந் தான்திகைத்துப் போகவழி காணாமல்

---

1 கடல். 2 சீதை. 3 இராவணன். 4 அங்காரதாரை.

## அனுமனை அங்கார தாரை மறித்தல்

மின்னாகத் தாண்டி விரைய வருகையிலே
மன்னாக மென்னும் மலையை மிதித்துவந்து
அந்த மலையில்நின்று ஆகாசமே பார்த்தான்
கொந்தலரும் பூங்குழலாள் கோலியே வந்துநின்றாள்
வான்முட்ட வாயகன்று வயறுகடல் வழியாய்த்
தான்மட்டு நின்றெதிர்த்தாள் அங்கார தாடகைதான்

### விருத்தம்

சென்றனன் கரையின் மேலே சீருள இலங்கை பாய
ஒன்றிய மனத்தி னோடு முரைக்கவே பாய வென்று
நின்றனன் மேலை வாசல் சிறப்பினைக் கண்டு கண்டு
நின்றதென் என்று நின்று நகைத்தனன் இராம தூதன்

### விருத்தம்

வாசலில் சென்ற பின்பு
வழிதனை விட்டி டென்னக்
காசமா முகிலே போலக்
கறுத்துடல் நிமிர்ந்து நின்று
பாசியே படர்ந்த பல்லும்
பறியல்போல் வயிறுங் காட்டி
ஆசினம் போல நின்றாள்
ஆங்கார தாடகை யென்பாள்.

### விருத்தம்

ஓங்கியே நிமிர்ந்து நின்றாய்
உயர்பெரு நகரிக் கேகப்
பாங்கினால் வழிகாட் டென்னப்
பயமின்றி அரக்கி சொல்வாள்
ஓங்கியே அயோனி புக்கு
உயர்பெரு வாயிற் பாய்ந்து
பாங்குடன் பாரில் போகப்
பண்புடன் வழியு மில்லை.

## நடை

அந்நேரந் தானனுமான் ஆழிதனை யெறிந்து
விண்ணாகைத் தாண்டி விரைந்துகொடு போகவென்று

இமைத்து விழிப்பளவில் நீர்முழுகி யேந்தவென்று
அமைத்த கருங்குழலை அங்கே முகம்நோக்கி

## விருத்தம்

எழுமதில் இலங்கை மூதூர்க்
கெதுவழி மயிலே என்ன
வழியிது வென்று சொல்லி
வாய்விரிப் பளவில் உன்னி
பவளஎன் னுடலைப் பேணிக்
காத்தெனப் புகுந்து வாயில்
பழுதறப் பாய்ந்து போனான்
பச்சைமால் தூதனாங்கே.

ஆழியும் புகவெறிந்து
அந்திரத் தூடு போக்கிக்
காளியான் வாசல் காக்கும்
தாரகை வாயிற் பாய்ந்து
ஆழியான் பள்ளி கொள்ளும்
பாற்கடல் தன்னில் மூழ்கித்
தாழுமுன் னாழி தன்னைத்
தான்கரந் தன்னி லேற்றான்.

## நடை

கங்கையிலே வந்தெதிர்த்த கன்னிதனை விட்டகன்று
அங்கையி லாழிதனை ஆகாசத்தே யெறிந்து
வாயில் புகுந்து செவியில்புறப் பட்டோடித்
தோய[1] முழுகிச் சுடராழி தானேற்றான்.

---

1 நீர்

## விருத்தம்

மண்டலந் திடுதி டென்ன
மறுகடல் மோதி யோட
எண்டிசை சுமந்த நாகம்
யாவரும் வெருவி யோடத்
தொண்ட வாளரக்கர் சேனை
சூல்வயி றுடைந்த தென்ன
அண்டமுங் குலுங்கச் சென்று
அனும னார்ப்ப ரித்தான்.

## நடை

ஏகினான் மூதூர் இலங்கைமா காளிகண்டாள்
சூதினால் வாரவனைத் துணிக்கஅவள் கண்டாளே,

## விருத்தம்

எட்டுக் கையாள் நாலு முகத்தாள் உலகீரேழும்
தொட்டுப் பொருத சோதி நிறத்தாள் சுடர்க்கண்ணாள்
முட்டுப் போரில் மூவுலகெங்கும்... ... ...
கட்டிச் சீறுங் காமபெலத்தாள் கடைச்சமையில்லாதாள்.

## நடை

........சூலமுடன் வெஞ்சினத்தாள் வந்தெதிர்த்தாள்

நோக்கினான் சூலமுடன் தள்ளாடிப் போய்விழுந்தாள்
தாக்கினான் வாளனுமான்... ... ... ...
தள்ளாடி நோக்கியவள் தாடையிலே விழுந்தாள்
அந்நேரந் தானனுமான் அவள்தலையி லேமிதித்து
மின்னாகத் தாண்டி விரையவே கோட்டைதனில்

வண்டு ரூபமாக மதிலிலங்கை புக்கறிந்து
அந்தரத்தே வந்து அனுமானுங் கண்டுமிகச்
சந்திரர்கள் சூரியர்கள் தங்க ளொளியுடனே
முந்தெதிரே வந்து முகங்கண்டா னனுமானும்

### விருத்தம்

நீருமறி யாமலே நிலவுமறி யாமலே
பேருமறி யாமலே பிறருமறி யாமலே
ஊருமறி யாமலே உருவுமறி யாமலே
ஆருமறி யாமலே அரக்கர்பதி புக்கான்

### அனுமன் சீதையைத் தேடல்

வந்து புகுந்தறிந்தான் வாளரக்கன் பட்டணத்தே
வெற்றிசெறிப் பட்டணத்தில் நான்தேட வேணுமென்று

### விருத்தம்

மன்றுக ளிடங்கள் தேடி
அணிநகர் தெருக்கள் தேடிச்
சென்றுமுன் பொருத ழிக்குஞ்
சேவுகர் தெருக்கள் தேடிக்
குன்றமர் மடவார் வாழுங்
குறுந்தெருக் கள்கோ டிதேடி
மன்றலர் தாம மேவு
மன்னவர் தெருக்கள் புக்கார்.

### நடை

மன்றுதெரு வீதியெல்லாம் வந்துமெல்ல ஆராய்ந்து
சென்று புகுந்தான் சித்திரக்கூ டந்தனிலே
சங்கு முழங்குந் தமிழ்க்கூடந் தான்தேடி

மங்கல வீதி வகைவகையே தான்தேடி
ஆடகக் கோவில்[1] அணிமதில்கள் தான்தேடி
நாடக சாலை நடுத்தெருக்கள் தான்தேடி
முக்காலும் மூன்றுநூறாயிரம் தெருக்கள் தான்தேடி
திக்காம லெங்கும் தெருத்தெருக்கள் தான்தேடி

பத்துத் தலையுடையான் பட்டணத்தி லுள்ளதெரு
அத்தனையுந் தேடி ஆரணங்கைக் காணாமல்

---

1 தங்கக் கோயில்

வாடிமனந் தளர்ந்து வண்டுரூபமாக எங்கும்
தேடியலுத்துத் திகைத்து நின்று தானனுமான்

### விருத்தம்

கருதி நாழிகையில் பாயக்
காலனும் வெருவி யோட
அரியதோர் தூதன் றானும்
அரக்கம்தர் பதியி லேகி
ஒருவனே ஒருபன் னீரோ
சனைதெரு வும்ஆ ராய்ந்து
... ... ... ... ...
நூறுயிரந் தெருவும் தேடினான்.

அந்த வுருமாறி அனுமான் மறுவுருவாய்
வந்து புகுந்திருந்தான் வாளரக்கன் பட்டணத்தே

வட்டமதில் கடந்தான் மாணிக்கவாசல் புகுந்தான்
முட்ட மணிமுத்தின்படி வாசல்தான் கடந்தான்
சிந்தைத் துயரால் திகைத்துத் திகைத்துநின்று
அந்தப் பவளம் அழுத்தியவா சல்புகுந்தான்
மின்னும் படிவாசல் வெள்ளிப் படிகடந்தான்

பொன்னும் படிவாசல் புகைபோலப் புக்கறிந்தான்
ஆராய்ந்து எங்கும் அடவடவே தான்தேடிச்
சீராய்ந்த மால்மலர்ந்த சிங்கா சனம்புகுந்தான்

### உறங்கும் இராவணனைக் காணல்

பட்டுமேற் கட்டிப் பவளத்தாற் கால்நாட்டி
முட்டமணி மண்டபத்தே முத்தா லிடையழுத்தி

மாணிக்கம் நின்று வயிர விளக்கெரிய
சாந்து புழுகுபன்னீர் சந்தனமும் குங்குமமும்
சேந்த மலரணைக்கே சித்திரவித் தாரமுடன்
வெள்ளிவளைக் கையாரும் வேந்தன் இராவணனும்
பள்ளிகொள்ளும் பாவனையைப் பார்த்துநின்றான்
காணனுமான்

## விருத்தம்

ஒருபது முடிதனி லொளிவி டும்படி
கருதுவா வாயினிற் கணையி றந்தது
இருபது புயந்தனை வண்ணப் பாற்குமேல்
பருவரை இருபது படிந்த தொக்குமே.

## நடை

ஒருபது சென்னி ஒழுகிய செம்முகமும்
இருபது தோளும் இலங்கைமன்னன் கைத்தலமும்
பருவரைக் கொக்குமென்று பார்த்துநின்றான் காணனுமான்

## உறங்கும் மண்டோதரியைக் காணல்

வண்டாடும் பூங்குழலை வாய்த்ததொரு பெண்கொடியை
அண்டியே தான்கடந்து ஆனதொரு பெண்ணரசை
வண்டோதரி தனையும் வாகுபடப் பார்த்துநின்று
எண்டிசையு மெண்ணும் இயலான மாருதியும்
ஆரிவளோ என்று அனுமா னறியாமல்

வாரி[1]யிலே கண்துயிலும் மாயனுடை தேவியரோ
சந்தய[2] மென்று சலித்துநின்றான் தானனுமான்
கொந்தார் குழலியரைக் குறித்துநின்று தான்பார்த்து

## விருத்தம்

பூங்குழல் அலைந்து சோரப்
பொருகயல்[3] பீளை பாயப்
பாங்கினால் பழுதி லாத
பவளவா யினது காட்டி
ஈங்கினிக் கிடந்த வாறு
இவனுடை மங்கை யென்ன
ஓங்கிய உடைவா ளேந்தி
ஒளிமுடி அறுக்கச் சென்றான்

1 கடல் 2 சந்தேகம் 3 கண்

### நடை

கொண்டை சரிந்துவிழக் கொடுவாய்கள் நீர்வடிய
வண்டோ தரியாட்கு வாள்விழிகள் பீளையிட
கண்டவர்தா மல்லவென்று கண்ணுலும் பாராமல்

### இராவணனைக் கண்டனுமான் கொல்ல நினைத்தல்

திடுக்கமற நின்றனுமான் சீராவைத் தானுருவி
படுக்கை இராவணன்தன் பத்துத்தலை பிளக்க
எடுத்து முடியை அறுக்கவென்று எண்ணியபின்
பாரெழு மிந்தரக்கன் பட்டணத்தி லுண்டான
சீரழகு குன்றுமென்று செப்பினதை விட்டகன்று

ஆரா அமுதாழ்வார் அவனிமுழு தளந்தார்
சீராம பாணம் திகைக்குமே என்றுசொல்லி

### விருத்தம்

என்றவன் எழுந்தி ருந்து இருபது தோளி னானைத்
துன்றமன் செய்து விட்டால் சுகிறுத மாம்என் றெண்ணிச்
சென்றதோ இராமர் மார்பில் விதிவழி படுவ தென்று
நன்றல்ல கொல்வ தென்று நனவிலே வினவி மீண்டான்

### நடை

எண்ணி யிராவணனை இப்போ முடியறுத்தால்
மண்ணை யளந்தார் மனதுக்கு வாராதே
முட்ட மணிமுடியான் மூண்டனுமான் கைநெகிழ்ந்து
எட்டிவைத்து மீளவந்தான் ஏந்திழையைக் காணவென்று

மண்டபத்தை விட்டு மனது மிகத்தெளிந்து
திண்டுமிண்டு செய்யும் திசையாள ராவணனும்
பூசுமிகச் சாந்தும் புழுகுசவ் வாதுகளும்.
வாசமுள்ள சந்தணமும் மற்றுமுள்ள பன்னீரும்
சேர எடுத்துத் திமிர்ந்தா னனுமானும்

இருந்த விடம்விட்டு இக்காவில் செல்லவென்று
சந்தனஞ்சேர் தோப்பதனில் தான்சென்று தேடலுற்றான்.

மட்டுற்ற சோலை வனக்காவுந் தான்தேடி
அட்டதிக்கு மென்றும் அசோக வனத்தருகே

## சீதையைக் காணாத அனுமான் தண்ணீர் எடுப்பவளை வினவுதல்

விண்ணில் முகில்சொரியும் மேற்றுங் குளக்கரைக்கே
தண்ணீ ரெடுக்கவந்த தையல்நல்லா ரைக்கேட்பின்
அந்நேரந் தானரக்கி அனுமானுக் கென்சொல்லுவாள்
சந்திரருஞ் சூரியருந் தானவருங் காணாத
இந்திரனை வென்ற இலங்கைநகர்க் காவலர்தான்
பொன்னிலங்கை யுள்புகுந்து பூங்காவில் வந்தவநீ
மன்னன்நீ யாரெனவே வகைவகையே சொல்லுமென்றாள்.
கானகங்க ளிலேயிருந்து காய்கனிகள் தானருந்தி
மீனைவென்ற கண்ணாளே மெல்லியரே கேட்டருளீர்
மூவுலகும் மெச்சும் முடிவேந்தர் கொண்டாட
பூவலோகத் திருந்த பூமகளைத் தானெடுத்து
வந்தான் இராவணன்தான் என்றுரைத்தார் மானிலத்தோர்
எந்தலோ கத்தாளோ என்றறிய வந்தோங் காண்

## அரக்கியின் மறுமொழி

அந்த விசாரம் அவள்செவியில் கேட்டுநின்று
கொந்தலரும் பூங்குழலாள் குரக்கரசனே கேளாய்

### விருத்தம்

கற்பக நெருங்கிவெகு அச்சரவில் டிண்டி
காரகில் மராமரம் அடர்ந்ததொரு காவில்
பொற்புற மலர்ந்தபுது மாதவியர் தன்னை
புக்(க)நிரை சூழவன யோகவ னருக்க
விற்பன அரக்க மடவார்கள் புடைசூழ
வெண்மதி பெரும்பகல் விருந்ததென வென்றோர்
அற்பக மெனத்தனியோ ராயிழை யிருந்தாள்
அவருடைய பூமகளென் றுரு மறியோமே.

நடை

தண்ணீ ரெடுக்கவந்த தையல்நல்லாள் சொற்கேட்டு
எந்தம் பிராட்டி யிருக்குமிட மறிந்து

சிந்தை மகிழ்ந்தனுமான் சீர்பாதங் காணவென்று
வந்தே அசோக வனம்புகுந்தா ரம்மானை
அந்தமலர்க் காவுதனில் அங்கங்குந் தான்தேடி
நின்று திகைத்து நெடுமூச்சுத் தானெறிந்து
கன்றி மனமேங்கிக் கலங்கிமிக விருந்தான்

## அசோகவனத்தில் காணாத அனுமன் துயருறல்

### விருத்தம்

சென்றுதான் திருவைத் தேடிப்
புலம்பினான் அனுமான் காணான்
கன்றிய மனத்தி னோடும்
காற்றதன் மைந்தன்[1] தூங்கச்
சென்றுநீ திருவைத் தேடிக்
காண்பைநீ காவி லென்று
கன்றிய மனத்தி னானும்
சொற்பன[2] மொன்று கண்டான்.

நடை

கண்ட வுடனே கருகி முகம்வாடித்
தெண்டிரைசூழ் வையமுள்ள தேன்மொழியே மாதாவே

### விருத்தம்

பொன்னே ரனையதிருப் புயத்தில்
புகுந்திரு வேபூங் கொடியே
மின்னே ரனைய இடையாளை
வேத முதலோன் பெருந்தேவி
அந்நே ரிழையும் பெற்றெடுத்த
அல்லி மலரில் மிகவாழும்

---

1 வாயு புத்திரன் அனுமான்   2 கனவு

பொன்னே மணியே மரகதமே
புலையன் நகரில் புகுந்தாயே.

போயவ னிலங்கை புக்குப்
பூவன மெங்குந் தேடி
மாயன தேவி தன்னை
வனத்தினில் காணத் தேடித்
தீயொரு நான்கு மூன்றும்
திசைகளும் நின்ற தித்துப்
பேயொடு கணங்கள் காக்கும்
புதுவனம் தன்னில் வந்தான்.

**சீதைக்குத் திரிசடை ஆறுதல் கூறல்**

அவ்வளவி லங்கே அசோக வனத்திருந்து
செவ்விள நீர்க்கொங்கைத் திருச்சடையாள் என்சொல்லுவாள்
மேற்கே ஒருகெவுளி[1] மெல்லியலே சொல்லுதுகாண்
வாக்குள்ள மாதாவே மனஞ்சலிக்க வேண்டாங்காண்
என்று திருச்சடைதான் இயம்பினாள் மாதாவுக்கு
நன்று திருச்சடையே நல்லதோ யிந்நிமித்தம்

## விருத்தம்

காலைப் பொழுதில் தென்திசையில்
கருதுங் காக்கைக் குரல்நன்று
மாலைப் பொழுது குடதிசையில்
மதுரப் பல்லி வரவுசொல்லும்
சோலைத் திசையில் குயில்கூவும்
சொலாம கூடுமதியம் கூடியதே.
...   ...   ...   ...   ...

## நடை

பருதி யெதிர்வாசல் பல்லிபலன் சொல்லுகையில்
நிருதர் பதி[2]யழியப் போகுதென்றாள் நேரிழையாள்

---

1 பல்லி   2 அரக்கர் நகர். இலங்கை நகர்

ழலங்காத பட்டணமும் மற்றுமுள்ள மாநகரும்
இலங்கை முழுதும் எரிகொழுத்தப் போகுதென்றாள்
தலத்தில் அரக்கர் தலையுருளப் போகுதென்றாள்
குலத்தியல் மங்கிக் கொடுந்தீப் பறக்குமென்றாள்
அல்லைப் பொருங்குழலாள் அந்தத் திருச்சடைதான்

நல்ல விசயம் நமக்குவரப் போகுதென்றாள்
இந்நா ழிகையில் இராமச்சந் திரன்தூதன்
பொன்னாழி கொண்டுவரப் போகுதென்றாள் பூங்கொடியும்
கன்னல் மொழியாரே கமலத் திருமகளே
அன்ன நடையாரே அஞ்சாதே சொல்லுமென்றாள்

**சீதையை அனுமன் காணல்**

கேட்டு மகிழ்ந்து கிளிமொழியாள் பெண்களுடன்
வாட்டந் தவிர்ந்து மனங்குளிர்ந்தா ரம்மானை.
தாழுங் குழலாளைத் தண்டா மரையாளைக்
கான மயில்கள் விளையாடுங் கானகத்தே
தேன்மொழியாள் வாழும் செழுங்கா னகந்தனிலே

மானனைய கண்ணாள் மலர்மகளார் பார்த்தே
பொன்னான பூங்கிளிபோல் பெண்கள் புடைசூழ
மின்னா ரிடையாரும் வீற்றிருந்தா ரம்மானை.
ஆரிவளோ என்று அனுமா னறியாமல்
பாரமுலைப் பெண்ணணங்கைப் பார்த்துநின்றான் தானனுமான்.

**விருத்தம்**

சென்றனன் வடகீழ் மூலைத்
    தேவி வீற்றிருக்கு மந்த
அன்றியே சோலை யான
    அயோகமன் வனத்தில் புக்கு
நின்றுதான் முகிலை ஒத்து
    நெடியதோர் மரத்தில் பாய்ந்து
சென்றனன் எங்கும் தேடித்
    திருவினைக் காவில் கண்டான்.

வாலது முறுக்கிக் கொண்டு
மரந்தனை ஏறப் பார்த்துக்
காலொடு கவடு தற்றிக்
கண்டனன் யோகந் தன்னில்
மேல்வரும் கொம்பை விட்டு
மெல்லமுன் நடந்து சென்று
வானிடை ராம தூதன்
வந்தனன் என்று சொன்னான்.

## மண்டோதரி கண்ட கனவைக் கணவனிடம் கூறல்

அவ்வளவி லங்கே அரக்க னவன்தேவி
வட்டமுலைச் சடையாள் வண்டோதரி என்சொலுவாள்

எத்திசை யும்வென்ற இலங்கை இராவணனே
கொத்தவனே இன்று கொடியகனாக் கண்டேன்காண்.
கோலி மதிலுடைய கொற்றவனே என்னுடைய
தாலி சிதறித் தரையில்விழக் கண்டேன்நான்.
எந்நில மெண்ணும் இலங்கை இராவணனே

அம்புவியோர் எண்ணும் அரக்கர்குலத் தரசேஉன்
தம்பியர்கள் பட்டுத் தலத்தில்விழக் கண்டேன்நான்
அந்தரத்தோர் மெச்ச அறச்சமத்த னுயிருக்கும்
இந்திர செயித்தும்போய் இறந்துவிடக் கண்டேன்நான்
தலங்கள்முழு தெண்ணுமந்த தளவேந்தே யுன்னுடைய

இலங்கை முழுவதும் எரிகொழுந்தக் கண்டேன்நான்
மாறான மன்னா மணவாளா உன்னுடைய
வீறான வாசல் வெளியறக் கண்டேன்நான்
சேத்தமுள்ள புகழானே தென்னிலங்கைக் காவலனே
ஏத்தமுள்ள வாழ்வும் இறங்கலிடக் கண்டேன்நான்

முகிலே நிகராய் முழங்கு நகரியெல்லாம்
பகலே நரியோடிப் பாழ்கிடக்கக் கண்டேனான்
அங்கே யிலங்கை அரக்க னவன்தேவி
கொங்கைப் புயத்தாளே கொடியகனாக் கண்டபின்பு
இதுக்கு வகைசெப்பும் இலங்கைக்கு ராசாவே

## கேட்ட இராவணன் சீதையை நாடி அசோகவனஞ் சேறல்

அதிமதுரம் பேசிநின்ற அன்னமே நீகேளாய்
செனகரனுர் பெற்றெடுத்த சீதையி லட்சுமியைக்
கனகம் பொதிந்ததொரு கண்ணுன வாழ்மயிலே
உன்னை யகன்றுவிட்டு உலகளந்தோன் தேவியரைக்
கன்னல் மொழியாரைக் கலந்தணையக் கண்டதென்று

அந்நேர மேயெழுந்திருந்து ஆனவி சாரமுற்று
பண்சேனை சூடிப் பலகீர்த்தி நின்றதிரப்
பெண்சேனை யோடே பிரியத்துட னேநடந்து
வந்தான் இலட்சுமியை வைத்த அசோகையிலே
செந்தா மரையான திருச்சடையைத் தானழைத்து

நொந்தான் அரக்கன் மகளை முகம்நோக்கி
குன்றெடுத்த தோளானும் கோபித்தான் தன்மகளை
அன்றுமுதல் விபூஷணர்போல் உடந்தைநீ யவட்கு
அன்றே அழைத்துவரச் சொன்னே னறிந்திலையே
இன்றே அழைத்துவாரீர் என்றான் இராவணன்தான்

அருவார்த்தை சொன்னீரே அய்யரே பாருமினி
திருவார்த்தை சொல்லித் திருவை மனந்திருத்தி
ஒருவார்த்தைக் குள்ளே அழைத்தோடி வாரேன்போம்
போன பிறகு புறப்பட்டு நின்றனுமான்
ஆன விசாரம் விசாரித்தா ரம்மானை.

வண்டலந்த சோலை மரந்தலையில் மீதேறி
புண்டரிகக் கண்ணன் புவியளந்தான் தன்கீர்த்தி
மின்னுமுகில் வேதியனுர் வேதக் கவியனுமான்
பன்னு தமிழ்தெரிந்து பாட லுற்று ரம்மானை
எண்ணு மிலட்சுமியார் எத்திமுகம் பாராமல்

வண்டார் குழலாட்கு மாயவனுர் தூதுவிடத்
தொண்டாக வந்தனுமார் தோன்றி யதுஉரைத்தார்

### விருத்தம்

காகத்தின் கதைஒன்றைச் சொன்னார் அந்தக்
காகுத்தன் திருநாமம் கழறச் சொன்னார்
மோகத்தால் மூக்கரிந்த வண்ணஞ் சொன்னார்
மூலைக்கச்சு நெகிழ்ந்தபடி மொழியச் சொன்னார்
நாகத்தின் மேல்துயின்ற வண்ணஞ் சொன்னார்
நாராயணவென்ற நாமம் சொன்னார்
பூகத்தின் கீழிருந்த வண்ணஞ் சொன்னார்
பூமகளே எனக்கொன்றைப் புகன்றிடாயே.

## அனுமன் இராமதூதனாயின் சீதை அழைத்து வரச்சொல்லல்

### விருத்தம்

என்றசொல் கேட்ட போது
இலட்சுமி தானும் பார்த்து
அன்றியே அருகிருந்த
அரக்கிதன் முகத்தைப் பார்த்துச்
சென்றவன் பக்கலே போய்ச்
சிறந்தநல் வார்த்தை கேட்டு
நன்றெனத் தூதனானால்
நலத்துட னழைத்து வாராய்

## திரிசடை அனுமனை அழைத்துவரல்

### நடை

அந்நேரஞ் சென்று அரிய திருச்சடைதான்
மண்ணையுண்ட நாரணன்தான் வரவிட்ட தூதுவனே
வந்தகுணம் தன்னை வாகுபடச் செப்புமென்றாள்

### விருத்தம்

அரக்கிதான் பக்கல் வந்து
ஆரடா அருகில் வந்தாய்
குரக்குவா னரமே சொல்லாய்
என்றவள் கூறக் கேட்டு

இரக்கமொன் றின்றி வாழும்
இராவணன் தன்னைக் கொல்லப்
பரக்கமுன் தூது விட்டான்
பார்த்திபன் இராம னென்றான்

என்றசொல் கேட்ட போது
ஏங்கியே அரக்கி தானும்
துன்றிய இலங்கை மூதூர்ச்
சோலையில் வந்து புக்கு
நன்றல வார்த்தை சொன்னாய்
நாக்கினைப் பிடாரி வாங்கி
வென்றிசேர் வானுலகத் தேற்றி
விடுவனே ராவ ணன்தான்
அப்படிச் சொல்ல வேண்டாம்
அறிவுடைத் தூதா வென்று
செப்புவ துண்டே யாகில்
சேவடி அணுக வாராய்
விற்படி இராம னான
விண்ணவர் கோமா னெங்கே
தப்பிவா இளைய வில்லி
தன்னுட தூதன் வாராய்

### அனுமன் சீதையிடம் கூறல்

வந்துநின்று தெண்டனிட்டு வாய்புதைத்து என்சொல்வான்
எந்தனுட தாயே என்னுடைய விண்ணப்பங்கேள்

### விருத்தம்

அல்லிமாதே அருணை வில்லியின்
அருளினாலே அனுமா னென்பேர்
வில்லிதூதன் நின்னடி யான்
மெல்லமெல்லக் கண்டு தேறும்
கண்ட மான்பின் போன
கருணை வள்ளலுடைய தேவி

அண்டமெல் லாம்எந் தாயே
ஆழி[1]யிந் தாஆழி யிந்தா.

செந்தா மரையில் வாழுகின்ற
திருவே சினகான் மாமகளே
பைந்தா ரிராம னுமைப் பிரிந்து
பழைய காலத் திருந்தான்காண்
கொந்தா ரிராமன் புயத்தில்
கூடு மின்னே கோமளமே
கந்தா அயோவனத் திருந்த
எந்தாய் ஆழி எந்தாயே.

ஆழியை வாங்கிக் கொண்டு
அருளுடை ராமன் தேவி
தாவியே முகத்தில் கொங்கை
தன்னில்மே லணைத்துக் கொண்டு
காழியான் செய்த பாவங்
கடியதோ காவில் செந்தேன்
வாழியே ராமன் பாதம்
வாழியே இளைய வள்ளல்.

## சீதை அனுமானிடம் செப்பல்

ஐயன்வர விட்டதிரு ஆழிமோ திரத்தைத்
தும்பிக் கருங்குழலாள் கண்டு துயர்நீங்கி,
நம்பி மனங்குளுந்து நாச்சியார் நன்ருக
ஆதரவு கேட்டு அனுமான்வா என்றழைத்து
ஆதரவு கேட்டு மகிழ்ந்திருந்தா ரம்மானே.
மோதிரத்தை வாங்கி முலைமே லணைத்துக்கொண்டு

அன்று பெருமாள் அழகு மிதிலையிலே
வென்றிச் சிலைக்கையால் வியாகம்பண் ணவரவே
அன்று இடத்தோளும் இடக்கண் துடித்தாப்போல்

---

1 கணையாழி (மோதிரம்)   2 திருமணம்

இன்றுதிரு வாழிவர இடக்கண் துடித்ததென்றாள்.
என்கை பிடித்த முழுத்தம்[1]போ லெம்பெருமான்

உன்கை பிடித்தார் உடனிருக்க நீயும்வந்தாய்
சிலையிற் புகழான் சினகரற்கு நன்மகளாய்
நிலையிற் புவியளந்து நீண்டாற்குத் தேவியுமாய்
வலையிற் புகுந்ததளி மான்போல் சிறையிருக்கத்
தலையில் விதிப்படியே தப்பாது தானனுமான்

அந்தப் பெருமாள் அரிய மொழிகேட்டு
இந்தக் கடல்கடந்து எழுநூற்றுக் காதவழி
வந்தபடி சொல்லெனக்கு வாழு மனுமானே
காவலர் சொற்கேட்டுக் குந்திக் கடல்கடந்து
தேவரீர் சீர்பாதம் சிந்தையுள்ளே தானினைந்து

வந்தேன் வழியடிமை செந்தா மரையாளே
பாகாரு மென்மொழியாள் பார்த்தங் கனுமானை
வாகாரும் செயத்தோடே சென்றுவாருஞ் சேவுகனார்.
சாகாமல் என்றும் சமத்தனாய் நீயிருப்பாய்
என்று மிகவாழ்த்தி இயல்புடைய மாதாவும்

கன்றி மனமழன்று காரிகையாள் என்சொலுவாள்
காராரு மேனிக் கருணா கரருமென்னை
நேராகச் சற்றும் நினைப்பரோ நெட்டூரா.
என்னெஞ்சு தானும் கடைஞ்சல் படுதுயரம்
வன்னெஞ்சு வந்தறிய மாட்டாரோ வாழனுமான்

ஆகம்பொன் னானேன் அறவே மிகமெலிந்து
தண்டா மரைபுனைந்த மேகவண்ணர் தம்முடைய
திண்டோளில் சென்று சேர்வேனோ நானனுமான்.
விண்ணோர் புகழவரும் மாயவரைக் காணாமல்
கண்ணோ துயிலாமல் காவுதனி லேயிருந்தேன்

வருத்தம் வியாகுலங்கள் மாயவனா ராவாராய்
இருக்க முடியாது இயலனுமான் நீகேளாய்

1 முகூர்த்தம்

இந்த வனத்தில் தனியிருந்தேன் இன்றளவும்
வந்துசிறை மீளாரேல் வாணாள் தனைமாய்ப்பேன்
ஆழி யுலகளந்த அச்சுதனார் தம்முடனே

வாழு மனுமானே வந்தபடி சொல்லாய்நீ
உன்னுடைய பாதம் ஒருநாள் மறவாமல்
என்னுடைய தாயே இயம்பினேன் கண்டீரோ
அவ்வார்த்தை கேட்டு அரியதொரு மாதாவும்
மெய்வார்த்த மாருதியே மேவு மனுமானே.

## விருத்தம்

மைவண்ண நீர்ததும்ப வாணிலவு
பரந்தெறிப்ப வாடை வீசு
இவ்வண்ண நெடுங்காலந் தனியிருந்து
வாடுவதிங் காரை நோவேன்
செவ்வண்ண நகையாரைத் திருமேனிக்
குரியாரைப் பிரிந்து போந்து
இவ்வண்ணம் படுவாயென் றிறையவனும்
தலையோட்டில் எழுதினானே

## அனுமன் தன்னொடு வருமாறு அழைத்தல்

அஞ்சாதே தாயே அரக்கர் பதியழிக்க

மஞ்சா ரழகாக வருவார்காண் வாணுதலே
ஆயன்பால் இப்போ அடியேன் கொடுபோறேன்
மாயன்பால் என்னுடனே வாரீரோ மாதாவே
செப்பரிய எங்கள் திருமால் விடுதூதா
எப்படி என்னைக் கொடுபோவா யென்மகனே

விண்ணுற நிமிர்ந்து விசும்பைமுட்ட நின்றனன்காண்
கண்ணுற வேதக்க கவியனுமான் தானுடலை
விண்ணுற வேஓங்கி மிகவளர்ந்து காட்டலுற்றான்

## சீதை மறுமொழி

கண்களிக்கக் கண்டு கமலத் திருமகளார்
பெண்தலைக்கு நல்ல பெருமாள் எழுந்தருளி

இரத்தங் குதிகொள்ள ராம சரத்தாலே
அரக்கர் குலத்தை அறுத்தால் வருவேன் நான்
என்றார் இலட்சுமியாள் எழுந்திருந்து தெண்டனிட்டான்
நின்றான் அனுமான் நெடுநேரம் வாய்புதைத்து
என்னிலமும் எண்ணும் யான்வந்த காரியங்கள்

தென்னிலங்கை வேந்தன் அறியா தினிதிருந்தார்
இந்த உலகுதன்னில் யாரறிவா ரென்றுசொன்னான்
அப்போது மாதா அருமருந்தே வாரிதியே
இப்போது தோப்பில் இராசகா வலருண்டு
என்றுசொன்னாள் மாதாவும் இயனுமான் ஏதுசொல்வான்

கொன்றுகுடல் பிடுங்கிக் கோவென் றபயமிட
துன்றுமலர்க் காவைத் துணித்திடுவேன் மாதாவே

### சீதை கூற அனுமன் வனத்தை அழித்தல்

அந்நேரம் மாதா அனுமானைத் தானழைத்து
இந்நேரம் பூங்கா வனத்தை அழியுமென்றார்
ஏவினாள் மாதர எழுந்தமர முள்ளதெல்லாம்.

தாவினான் அனுமான் மரங்கள்தவி டாக்கலுற்றான்
வந்தே அசோக வனத்தை அழிக்கலுற்றார்
சந்தனங்கள் மாமரங்கள் தருபலா உள்ளதெல்லாம்
அரங்கன் விடுதூதன் அந்தமலர்க் காவுதனில்
மரங்கள் பிடுங்கி மண்மே லெறியலுற்றான்.

### விருத்தம்

கருத்தினா லும்பலத் தினாலும் கரியமா லரங்கன் தூதன்
உரத்தினால் உலக மெல்லாம் வாலிலே வலித்துத் தூக்கித்
திகைதமால் இலங்கை வேந்தன் திகைப்பட்ட மரங்க
ளெல்லாம்
பலத்தினால் பேர்த்து வைத்தான் பிரமசாதி[1] அனுமான்
தானே

### நடை

ஓங்கி யெழுந்து உயர்ந்துமெத்த உன்னிமுந்து

---

1 பிரம்மச்சாரி

தாங்கு மரங்களெல்லாம் தான்மாள வேபிடுங்கி

### விருத்தம்

மாவொடு கமுகு தென்னை
மராமர இலுப்பை புன்னை
வேரொடு விருட்சம் வில்வம்
சந்தணம்பலா உள்ள தெல்லாம்
கோவென இலங்கை மூதூர்க்
குன்றடு மலைக ளாகத்
தோளொடு தோள்கள் சிந்தித்
துணித்தனன் மரங்க ளெல்லாம் 1725

### வனம் அழிந்தமை பற்றி அரக்கர் முறையிடல்

பட்டனன் சுகேச னென்று பந்தணர் படையி லோர்கள்
கெட்டபோ ராழி யோடிக் கீழிரு மிலங்கை நோக்கி
மட்டவிழ் காவைக் காத்த மன்னவன் மடிந்தா னென்று
முட்டவே வேந்தர் கேட்க முறைமுறை யிட்டுச் சொன்னார்.
காவெலா மழிந்த தென்று கரியொடு புரவி தேர்கள் 1730

ஏவலாய்ச் சுகேசன் விட்ட இவையெல்லா மடிந்தா ரென்று
நாவினுற் சொல்லக் கேட்டு நாயகன் காவல் வைத்த
கோவினுற் பட்டா ரென்று கூறியே முறைக ளிட்டார்
பட்டவர் மீள மற்றப் படாதவர் சிலபே ரோடி
முட்டமுன் விட்ட சேனை முடிந்ததே குரங்கின் கையால்

நட்டுநீர் பிறக வேணும் நால்வரு நீயு மின்றித்
தொட்டவ னிவரோ வென்று தொடந்தெதிர் யொரவல்
லாரே

இருபது புயமும் மார்பும் இலங்கிய மகுடம் சூட்டும்
ஒருபது தலையி னுனே உம்பர்கோ ளரியே கேளாய்
பொருவது குரங்கே யாகில் போர்வலி யரக்கர் மாளும்

ஒருபொழு திருக்கு மாகில் உனக்குநன் றல்ல கண்டாய்
ஓடி யொருவன் ஒருபத்துத் தலையர்முன்

வாடி மனந்தளர்ந்து வாய்புதைத்தங் கென்சொலுவான்
வனங்காவ லாளிகளும் வந்தவந்த சேனையெல்லாம்
பூங்காவை வன்குரங்கு பொடிபடுத்தி விட்டுதென்றான்.

## அனுமனை அழிக்க இராவணன் படையனுப்பல்

### விருத்தம்

மண்ணொடு விண்ண திர்ந்துமந்திர வாளைச் சுத்தி
கண்ணொடு கோப முற்றுக் கண்டனன் அமைச்சர் தன்னை
எண்ணிய கரும மேட்டில எனக்கெதிர் குரங்கோ வென்று
பண்ணிய பத்து வெள்ளம் படைதனை ஏவி னானே.

சென்றது சேனை தானும் சினத்துடன் கொதித்தெ ழுந்து
கன்றினர் திகைத்து நின்றார் கரத்துறு மைந்தன் தானும்
வென்றல மரம்பி டுங்கி வலந்தனன் நாவி னாலே
கொன்றனன் ராம தூதன் கொற்றவர் சேனை யெல்லாம்

பாறை யிடந்தா னிலங்கைமுற்றும் பகலு மிரவுந் தெரியாதே
ஆரோ அசோக வனமழிக்க அழிக்குங் குலங்க ளைப்போட்டுக்
கோவென் றரக்கர் கூப்பிடவே கொன்றான் ராமன் விடுதூதன்
ஓவென் றலறி ஓலிட்டார் இறையோ முறையோ முறையோவே

## அனுமனை அழிக்க அக்ககுமரனை அனுப்பல்

அந்தரக்கன் மந்திரிகள் அக்கிச குமரனையுமழைத்து
வந்த குரங்கு வலுமான மேபேசிப்
பூங்கா வனமழித்துப் போனபடை யுஞ்செயித்துப்

பாங்கா யிருந்து படையழிக்கும் புன்குரங்கை
மண்ணு விண்ணும் நின்றதிர வந்துடனே சென்றுநின்று
நின்னுடைய சேனைகளும் நீயுமுட னேசென்று
நெருக்கிப் பிடித்து நறுக்கிவிட்டு வாருமென்று
விருப்பமுடன் அக்கிஷனை விறசஏவி விட்டான்

அப்போது அக்கிஷனும் ஆனபரி தேரேறிக்
கோல இலக்கணனும் குமாரனெழு மந்திரியும்
சோலை வளைந்து பிடிக்கவனைச் சூழ்ந்துகொண்டார்.
சூழ்ந்தபெரும் படையைச் சூறுவளியாகப்
பாய்ந்தனுமான் சேரப் பற்கடித்துக் கொல்லலுற்றான்

## விருத்தம்

சந்திரனை வெயிலோனை ஏவல் கொள்ளும்
தறுகண்ணன் பெருங்கோபம் தன்னைக் கண்டு
மந்திரிகள் எழுவரும்போய்த் தேரிலேறி
வஞ்சநெடுஞ் சிலைவாங்கி வந்து தோன்றி
வெந்ததலை யறுத்தனுமான் எதிரே சென்று
வெய்யபரித் தேரெடுத்து ஒன்றோ டொன்றின்
அந்தரத்தே மிகப்பொருது அறிந்தே ஏற்றி
அரக்க ரெழுவரையும் அடையக் கொன்றான்.

## நடை

எத்திசையு மெண்ணும் எழுமந்திரி யும்வதைத்துப்
பத்துத் தலைவன்மகன் படைபுடைத்தா ரம்மானை
மெத்தவந்த சேனையெல்லாம் விண்ணுலகு மேற்றிவிட்டான்
ஏற்றிப் பிடித்து இலக்கிஷகு மாரனையும்
தத்துந் தலைகிடக்கச் சிரமெல்லாம் தான்பிடித்து
தேய்த்தனுமான் நெத்தித் திலதமிட்டா ரம்மானை.
அரக்கரெல்லாம் கூடி அடிக்கவந்த சேனையெல்லாம்
நெருக்கிப் பிடித்து நறுக்கித் துணித்துவிட்டான்

## விருத்தம்

ஒக்க எழுந்து கருங்கடல் ஓலம திட்டது போல
மிக்கெழு சூலம் மழுப்பல வேல்கள் எடுத்தெதி ரேஎதிராய்ப்
பக்க மிரண்டு மழுப்படை எய்துபார் முழுதுஞ் சுவற
மிக்க வரக்க ரிலங்கை குலுங்க வெகுண்டு நடந்தனனே.

### நடை

சோரும் குருதி திரைகடல்போ லேஓட
பாரி லரக்கர்படை பட்டதுகா ணம்மானை.
ஆற்றும லோடி அரக்கர் நகருள்ளோர்
கூற்றுவனோ வென்று குலைந்து குலைந்தனரே.

### விருத்தம்

உருண்டு கிடந்த சரங்கள் சரங்கள்
　　ஒடிந்து கிடந்த கரங்கள் கரங்கள்
புரண்டு கிடந்த பிணங்கள் பிணங்கள்
　　புகைந்தெரி கின்ற சரங்கள் சரங்கள்
இருண்டு நெருங்க இலங்கை மலங்க
　　எறிந்து முறிந்த மரங்கள் மரங்கள்
குரங்கு குரங்கென நின்று மயங்கிக்
　　குலைந்து குலைந்த இலங்கை யெல்லாம்.

பட்டவர் பட்டவர் எண்ணி லாதவர்
அட்டக தேரெழு தூளி பட்டது
பட்டது மாவெலாம் மலைகள் போல
வெட்டிட அனுமனார் அரக்கர் பட்டதே.

### நடை

சென்றணிந்த வீரமகா சேனைக ளத்தனையும்
கொன்றுழக்கி நின்றெதிர்த்துக் கொக்கரித்து மார்புதட்டி
ஆரணங்கள் போற்றும் அரங்கனடி யானனுமான்
தோரணத்தின் மேலிருந்து தூங்கினன்கா ணம்மானை

### மைந்தன் அழிந்தமை அறிந்து இராவணன் வருந்தல்

வெட்டக் கடல்சூழ மதிலிலங்கை மன்னவன்தான்
கட்டி யெடுத்தணைத்துக் கண்ணால் புனல்சொரிந்தான்

### விருத்தம்

பங்கனைக் கயிலை யேந்தும்
பணைப்புயன் தன்னை வென்ற
எங்களை வினையேன் பெற்ற
வீரரில் வீரா வுன்னைத்
திங்களைக் கதிரோன் ஒவ்வா
தினகரன் தன்னை வென்ற
குங்குமப் புயனே உன்னைக்
கொன்றது குரங்கோ வென்றான்.

### நடை

மன்றுதுன்று தோளானே மகனே எனவழைத்துக்
கொன்றதுவு முன்னைக் குரங்கோ எனவழுதான்.

பலகை நிலம்மருட்டிப் பாவியேன் என்றழுதான்.
தலைகள் ஒருபத்தும் தரைமீதில் போய்விழுந்தான்.
பெலங்க ளுடையரக்கன் பெருகிலே சப்பட்டு

## இந்திரசித்தை ஏவுதல்

இலங்கை அழியுதென்று இந்திரசெயித் தையழைக்க
மேகனாதன் கேட்டு விழிகள் விளக்கெரிய

ஆக மனம்புழுங்கி அவன்பதறி ஓடிவந்தான்
வெம்பி மிகப்பொருது விண்ணுலக மேற்றிவிட்ட
தம்பியரைக் கண்டு தலத்தில் விழுந்தழுதான்
இந்த இலங்கை ஏற்றும் பதிகுலைந்து
அந்த உலகில் அரசாளப் போனீரோ

என்று புலம்பி இந்திரசெயித் துங்கலங்கிக்
கொன்றது முன்னைக் குரங்கோடா தம்பியரைப்
பலகை நிலமருட்டிப் பாவிஎன்று சொல்லித்
தலைகள் மிகச்சோரத் தரையில் விழுந்தழுதான்
தலத்தில் விழுந்தவனைத் தானெடுத்து வாளரக்கன்

இலக்கிஷன் பட்ட எரிச்சல் மிகத்தெளிய
புன்குரங்கு போகாமல் புக்கவிடம் புக்கவனை
வன்கயிற்றால் கட்டிக்கொண்டுவாரு மென்றான்காண்
மானைப் பிடிக்கவல்ல வட்டக்கடல் கலங்கி
மீனைப் பிடிக்கவல்ல வேங்கை பிடிக்கவல்ல

எண்ணும் இயமனல்ல இந்திரனார் தாமுமல்ல
உரங்களுடைய உலகளந்தோன் தானுமல்ல
குரங்கைப் பிடித்துவரச் சொன்னீரே கொற்றவரே
அன்று பெருமாள் படைபெரிய ரானாலும்
இன்று குரங்கு இலங்கை யழிக்குமடா

வென்றிச் சிலையுடைய வீரரில் வீராநீ
சென்றெதிர்த்த அக்கிஷனும் தேரேழு மந்திரியும்
கொன்றகுரங்கைப்பிடித்துக் கொண்டோடி வாருமென்றான்

## அனுமனை அகப்படுத்த இந்திரசித்து ஏகல்

தோற்றினான் பத்திரண்டு தோளான் மகன்சினந்து
ஏற்றிய வில்லுடனே இந்திரசெயித்தும் வந்தெதிர்த்தான்

கட்டும் பரியும் கடகரியும் காலாளும்
எட்டு மலையுமுகில் ஈரேழும் நின்றதிர
விண்பறக்கச் செந்தூள் மிகப்பறக்க வெய்யோனை
அந்தரத்தோர் காண அனுமான் மிகக்காண
வந்தெதித்தான் இந்திரசெயித்து மகாசேனை தன்னுடனே

மடித்தடக்கி வாலைஅவன் வாரவனைப் பார்த்திருந்து
பிடித்தடக்கை கொட்டிச் சிரித்தா னனுமானும்
கேவுக்கு நல்ல குமாரன் படைத்தலைவன்
ஏவுக்கு நல்ல் இந்திரசெயித்து நீயோடா.
வானச் சிலைவாங்கி வையந் திடுக்கிடவே

நாணைத் தெரிந்து நடந்துவந்தேன் நானென்றான்
வம்பார் பொழில்சூழ் மதிலிலங்கை மன்னன்மகன்
அம்பா யிரம்தொடுத்து அனுமனிலக் காகவெய்தான்,

வந்துபடும் அம்புதனை வாரிப்பிடித் தனுமான்
முந்தரக்கன் முன்னே முறித்தெறிந்து போடலுற்றான்.

சிந்தைசினந் துஇந்திர செயிற்றுச் சிலைவாங்கி
வந்து பொழியும் மழைக்கால்போ லெய்யலுற்றான்
வெடிக்கும தெரிப்பிடிபோல் விண்ணுமண்ணும் நின்றதிர
அடித்துக் கலக்கி அதிர்த்தனுமான் ஆர்ப்பரித்தான்.
தப்பிக் குதித்துத் தலத்தில் புகுந்துழக்கி

அப்பிப் பிடித்து அரக்கர் தலைநெருக்கிக்
கொப்பளிக்க மூளைக் குருதி குதிகொள்ளவே
தத்தளிக்கக் குத்தித் தவிடு பொடியாக்கி
மூண்டுசென்று மண்ணதிர நொடித்து முடிப்பளவில்
மீண்டுசென்று தோரணத்தில் மேலிருந்தா ரம்மானை.

## விருத்தம்

எறிந்தனர் எய்தனர் என்னை மன்னவர்
பொறிந்தெழும் அம்புகொண் டரசர் பொங்கிடச்
செறிந்தனர் நம்மையித் தினவுதீர்ந் ததென்று
உறங்கினர் அனுமனும் எனவுந் தூங்கினன்

## நடை

என்றுசமத் தன்இந்திர செயிற்றுங் கலங்கினான்

நின்று திகைத்து நினையாதெல்லாம் நினைந்து
சங்கரனும் சூரியனும் சந்திரனும் மாலயனும்
அஞ்ச வெருட்டி அவனி முழுதாண்ட
இந்திரனை வென்ற இந்திரசெயிற்று நீயோடா
என்றான் அனுமான் இந்திரசெயிற் றென்சொல்லுவான்

முந்தச்சிலை வீரனென மூவுலகுங் கீர்த்திகொண்டேன்
உந்த னளவில் உறவெஞ்சினேன் மெய்மறந்தேன்
அப்போ தனுமான் அவனை முகனோக்கித்
தப்பாமல் சொல்லுகிறேன் தாமோ தரன்தூதன்
ஆயன் திருவாணை அகப்படுவே னுன்கையிலே

வாயு மகனுன் மறுதோரணந் தனிலே
பாயு மளவில்தலை பத்துடையன் தன்மகனே
அயிரா பதத்தில் அறமிகுத்த சேவுகனே
மயிரா லொருகணையும் மறுகணையும் நீதொடுக்க
வல்லையோடா என்றளவில் வல்லேன் எனமொழிந்தாள்

விரிவான தோரணத்தில் விட்டுமந்தத் தோரணத்தை
வருமளவி லெய்து மறுகணையுந் தான்தொடுத்தான்

## விருத்தம்

மறுகணை தொடுத்து வீரன் மாமணித் தேரில் நின்று
இறைவரும் அமைச்சர் வானோர் யாவருங் கண்ட தில்லை
நறைகழ லுடைய வேந்தன் நாயகன் விட்ட தூதன்
அறைகழல் அனுமான் கண்டான் ஆகமும் கண்கள் கூர

மந்திர வாளி னாலே மந்திர விரதம் பூண்டு
இந்திரன் வந்து கூறி இந்திர செயிற்றன் தன்னை
அந்தர வானோர் மெச்சும் ஆண்மையே கேட்டி ருப்பேன்
உன்திறம் வில்லி னாண்மை உலகினி லில்லை யென்றார்.

ஆழியா னுடையா னானை எய்தபடி அழைத்துக் காண
ஊழி யானதும் பெரியதுகாண் மறுகணை தொடுத்தபடி நன்றடா.
காழியான் அரனுமாலும் நான்முகற் கடிமை என்னுமோர் வில்லிநீ
சூழும் வானவர் உணங்குமிந்திர செயிற்றுமா மென்றி றங்கினான்.

## தன் ஆணைப்படி அனுமன் கட்டுண்ணல்

அந்தனுமான் மெச்சியிட்ட ஆணை மறவாமல்

வந்தருகே நின்று மனங்குளிர்ந்தா ரம்மானை.
சங்கனைய மேனி சரசுவதி தன்கணவன்[1]
பங்கயத்தோர் தந்ததொரு பாசந் தனை[2]வாங்க

---

1 பிரமன் 2 கயிறு (பிரமபாசம்)

அங்கம் புலியனுமான் ஆன கழுத்திலிட்டான்
செங்கையினால் தட்டிச் சினந்துமிகக் கொக்கரித்து

வெங்கண் பொறிபறக்க வேகித்துக் கோவித்து
அஞ்சிவந்தே னோதிருமால் ஆணைமற வாமல்வந்தேன்
கெஞ்சிவந் தேனென்று கெறுவிதமாய்[1] பாசமிட்டாய்
என்றனுமான் கோவித்து இந்திரசெயிற்
றென்சொல்லுவான்
நன்றுநீ சொன்னபடி நான்அறியாமே சொன்னேன்காண்

என்னபடி வருவாய் என்னிடையில் கட்டுமென்றார்.
இடையிலிட்டுப் பாசம் இந்திரசெயிற் றும்பிடிக்கப்
படையிற் பெரிய பட்டணத்தோர் பார்க்கவந்தார்
அடரும்மயிர்க் காம்பை அம்பையுள்ளே தானடக்கி
உடலை உதறிவிட்டான் ஒருகோடி சேனைபட

பொன்னிலங்கை மன்னன் புடைசூழ வீற்றிருக்கும்
மன்னன்முன்னே கொண்டுசென்று நின்றான்கா ணம்மானை.
என்று பெரிய இராவணனைக் கைதொழுது
சென்றரக்கன் புத்திரனும் தெண்டனிட்டா ரம்மானை.

## இராவணன் முன் அனுமனைக் கொண்டுவருதல்

### விருத்தம்

வெறிக்கும் கொன்றை அரனிருக்கும் வெள்ளி மலையை
வேரோடே
பறிக்கும் புயத்தை யோனேஉன் பாதம் பணிந்தேன்
பலகாலும்
எறிக்கும் கதிரோன் கனியெனவே எண்ணாயிரக்
காதம்பாய்ந் தகுரங்கை
மறித்துத் தடுத்துமுன் னாணையிட்டு வல்ல படியே
கொண்டுவந்தேன்

---

1 ஆணவமாய்

## நடை

கடுக்கைச்சடை யான்[1]இருக்குங் கயிலைமலை தனையும்
எடுக்கும் புயத்தை உடையனுமான் ஆணையின்று

மறித்துத் தடுத்துப் பிடித்துவந்தேன் மற்றிவனை
எண்ணா யிரக்காதம் பாய்ந்தெழுந்த கதிரவனை
மன்னா யிவனெளியான் என்று கருதாதே
உன்னாணை யிட்டு உபாயம் பலபேசி
மன்னா இணக்கி மறித்துப் பிடித்துவந்தேன்

சாற்றுக் கிவனனுமான் சற்றுஞ் சலியாதான்
அரக்கர் குலத்தரசே அறியாமல் நீரிவனை
குரங்கினமென் றெண்ணாதே கூற்றுவன்கா ணம்மானை.
வந்தனுமான் நின்று வாளரக்கனைப்பார்த்து
அந்தச் சபையில் அரசனவ னிருந்தான்

வாலை மடித்தடக்கி வாளரக்கனைப்பார்த்துச்
சால மிதித்துச் சமையமிருந் தானனுமான்

## விருத்தம்

வாலெலாம் வளைத்துக் கொண்டு
மலையினில் மலையே போலக்
காலனோ எதிரி கட்டு
கடியவற் கெளிமை தானோ
சீலமா மேருத் தானோ
செறிகயி லாச மோதான்
நீலனோ குமுதன் தானோ
நெஞ்சினா லறிந்தி லேனே.

கொந்தலர் காவை அழித்திள மைந்தனைக்
கொன்றகு ரங்கிதுவோ
அந்தர மாகிய தோரண மேவி
அசைந்தகு ரங்கிதுவோ

---

1 கொன்றைமலர் முடியிற் சூடிய சிவன்

சந்திர ரும்முயர் சூரியரும் சரியொக்க
நடக்க வொண்ணு
இந்த இலங்கை புகுந்த திறமிது
எத்தனை ஆண்மைகளே.

## நடை

கண்சிவந்து கையோடு கைதட்டிக் கொடுஞ்சினமாய்
மண்சுமந்த நாக மணிமுடியான் வாளரக்கன்
ஏனடா நீதான் எவன்விடுத்த தூதனடா
நானடா வாரனெடா நானுனக்குச் சொல்லுகைக்குத்
தானடா கேளடா தாழநின்று வாய்புதைத்துக்

கானகத்தில் வாழும் கவிக்குலம்என் பேரனுமான்
சாலி வயலிலங்கை தன்னிலொரு சேவகனைக்
கூர்வாய் நெடுஞ்சரத்தால் கொன்றுவிண்ணி லேற்றிவிட்ட
நாராயணன் விடுத்த தூதனடா நானரக்கா

## விருத்தம்

உரந்து தனித்தனி பேசு மரக்கர்தம் உள்ளமும் நானறிவேன்
பரந்த பெரும்படை பட்டுவி ழக்கணை தொட்டிடு நாயகனார்
புரிந்தெழு சேனை எழுபது வெள்ளமு டன்புகு நானொருவன்
கருந்தவ ரக்கரில் எவனடா இராவண னென்றுண
ரப்படுவோன்.

## அனுமனைக் கொல்லுமாறு ஆணையிடல்

## விருத்தம்

கையொடு கைகள் தட்டிக்
கடுஞ்சினங் கோபங் கொண்டு
மையொடு கண்ணி னாளை
வலிசெய்தோ மீட்க வந்தாய்
மெய்யொடு இராம தூதன்
வீரியங் காண்போ மென்று
பொய்பட உரைத்தான் தன்னைப்
பொடிபடக் கொல்லு மென்றான்.

### நடை

கரங்கள் இருபத்து உடையான் கடுஞ்சினமாய்க்
குரங்கை நறுங்கடித்துக் கொல்லுமென்றார் அம்மானை

### விருத்தம்

குரக்கிற் குலத்தில் பிறந்தேன் நான்
பேச வேண்டாம் பேசாய்நீ
பெருக்கிப் பிதற்ற வேண்டாங்காண்
பிணங்கள் தின்ற பேய்போலே
செருக்கித் திரியும் பிறதாரம்
தேடித் திரியும் உன்னைப்போல்
அரக்கர் குலத்திற் பிறந்தேனோ
அழகிய தாகச் சொன்னாயே

### நடை

ஆமோடா வுந்தன்மதி ஆளறிந்து பேசுகில்லை
போமாடா வீணே புவியளந்தான் தேவியரை

மையாரும் பச்சை வடிவான்மான் பின்போக
ஐய மிரக்கவந்து அன்றொளித்துக் கொண்டுவந்தாய்
இப்போதே எங்கள் இலட்சுமியை விட்டுவிடாய்
தப்பாமல் உன்னைத் தலையறுப்பேன் நானரக்கா.

### விருத்தம்

அடாத டாது செய்துநீ
அண்ட மளந்தான் தேவியை
விடா தடாது செய்யினும்
வீண டாது போமடா.
தடாத டாது போமடா
தரணி யேழி லங்கையும்
சுடா தடாது போமடா
அடாபி டாஇ ராவணா

### நடை

## இராவணன் அனுமனைத் தாக்க அவன் திருப்பித் தாக்கல்

*பாயும் புலிபோலச் சினந்தவனைப் பார்த்திருந்து*
*வாயிலடிக் கக்கையை ஓங்கினான் வாளரக்கன்* 1980

### விருத்தம்

*வெடித்தெழு சினத்தெழு மிகுத்தவ னரக்கன்*
*கடித்தெழு கரத்தனை மிகுத்தவ னடித்தான்*
*அடித்தகை பிடித்தென அதற்கென முனிந்தேன்*
*முடித்தலைகள் பத்திலு முகத்திலு மறைந்தான்.*

### நடை

*பிடித்துக் கரத்தையவன் பேணிவைத்துப் போந்துநின்று*

*அடித்தா னனுமான் அரக்கனிட தாடையிலே*
*கோபித் தரக்கன் குரங்குதனைக் கொல்லுமென்றான்*

## அனுமனைக் கொல்ல ஏவுதலும் வீடணன் மறுத்துரைத்தலும்

*மேவிச் சபையில் விபூஷணன்நின் றென்சொலுவான்*
*மாதுற்ற தோளானே மாற்றான் வரவிடுத்த*
*தூதுவரைக் கொல்லுவரோ சொற்பெரிய போர்வேந்தே.*

*அங்கவர்கள் எண்ணும் அரக்கர் குலத்தரசே*
*எங்கள் குலத்துக் கரசே இனியவனைப்*
*பங்கப் படுத்திவிடீர் பத்துத் தலையோனே*
*துங்க மணிமுடியான் சுற்றிமிகப் பார்த்து*
*உத்திரங்கள் சொல்லியிவன் ஓட்டானே உள்ளாளாய்* 1995

*சத்துருவாய் நின்றெனக்குச் சாதித்தாய் தம்பியரே*
*தம்பியல்ல நீயெனக்குச் சத்துருக்காண் இன்றுமுதல்*
*நம்பிஎன்முன் கண்ணெதிரே நாடாதே நீபோடா*

### அனுமன் வாலில் தீக்கொளுவுதல்

கொல்லாமற் கொல்லும் குரங்குதனை இப்பொழுதே
கல்லான வாவிக் கடல்சூழ் இலங்கையெல்லாம்

எல்லாருங் கூடி யிருத்திப் பிடித்திறுக
ஆடையைச் சுற்றி அனல்கொழுத்த வேணுமென்றார்
பட்டணத்தி லுள்ள பலசேனை யத்தனையும்
கூட்டியவன் வாலில் குறைவறச் சுற்றுமென்று
பாச்சினகோ வணமொழிந்து பலசேலை உள்ளதெல்லாம்

வால்நிரம்பச் சுற்றி வகைவகையே நெய்சொரிந்து
கட்டிப் பிடித்துக் கனலைக் கொழுத்திவிட்டான்
சுட்டுப் பதைத்துச் சுழன்றுவிடு மாப்போல

### சீதையால் அனுமனைத் தீச்சுடாமை

மட்டவிழுங் கஞ்ச மலர்மகளைத் தான்நினைந்தான்
கற்றைக் குழலாள் கமலத் திருமகளார்

சற்றுஞ் சுடாதபடி சாபமிட்டா ரம்மானை
வெய்ய புகழனுமான் மிக்கமனங் குளிர்ந்து
உய்ய நடந்தோடி உறுபல்லைக் காட்ட லுற்றான்
துய்ய நரைக்கிழவி சுடுகுரங்கை யென்றுசொல்லி

### இலங்கையை அனுமன் எரித்தழித்தல்

முத்தின் மணிவாசல் முகப்பை எரிகொளுத்தி

எத்திசைக்கு நாலுதிசை எங்கும் வால்சுழற்றி
கொட்டம் பண்ணுமனுமான் கொளுத்தி
யிலங்கையெல்லாம்
அஷ்டகெசம்[1] ஏழும்தாவி அண்டமுகடு முட்டிச்
சற்று மதியாமல் தான்தேரை ஓட்டிவந்து
பற்றி எரிகையிலே பர்வதம்போல் வந்துநின்று

---

1 திக்குகள் யானை எட்டு

இலங்கையிலே உள்ளரக்கர் எல்லா ரையுமேத்தி
மலங்காமல் வன்ன கரிபரியுந் தானேற்றிக்
கலங்காத மேகனுதன் கட்டுடனே கொண்டுசென்று
துலங்காத தீவுதனில் சோராமல் தானும்வைத்தான்
பொன்னிலங்கை சூழ்ந்த பொறுப்பான மாளிகையும்

முப்புரத்தை நீருய் எரித்ததொரு முக்கணன்தான்
அப்புற நெத்தியில் வந்தக்கசா லைத்தலைவன்[1]
அழியா திலங்கை அனுமான் அனல்கொளுத்தி
வெளியான திக்கெல்லாம் வெதித்தான் அக்ஷசதத்தை
ஒளியான மாளிகையும் உயர்ந்ததொரு உப்பரிகை

திசையான மாடம் தெருவில் சமைந்ததுவாம்
அசையாமல் வீடுகள்தான் அங்கங்கே தான்முகித்து
அந்நேரம் தானனுமான் அரியதொரு கணமாவே
பொன்னை வகுத்தவனே புரமூன் றெரித்தவனே
அகத்தியனைப் பூமிதனில் அலுங்காமல் வைத்தவனே

செகத்திலுள் ளோர்க்கெல்லாஞ் சேர்மூலத் தவனே
வாரி[2] தனைக் கடைய மகமேரை மத்தாக்கும்
காரிருளை நீக்குங் கதிரவனை நன்ருக
வட்டமதாய்க் கடைந்த மாந்தை நகராதிபனே
திட்டெனவே தென்னிலங்கை சேரவே வேமளவும்

தானுவே நாழிகையில் தான்பொறுத்தீ ராமாகில்
அனுமக் கொடிவிருது அளித்திடுவேன் நானுமக்கு
என்ற விசேஷம் இயல்புடனே தான்கேட்டு
நன்றெனவே மாருதியே நான்பொறுத்தே னென்றுரைத்தார்
அந்நேர மாசாரிக் கந்தவிரு துங்கொடுத்து

உன்னி மிகத்தாண்டி உயர்ந்துமெத்த உள்நிமிர்ந்து
வட்டமதில் பட்டணமும் வாளரக்கன் மாளிகையும்
முட்டமணி மண்டபமும் மூதூரி லங்கையெல்லாம்

---

1 நகரமைப்போர் தலைவன்  2 கடல்

நட்டமெழச் சுட்டு நடுக்கடலில் வால்தோய்த்து
மட்டமந்த சேனையெல்லாம் வெட்டவெளி யாக்கிவிட்டான்

### அனுமன் சீதையைக் காணல்

எடா ருடல்துணித்து இலட்சுமியைத் தெண்டனிட்டான்
தெண்டனிட்டுப் பின்னுமந்த சேயிழையைத் தான்பார்த்து
அண்டர்தொழும் மாதாவே ஆழிதரவேணு மென்றான்

### எரிந்த இலங்யை விசுவகன்மா புதுப்பித்தல்

அஷ்ட கஜமெச்சும் அரியதொரு கண்ணாளன்[1]
திட்டமுன் மனதைச் சிந்தையுள்ளே தானினைந்து 2055

வான்முட்ட நின்ற மதிலிலங்கை மன்னன்மெச்சத்
தானொட்டி நின்று சமைக்கவே தான்கருதி
இலங்கையி லுள்ள இயல்பான மாளிகையும்
துலங்கவே தான்சமைத்து மண்ட பங்கள் உள்ளதெல்லாம்
நாடக சாலை நவரத்னச் சாலைகளும் 2060

முன்னுளில் தான்சமைக்க மூதூரி லங்கையெல்லாம்
இந்நா ழிகையில் இயல்புடனே தான்சமைத்து
வந்துகண்டு நின்றான் மதியா திராவணனை
கொந்தலருங் கையான் கோபமுள்ள கேசரியும்
அந்நேரங் கன்மாவை அதிபிரியமாய் மகிழ்ந்து 2065

சொன்ன மிகக்கொடுத்துத் துலங்குமணி யாபரணம்
மின்னும்பதக் கம்சவடி வேண்டினதெல் லாங்குடுத்து
அன்ன மிடுவித்து அனுப்பினான் கன்மாவை.
பட்டணத்தில் அக்கினியும் பத்தி எரிகையிலே
திட்டெனவே புற்பவனத் தேரின்மே லேற்றிவிட்ட 2070

மானிடர் எல்லாரும் வாய்த்த புரவிகளும்
தானடர நின்ற சகல பிராணிகளும்
தீயிலே வச்சிருந்த சேனையெல்லாந் தானழைத்து

---

1 கம்மாளன்

தாவுதேர் மேகனுதன் தானேத்திக் கொண்டுவந்து
பொன்னிலங்கை மாளிகையில் போத்திப் புகுந்தபின்
மன்னன் இராவணனை வந்துகண்டு தெண்டனிட்டான்.

## சீதை அனுமனைப் புகழ்தல்

அந்நேர மாக அருமருந்தே மாருதியே
என்னே மகனே எழுங்கதிராய்ப் பாய்ந்தவனே
அரியதொரு அக்கிஷனை அடர்ந்துமிகக் கொன்றவனே
பெரியதுணை யேர்மகனே பெருமாள்தன் கண்மணியே

இந்தவிசை தான்பிழைத்து என்கண்ணிலே நீவிழித்து
வந்தருமை யுந்தான் மாலான வஞ்சியர்காண
உந்த னருளாலே உயிர்பிழைத்து வந்தேன்காண்
நல்லதுகாண் மாதாவே நான்வந்த காரியந்தான்
வல்லவியே சூடா மணிதரவே வேணுமென்றான்

## சீதை சூளாமணி கொடுத்துச் செய்தி கூறல்

### விருத்தம்

மீளாம் பல்கலை மிகத்தந்தார்
மிதிலை நகர்க்கே எழுந்தருளித்
தாளா லென்னை ஆண்டுகொண்டார்
தமியேன் அயோக வனத்திருந்தேன்
நாளா வினையே னழுந்துகின்றேன்
நாயேன் கண்கள் துயிலாமல்
சூளா மணிகைக் கொடுத்தபின்
தொழுதேன் பாதந் தொழுதேனே

### நடை

வந்துதொழு மாருதியை மாதா மிகப்பார்த்து
இந்த விசயம் இயல்பாகச் சொல்லுமென்றார்

### விருத்தம்

வந்தெனைக்கரம் பத்திய அய்யரை
இந்த இப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தையா லுந் தொடோ மென்றசெவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவிச் சார்த்துவாய்.

### நடை

இந்த விசேஷம் இயல்புடனே மாதாவே
சுந்தரஞ்சேர் நாரணனைத் தொழுதுகண்டு தெண்டனிட்டு
ஏகாந்த மாக இருக்குமந்த வேளையிலே
மாகாந்த முள்ளதெல்லாம் மனமுருகவே உரைப்பேன்
சூடா மணிவாங்கிச் சூழ்கடலைத் தாண்டிவந்தாய்

மூவ ரிருந்த தலந்தனிலே வந்துகண்டான்
தேவர்க் கரியவன்காண் செங்கை நெடுமாலும்
இந்நேரந் தான்தேடி எங்கிருப்ப ரென்று
கண்டுறென மூவரையுங் கடுகவே தான்கூட்டி
இருந்த படைத்தலைவர் இயல்பான மூவரையும்

பொருந்தவே தான்கூட்டிப் பூமியிலே தானடைந்தான்
அந்நேரம் தாண்டி அனுமானும் மத்தவனும்

### மதுவனம் அழித்தல்

சென்றானே சுக்ரீபன் சிங்கா சனத்தோப்பில்
அஞ்சாமல் சுக்ரீபன் ஆக்கினையைத் தான்மறித்துச்
சிங்காதனம் புகுந்து தேன்மதுவைத் தின்னலுற்றான்

வனகாவ லாளிகள்போய் மன்னவற்குச் சொல்லலுற்றார்
நீலன் குமுதன் ஆதித்தனு மேகூடி
குரங்குக் குலமெல்லாம் கூடியிருக் கையிலே
அரங்கனெனும் மாயவனும் ஆனஇ லட்சுமணனும்
பூங்காவைத் தேன்மதுவைப் புக்கழிக்க வல்லவரார்

அனுமா னிலட்சுமியைக் கண்டுவந்தா னாகுமென்று
தனுவாங்குங் கையாற்குத் தானுரைத்தான் சுக்ரீபன்

### அனுமன் இராமனைக் காணல்

என்னுமளவில் அனுமான் விரைந்து சென்று
மன்னர் பெருமாள் திருமுன்பே வந்துகண்டான்
கண்டே னிலட்சுமியை என்னிரண்டு கண்குளிரத் 2120

திண்டோ ளழகர் திருமாலைத் தெண்டனிட்டு
இங்கேவா மாருதியே என்றருகு தானழைத்து
அங்கமெல் லாம்புகழ ஆவித்து மாயவனும்
கட்டி எடுத்தணைத்துக் கண்புரிச மாகையினால்
முட்டிலங்கை புக்கு மொய்குழலைத் தான்தேடி 2125

வல்லியைக் கண்ட மறுவார்த்தை யத்தனையும்
சொல்லி யவனனுமான் சூடாமணி கொடுத்தான்
வாங்கு மணியை மனமகிழ்ந்து மாயவனார்

### இலங்கைப் படையெடுப்பு

பாங்குடனே வெல்லப் படையெடுத் தாரம்மானை
எண்ணு முசுகரடி எழுபதுவெள் ளங்குரங்கு 2130

விண்ணுமண்ணும் நின்றதிர வீர முரசதிர
இடிபறக்கத் தம்பட்ட மாகக் கிடிமுழங்க
படிபொறுக்க வொண்ணாப் படையெடுத்தா ரம்மானை
சூழுங் கடற்கரைக்கே தோன்றவந்து மாயவனார்
வாழும் படையெடுத்து வந்தனர்கா ணம்மானை 2135

வந்து சலந்தனையே திகைத்து மிகப்பார்த்து

### இராமன் கடலரசன் பிழையைப் பொறுத்தல்

சென்று சமுத்திரமுந் தெண்டனிட்டு இல்லையென்று
அன்றுகட லும்இவரை யாரென் றறியாமல்
நின்று சமுத்திரந்தான் நேரே நினைந்துதில்லை.

## விருத்தம்

மறுமை கண்டவர் மெய்ஞ்ஞானிகள் ஞாலத்துள் வரினும்
வெறுமை கண்டவர் யாவரும் யாவரை விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கன லென்னவுங் கூசார்
சிறுமை கண்டவர் பெருமைகண் டல்லது தேறார்.

## நடை

கொதித்துக் கடல்கதறிக் கோவென் றபயமிட
கதித்துக் கணைதொடுத்துக் கண்சிவந்தா ரம்மானை

நீரதனி லேவளர்ந்த நெடியமீன் வாளைகளும்
சேறுதனி லேபுரண்டு தியங்கியதே அம்மானை
அந்தக் கடல்தான் அந்நேரம் ஓடிவந்து
எந்தன்பி ரான்நெடுமால் இராகவனே போற்றிஎன்றான்
மாயவரே உம்மையொரு மானிடவ ரென்றிருந்தேன்

ஆயரே உந்தன் அடியோங்கள் செய்தபிழை
போதப் பொறுத்தருளீர் புண்ணியரே என்றுரைத்தான்
சீதைசீ ராமனையுந் தெண்டனிட்டா ரம்மானை
மாயன் படைபோக வழிமுழுதுந் தானாக
தோய மிறங்கித் தொழுதுநின்றா ரம்மானை.

## விருத்தம்

பாயிருள் நீக்கும் தெய்வப்
பருதியைப் பழிக்கும் மாலை
ஆயிரங் கரத்தான் மண்மேல்
அடிபுற வாக வைத்துத்
தீயெனச் சிறியோர் செய்தால்
பொறுப்பதே பெரியோர் செய்கை
ஆயிர நாமத் தையா
சரணமென் றடியில் விழுந்தான்.

மடக்கொடி மனதையும் வானின் நீளமும்
அடள்படு கடலையும் அளக்க லாகுமோ

கிடக்கிறேன் கடலுமாங் கிரியு முட்டவே
நடக்கஎன் முதுகிலே நம்பி நாரணா

### நடை

கறுக்குங் கடலரசன் செய்ததொரு கணப்பிழையைப்
பொறுத்துப் பெருமாளும் போத மனமகிழ்ந்து

தோள்தழைக்க மாயவனார் சொல்லியே வெண்சரத்தை
மீளவழைத்து மின்றே அணையிலிட்டா ரம்மானை.
எட்டுவரை யும்உல கீரேழும் தானதிர
மட்டமருந் திண்டோளான் மாயன்கோ பத்துடனே
படரு மலைகள் பறித்து முறித்தெறிந்து

கடலை அடைப்பித்தார் காயாம்பூ மேனியனார்

## இராமன் கடல் கடந்தமைகேட்டு வீடணன் இராவணனுக்கு அறிவுறுத்தல்

அத்திகிரி நாதர்படை ஆற்பரவந் தான்கேட்டு
மெத்தப் பயந்து விபூஷணனார் தாமெழுந்து
எத்திசை யுமெண்ணும் இராவணனைக் கைதொழுது
பத்துத் தலைவனுக்குப் புத்திமிகச் சொல்லலுற்றான்

அப்போதுங் கேட்டிலையே அண்ணாவி என்வார்த்தை
இப்போ இலட்சுமியை விட்டுவிடாய் என்றுரைத்தான்.
ஆண்ட இலங்கை அரக்கர் குலத்தரசே
வேண்டாம் இலட்சுமியை விட்டுவிடாய் என்றுரைத்தான்
ஏற்றமுள்ள வாழ்வும் இறந்துவிடப் போகுதென்றான்

ஒக்கமுள்ள வாழ்வும் ஒழிந்துவிடப் போகுதுகாண்
நாக மணிமுடியும் நம்முடைய சேனையெல்லாம்
போக உயிரிழந்து போகாமல் விட்டுவிடாய்
மாயன் சமுத்திரத்தில் வந்துவிட்டா ரென்றுரைத்தான்

## இராவணன் வீடணனைச் சினந்தொதுக்கல்

பாயும் புலிபோலச் சினந்தவனைப் பார்த்தெழுந்து

மாயனல்ல நீயெனக்கு மாற்றான்காண் இன்றுமுதல்
தம்பியல்ல நீயெனக்குச் சத்துருக்காண் இன்றுமுதல்
நம்பாமல் எந்தன்முன்னே நாடாதே நீபோடா
தாரணிமேல் பத்துத் தலையற்றுப் போனாலும்
ஆரணங்கைப் போகவிடேன் அப்போ தவனருகே

### விருத்தம்

மட்டுண்ட கயிலாய வரையெடுத்த
திண்டோளாய் வாலி வாலால்
கட்டுண்டு நீயிருந்தாய் அனேககோடி காலம்
காகுத்தன் சரத்தினால் அவனும்பட்டான்
முட்டுண்டு குனிவதற்கு முன்னேசொன்னேன்
... ... ... ... ...

### வீடணன் இராமனைச் சரணடைதல்

... பெருமாள் அனுமானைத் தானழைத்து
... கேட்டு விசாரித்தா ரம்மானை
... பதிக்கரசே நாராயணா சரணம்
... சொல்லி யிவனுள்ளாளிவன் றனக்குக்
கண்ணா ரமுதானே காண்பித்துக் கொள்ளுமென்றார்.

### விருத்தம்

தேவர்க்கும் வானவர்க்கும் திசைமுகற்கும்
முதலாய தெய்வ தெய்வா
மூவர்க்கும் முடிப்பரிய காரியத்தை
முற்றுவிப்பாய் முதன்மை யன்றோ
ஆபத்து வந்தபய மென்றானைக்
காத்த ருள்வ தல்லால்
கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்தது
தொவ்வாதோ கொற்ற வேந்தே.

### நடை

என்று பெருமாள் இவனை மனமகிழ்ந்து
நன்று அனுமானே நல்ல அரக்கனைத்தான்
வாழும் விபூஷணனை வரவழைத்து வாராய்நீ

ஏழு மதிலிலங்கைக் கெண்ணும் விபூஷணனே
ஆதி முதலோனும் அழைத்துவரச் சொன்னார்காண்.

### விருத்தம்

பஞ்செனச் சிவக்கு மென்கால்
    தேவியைப் பிரித்த பாவி
வஞ்சனுக் கிளைய வென்னை
    வருகவென் றருளி னாரோ
தஞ்செனக கருதி னாரோ
    தாழ்சடைக் கடவு ளுண்ட
நஞ்செனக் கருதி னாரோ
    நாயக னளித்த நம்பா.

### நடை

அப்படிச் சொல்லாதே அவருறுதி கேட்டுவந்தேன்
செப்பமுடன் உன்னையிப்போ சிங்காசனத்தில் வைப்பர்
வாராய் விபூஷணரே மாயவரைக் கண்டிருப்போம்
அந்நேரந் தான்சென்று அரியவனே போற்றியென்றான்

என்னப் பெருமாள் இவனை மனமகிழ்ந்து
மாலை யணிமார்பா விபூஷணனே வாரும்
வந்தகா ரியங்கள் சொல்லாய் எனமொழிந்தார்
... ... இடையாரை விட்டுவிடாய் என்றுசொல்லி
... ... யழியச் சொல்லியென்னை ஓடம்விட்டான்

... ... ... ... இருந்தங் கழியாமல்
... ... காணவென்று வந்தேன் திருமாலே
எண்ணறியா தானோடு இருந்து மடியாமல்
மண்ணை யளந்தார் மலரடியைக் காணவந்தேன்.

### விருத்தம்

அத்திரு வாழு மார்பனோ
    அற்புத வாலி காலனோ

உத்தம மோக ரூபமோ
உற்பல வேத சாரமோ
வித்தக காள மேகமோ
வித்தரி யாத மோபுவோ
எத்தனை ஊழி கூடினால்
இப்படிக் காண லாகுமே

### நடை

மஞ்சாரு மேனியனார் மன்னன் விபூஷணனை
அஞ்சாதே யென்றுபயம் ஆற்றி அருகழைத்து

அஞ்சேனைக் குள்ளே மகிழ்ந்திருந்தா ரம்மானை.
அந்த இலங்கை அழிவதற்கே ஐயமில்லை
அந்த இலங்கை அரசுபதி உனக்குத்
தந்தோம் விபூஷணரே தார்வேந்தே நீகேளாய்
என்றார் பெருமாள் இலட்சுமண ரென்சொலுவார்.

மன்றலந்த சிரமுடியான்[1] வந்துகண்டா லென்கொடுப்போம்
நன்றாய் அயோத்தியிலே நாலிலொன்று நாம்கொடுப்போம்

## இலங்கையில் அனுமன் செயலை வீடணன் கூறல்

நின்று கடல் கரைக்கே நீர்பெருக ஒன்றாதே
இன்றிலங்கை நானழித்துத் தாரேன் எடும்படையை
அனுமனும் செய்துவந்த ஆண்மைதனைக் கேட்டருளீர்

கொன்றானே அக்குஷணக் கோமான் படைகோடி
மன்றா யிரங்கோடி மன்னவர்கள் தான்கோடி
அன்றா யிரங்கோடி அரக்கர் குலங்கோடி
பத்துத் தலைவன் படையா யிரம்கோடி
இத்தனையுங் கொண்டு இயமபுரம் ஏற்றிவிட்டான்

மட்டமந்த சேனையெல்லாம் வெட்டவெளி யாக்கிவிட்டு
முட்டாக்கன் மாளிகையும் மூதூரி லங்கையெல்லாம்

1 இராவணன்

சுட்டனுமான் வந்தசேதி சொன்னான் விபூஷணனும்
அந்நேர மாயன் அதிபிரியமாய் மகிழ்ந்து
இந்நேர மாருதியே வெற்றிதனைச் சொல்லாமல்

வானவர்கள் மெச்சும் வலுவுடைய மாருதிலே
விண்ணவர்கள் ஏற்றும் மேகமொத்த மேனியரே
கண்ணரே நானொருசொல் கட்டுரைக்க நீர்கேளீர்

## விருத்தம்

தாள்கொண்டேன் துயரந் தீர்ந்தேன்
தம்பிரான் பொருட்டி னாலே
வாள்கொண்ட கண்ணாள் தன்னை
மலர்ந்தபூங் காவிற் கண்டேன்
கோள்கொண்டார் செல்வம் போலக்
குலாவிய இலங்கை மூதூர்
நாள்கொண்டேன் இலங்கை சுட்டேன்
நானுமிப் போது வந்தேன்.

## நடை

மெத்தனுமான் செய்துவந்த வீரியத்தைக் கேட்டார்
அத்திகிரி நாதர் அதிபிரியமாய் மகிழ்ந்து
அளகு முடனனுமான் ஆண்மைதனைக் கேட்டார்

புளக மெறிந்துடம்பு பூசித்தா ரம்மானை

## விருத்தம்

வஞ்சம்பயில் நெஞ்சம்முள வடிவேல்விழி மடவார்
நெஞ்சம்மள விடுவீர் வேலைநீரும் அளவிடலாம்
தஞ்சம்மென வீழ்வார் சிலர்வா பாயளன்
கஞ்சம்மடு வீழ்வார்கரை யேறும்படி கண்டீர்

மூசு வண்டுகள் மும்மத மும்பொழிந்
தாசை யுள்ளளை வுந்திரிந் தார்ப்பன
ஓசை மாக்கட லுள்புக வுள்புக
வேசி மங்கை யானபெண் மீண்டதே

குமிர்த மிட்ட குரவரைக் கூற்றெழத்
திமிர்த[1] மிட்டுத் திரையுந் திரைக்கடல்
துமிர்த[2] மூர்புக வானவர் துள்ளினர்
அமிர்த மென்று மெழுமெனு மாசையால்

நடை

துடரநாணை வாங்கச் சொல்லலுற்றான் தன்னெடியில்
கடலை யடைத்துவ ழிகண்டனர் அம்மானை

அடித்தார் சிலைப்பெருமாள் அம்புவில்லும் சக்கரமும்
எடுத்தார் படையை உலகீரேழும் நின்றதிர
ஏழுலக மெண்ணும் இலங்கை அழிப்பதற்கு
வாழும் படையெடுத்து வந்தனர்கா ணம்மானை

**இராமன் படைய்ய இராவணன் தன்மாளிகையேறிக் காணல்:**

தோத்தடந்தார் கூட்ட மலைதனிலே சென்றேறி

பாத்தடந்தான் வாளரக்கன் பட்டணத்தை அம்மானை.
எந்நிலமும் எண்ணவரும் எம்பெருமாள் தன்படையைச்
சென்னிமுடி பத்துந் தெரியவந்து பார்த்துநின்றான்
இலங்கைக்குத் தெற்கே எழுமோ ரிரவி[3] என்றார்
துலங்கும் விபூஷணனும் தொழுது முகனோக்கி

சேமத் திருக்கும் திருமகளைக் கொண்டுவந்த
சாமத் துரோகியவன் தானென்று ரம்மானை
சற்றும் பெருமாள் அறியாமல் சுக்ரீபன்
எற்றிசைக்கு மென்றும் இலங்கை இராவணனும்
வட்டமிட்ட உப்பரிகை மேலே எழுந்தவனும்

கொட்டமிட்ட இராவணனும் குரக்குத்தனம்
பார்த்துநின்றான்

**சுக்ரீவன் இராவணன்மேல் பாய்தல்**

அந்நேரஞ் சுக்ரீவன் ஆகாசத் தேபாய்ந்தான்
மின்னுரு மேக முழங்கி எழுந்ததுபோல்

---

1 ஓசை 2 நீர் 3 சூரியன்

ஆகாச மான அரியமுழக் கங்கேட்டு
வாகான ராவணனும் வானரத்தைத் தான்பார்த்து

இருபது கையும் இயல்புடனே தானுக
பருமுடிகள் தன்னைப் பறிக்கவென்று சுக்ரீவன்
பாய உடனிருவர் பருமலைகள் சாய்ந்ததுபோல்
நொந்ததொரு பூமியிலே நிலமதிரவே விழுந்தான்
விழுந்ததொரு சுக்ரீபன் மேலேஇ ராவணனும்

அழுந்தவே மேனிதனில் அமுக்கியே தானிருந்தான்
அந்நேரம் சுக்ரீபன் ஆகாசமே எடுத்து
இந்நேரஞ் சமுத்திரத்தில் மீளவே தான்போட்டான்
அப்போது இராவணனும் அறிவுமிக உணர்ந்து
மெய்ப்பான இலங்கையிலே மீளெடுத்துத் தான்போட்டான்

ஆக இருவருந்தான் அறிவு மிகச்சோர்ந்து
தாகந் தெளிந்து தன்னறிவு வந்ததற்பின்
வங்கக் கடலதிர மண்ணுலகும் விண்ணுலகும்
எங்கும் நடுங்க இயமபுரம் தான்நடுங்க
அண்டரண்டந் தானெழவே ஆலித்துத் தான்பொருதார்

மின்னுன ராவணனும் மெய்சோர்ந்து நின்றுனே
கன்னுன சுக்ரீபன் கண்டான் நிலைவுடனே
எத்திசையு மெண்ணும் இலங்கை இராவணனின்
பத்து முடியும் பறித்துவந்தா ரம்மானே
கத்துங் கடலடைத்த காயாம்பூ மேனியனுர்

மெத்தவே தானழன்று மேகவண்ண ரென்சொல்லுவார்

## விருத்தம்

ஒன்றிய உடலே உணர்வே ஓருயிர்த் துணைவா வுன்னை
இன்றியா னிழந்தே னுகில் ஆற்றுவது தீமை என்றுர்
அன்றியுந் துயரத் திட்டாய் அமரரை அரக்கர்க் கெல்லாம்
வென்றியுங் கொடுத்தா யென்னை கெடுத்ததுன் வெகுளி
என்றுர்

என்புறக் கிழிந்த புண்ணின் இழிதருங் குருதி யோட
அன்புறத் தரக்கன் தன்னை நீட்டிய தீமை போகத்
தன்பெரு நயன மென்னும் தாமரைத் தடங்கண் நீரால்
அன்பனை மார்பு புல்லி மஞ்சன மாட்டி விட்டான்.

## நடை

அறுபது யோசனை வானரங்கள் தான்சூழ
இருபத்து நாலுபடைத் தலைவருமே யிருக்க
சோத்தமுள்ள சாம்புவனே சூறைகொள்ளு மாருதியே
ஏத்துமோர் சுக்ரீபா பாயவென்று படையெடுத்தார்
ஆண்ட இலங்கை அரக்கன் சிரமுடிகள்
நீண்டு முளைத்து மிகவளர்ந்த தம்மானை
சேர்க்கும் படைமுரசு சின்னங்கொம்பு தாரைசின்னம்
ஆர்க்கும் படைபெருக்கும் அந்தரக்கன் பட்டணத்தார்
பார்க்கவந்தார் தம்மையெல்லாம் பங்கப்படுத் தாதேயென்று
பார்த்துநின்று போகுதென்று சொன்னார் படியளந்தார்

## அங்கதன் தூது

மேகமொத்த பூங்குழலை விட்டுவிடச் சொல்லுமென்று
ஆகமொத்த கையான் அருளான் அங்குதனைப்
போகவிட்டான் தூதாகப் போரரக்கர் பக்கலுக்கு
அங்குதனு மப்போ அரக்கன்முனே சென்றுநின்று
மங்குதுகா ணுன்வாழ்வு வாளரக்கா நீகேளாய்

## விருத்தம்

இராவணற் காகி நின்ற
எரிசுடர் தன்னைக் கவ்வி
இராவணங் கில்லில் வைத்து
இறந்ததோ ரெலியே போல
இராவணக் குழலினாளை
இருஞ்சிறை தன்னில் வைத்து

இராவணங் கருதினாயே
என்செய்தா யிலங்கை வேந்தே!

### நடை

அட்ட வுலகளந்த மாயவனார் தேவியரை
விட்டுவிடாய் நீகெடுவாய் வேண்டா மெனமொழிந்தான்

ஆகவைத்த மூதூர் அரக்கர்பதி அத்தனையும்
வேகவைத்த மந்தியிது வந்ததோடா மீளவுண்டு
மட்டுபட்ட தோளனுமான் மாத்தரக்கன் கைதனிலே
கட்டுப்பட்டு வந்துதென்று கண்ண னருளாலே
கட்டுப்பட்டு வந்ததிது எங்கையோ நானறியேன்

**யாரெனக்கேட்ட அரக்கற்கு அங்கதன் கூறல்**

அந்தரக்கன் அங்கதனை ஆர்மகன்நீ என்றுரைத்தான்
வந்தரக்கன் தன்னை மதியாமல் வாலுடனே
மேலெல்லாம் விண்டிரத்தம் மெத்தச் சொரிந்தொழுக
வாலிலே கட்டிவைத்த வாலிமகன் நானென்றான்
எந்தகப்பன் வாலிதனை இராமசரத் தாலெய்த

அந்தரக்கன் தூதுவிட்ட அங்குதன்காண் நானரக்கா
வாலியவன் என்தோழன் வந்திருடா என்னருகே
கோலவண்ணன் உந்தனையும் கொல்லுவர்காண் நெட்டூரா
இளையதகப்பனையும் கொன்றுன்னை அரசாள வைப்பேன்
பழைய உறவெனக்குப் பாவியே நீவந்திருடா

அங்குதனும் அப்போ அரக்கன் முகனோக்கிப்
பொங்கிச் சினந்தெழுந்து போத மனந்தேறிச்
சங்கந் தரித்தபுகழ்ச் சக்ரபாணி தன்னைவிட்டு
சிங்கத்தின் குட்டிசிறு நரியருகே சேருமோடா
சொல்லச் சினந்தெழுந்து தோளிரண்டு பத்துடையான்

பல்லைப் பிடுங்கவனைக் கொல்லப் பிடியுமென்றார்
கொல்லப் பிடிக்கவந்த கோளரக்கன் சேனையெல்லாம்
வெல்லப் பிடித்து விண்ணுலகம் ஏற்றிவிட்டான்

மண்டி வந்த சேனையெல்லாம் மாண்டு விழப்பொருதும்
மீண்டுவந்து மாயவற்கு விண்ணப்பஞ் செய்யலுற்றார்

பண்சுமந்த தோளானே மாயவரே நாயகியை
விடுவனோ சண்டாளன் என்றுரைத்தான் அங்குதனும்

## விருத்தம்

உற்ற போதவன் உள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீரன் உணர்த்தென்று கூறலும்
முற்ற ஓதியென் மூர்க்கன் முடித்தலை
அற்றபோ தன்றி ஆசைஅறா தென்றான்

## நடை

அப்போ பெருமாள் அதிகோப மாகநின்று
அடுத்தார் சிலைப்பெருமாள் அம்புவில்லுஞ் சக்கரமும்
எடுத்தார் படையை உலகீரேழும் நின்றதிர
இந்திரவட் டம்வெய்யோன் அறியா திலங்கையிலே

வந்துவிட்டான் மாயன் வடக்குவா சல்தனிலே
தேசமெங்கும் எண்ணு மரக்கன் திடுக்கிடவே
... ... கட்டி வளைந்து கொண்டா ரம்மானை
... ... அரக்கன் அதிகாயனை அழைத்து
கூவென்று வந்த இக்குரங்கு தன்னையெல்லாம்

வென்றுவா வென்று விடைகொடுத்தான் மேலரக்கன்
நன்றெனவே தொழுது நல்ல அதிகாயன்
எத்திசைக்கு மெண்ணும் இராமசரத் தெதிரே
பத்துத் தலைவன்மகன் படையுடனே வந்தெதிர்த்தான்
வந்தரக்கன் தன்தளமும் மாயனுட தன்தளமும்

அந்திரமே எண்ணும் அரக்கர் படைபொருதார்
மெத்தச் சினந்தெழுந்து வெங்கடவா னரதளத்தார்
தத்தும் பரியரக்கன் தளமுறிந்து துளெழவே
கிட்ட மதிலிலங்கைக் கீழ்வாசல் தனிலே
விட்டார் பதினேழு வெள்ளம் படையம்மானை

வீருய்ப் பதினேழு வெள்ளம் படையம்மானை
மாருகத் தெற்குவாசல் நின்ருன்கா ணம்மானை
மாருதியும் மேற்குவாசல் நின்ருன்கா ணம்மானை
ஆராய லட்சுமணனும் சுக்ரீபன் விபூஷணனும்
வீராதி விரன் பதினேழு வெள்ளமுடன்

வாழு மிலங்கை வடக்குவா சல்தனிலே
சூழும் இராகவனும் தோன்றநின்ரு ரம்மானை
செல்லு மிரண்டுவெள்ளம் சோ[1]யியற்றிக் கொண்டு
செல்லு மிலங்கைதனில் சென்றனன்கா ணம்மானை
மேலு மிருந்தாலும் வெங்கலவா சல்தோறும்

ஆலிலையில் பள்ளிகொண்டார் அணிவகுத்தா ரம்மானை
இலங்கையர் கோனும் இருநூறு வெள்ளமுடன்
துலங்கும் இராவணனும் தோன்றினன்கா ணம்மானை
மன்னு மிலங்கை வடக்குவா சல்தனிலே
சொன்ன இராகவனுந் தோன்றினர்கா ணம்மானை

இடிமுழங்கத் தம்பட்ட மயிராக் குடிமுழங்கப்
படிபொறுக்க வொண்ணுப் படைஎடுத்தா ரம்மானை
கூறுள்ள நீலன் குமுதனுட னங்குதனும்
காலமென்னுஞ் சாம்புவனும் கண்டா னனுமானும்
வெகுவாயிக் குரங்குவெள்ளம் வேண்டும் படையுடனே

மண்ணுவிண்ணும் நின்றதிர வந்துபடை செய்யலுற்ருர்
மெத்தவந்த சேனையெல்லாம் மீளத் தலையறுத்தான்
அந்நேரங் கோபத் துடனே அரக்கனுந்தான்
மன்னன மந்திரிகள் மன்னவருந் தான்பிடிக்கச்
சொன்னதொன்றும் கேளாமல் துரத்தி நடந்துவந்தார்

## அதிகாயன் போர்

அப்போ அதிகாயன் அய்யரே நில்லுமென்று
மெய்யா அதிகாயன் மேகம் அதிர்ந்ததென்ன
சங்கிலியால் பூட்டிவைத்த தனிலையவீ ரனைவிடுத்து

---

1 அரண்

வேங்கையர்களை சீறி விண்ணவர்கள் கொண்டாட
மல்லாருஞ் சோடுகளை அத்தனையுந் தான்பூட்டி

செல்லாகச் சீறிச் சென்றான் அதிகாயன்
நின்றா னதிகாயன் நெடுங்கோபந் தன்னுடனே
குன்றுபோல் நின்ற குரக்குத் தளந்தனையே
சென்றுகண்டு தான்கூட்டி சேனைஎல்லாந் தான்துரத்தி
நாலுதிக்குங் கூடி நின்ற நாராயணன் தளத்தைக்

கோலியே தான்துரத்திக் கொன்றான் அதிகாயன்
சென்றான் அனுமான் சீராமன் படைக்கெதிரே
சென்றபடை உள்ளதெல்லாம் சிந்தவே தான்பொருதி
நீண்டதொரு நாரணனார் நின்றதொரு வாசலிலே
சேரவே தான்துரத்திச் சேனையெல்லாம் தான்முறிய

கூர்வாய் நெடுஞ்சரத்தால் கொன்றுவிண்ணி லேற்றிவிட்டான்
அரக்கர் குமரன் அடர்ந்து பொருகையிலே
வில்லுக்கு லட்சுமணன் விபூஷணனைத் தான்பார்த்துச்
சொல்லுக் கரசேநீ சோதி மணிவிளக்கே
உனக்காக நான்பொறுத்தேன் உத்தமனே என்றுரைத்தார்

எனக்கான நாயகமே லட்சுமணரே கேளீர்
ஆழிதுயில் மாலே அச்சுதா விண்ணப்பங்கேளீர்
மாளப் பொடிபடுத்தி வானேற விட்டருளீர்
அதிகாய னிப்போது அடர்ந்து பொருகையிலே
அதிசூர லட்சுமணன் அங்கே வந்தெதுத்தான்

## விருத்தம்

பசும்படு குருதியின் பண்டு சேறுபட்டு
அசும்புற உருகிய உலகம் ஆர்த்தெழக்
குசும்பையின் நறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையுங் கடந்தது விரிந்த தூளியே

தாமிடித் தெழும்பணை முடிக்கும் சங்கினம்
ஆம்இடிக் குமுறலும் ஆர்ப்பின் ஓசையும்

ஏமுடைக் கொடுஞ்சிலை இடிப்பும் அஞ்சித்தம்
வாய்மடித் தொடுங்கின மகா வேலையே

நடை.

ஆர்ப்பாரத் துடனே அடர்ந்து பொருகையில்
இலட்சுமணர் கண்டு எய்தார் தலைதெறிக்கப்

பட்டான் அதிகாயன் பாரமுடி தெறிக்க
அட்டகிரி யதிர அதிர்ந்து மிகவிழுந்தான்

## அதிகாயன் வீழ்ச்சியறிந்த இராவணன் போர் செய்ய முற்படல்

படையிற் பிழைத்தொருவன் பதறியவ னோடிவந்து
படைத்தலைவ ரையும்நொறுக்கி பரிவான தேர்நொறுக்கி
மோதி யடித்தவரைத் தான்செயிற்று நின்றெதிர்த்தான்

கொன்றுழக்கி விட்ட குரங்கிதுகாண் என்றுசொன்னான்
ஒருபது சென்னி இருபது கையுடனே
இருபது கண்ணும் எரிபறக்க முன்விழித்துச்
சீறும் புலிபோலே செகத்தேர் மேலேறி
ஏறினான் வாளரக்கன் எட்டுத்திக்கும் நின்றதிரப்

பத்துத் தலைவன் பகவான் ஒளிபோலே
மெத்த ஒளிபறக்க விண்ணுளோர் தான்காண
கோலக் கொடிபறக்கக் கொற்றக் குடைநிழற்ற
மாலைக் குழலிவந்து வண்டோதரி விலக

## இராமனை எதிர்த்துப் பொருத இராவணன் தோற்றுத் திரும்பல்

எத்திசையு மெண்ணும் இராமன் சரனெதிரே

பத்துத் தலைவன் படையுடனே வந்தெதுத்தான்
மெத்த முறிந்தோடி வெங்கடவா ணர்தளத்தான்
கண்டு பெருமாள் விபூஷணனைக் கண்ணோக்கி

அண்டர் பிரான்படையோ ஆரோ அறியேனான்
கத்துங் கடல்வண்ணன் கருணா கரனேயிவன்

பத்துத் தலையுடைய பாவியிவன் நம்புவியில்
மெத்தப் பெருமாள் விபூஷணனைக் கண்ணோக்கித்
தத்தும்பரி வாளரக்கன் தளத்தை மிகமுறிய
குத்தித் தலையறுத்தார் குன்றுபோலே குவிய
போற்றும் பெருமாள் பொன்னின் சிலைவாங்கி

ஏற்றி யிராவணனை எய்தார்தலை தெறிக்கத்
தோற்றே யரக்கன் தளம்படைகள் தூள்பறக்க
ஆற்றாம லோடி அரண்மனைக்கு ளேபுகுந்தான்

## விருத்தம்

வாரணம் பொருத மார்பும்
 வலியகுன் றெடுத்த தோளும்
நாரத முனிவற் கேற்க
 நயம்பட உரைத்த நாவுஞ்
தாரணி மவுலி பத்துஞ்
 சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு
 வெறுங்கையே மீண்டு போனான்.

மாதிர மெவையு நோக்கான்
 வளநகர் நோக்கான் வந்த
காதலர் தம்மை நோக்கான்
 கடற்பெருஞ் சேனை நோக்கான்
தாதவிழ் கூந்தல் மாதர்
 தனித்தனி நோக்கத் தானே
பூதல மென்னும் மங்கை
 தன்னையே நோக்கிப் புக்கான்

நடை

## இந்திரசித்துப் போர் செய்யப் போதல்

பாவைப் படையும் பாவினையுந் தான்சூழக்
காவைச் சிறந்த வண்டோ தரிகண்டு
சொன்னேன் தவிர்ந்திலையே சொற்பெரிய போர்வேந்தே
மன்னுஉன் னுயிர்தாழும் மணிமுடியும் தோற்றுமென

தேர்நின் றிறங்கித் திகைத்துநின்று வாளரக்கன்
ஏரிலங்கை மன்னன் இந்திரசெயித் தைஅழைத்து
வில்லுத் தளங்கோடி வேந்தர் தளங்கோடி
சொல்லத் தொலையாப் படையா யிரங்கோடி
எண்ணு யிரந்தேர் இலக்கற்ற காலாளும்,

மண்ணுளும் வேந்தன் வயிரமணித் தேரேறி
கொடிய சினத்துடனே கோபித் தெழுந்திருந்து
படிபொறுக்க வொண்ணுப் படையுடனே தோன்றுவனும்
கற்றைச் சடையான் அரக்கன்மகன் வந்தெதிர்த்தான்
புற்றரவங் கொண்டு புறப்பட்டா னம்மானை.

அழியு மிலங்கை அரக்கன்மகன் வந்தெதிர்த்தான்

## இலக்குவன் இந்திரசித்துப் போர்

பொழியு மழைக்கால்போல் போதக் கணைதொடுத்து
அங்கே இலட்சுமணர் அதட்டி எதிர்பொருதார்.
பாரச் சிலைவாங்கிப் பகழி தொடுத்துவிட்டான்
வீரக்கணை சென்று மேகநாதன் தேர்சுழல

அக்கரத்தில் அம்புபட்டு அரைநா ழிகைஎனவே
சக்கரம் போலே சுழன்றதுவே யம்மானை.

## குரங்குப்படையை நாகாத்திரத்தால் கட்டுதல்

ஆக மிகக்கொதித்து அரக்கன்மகன் சினந்து
நாகக் கணைதொடுத்தான் நாராயணன் தளத்தைப்
பையவருஞ் சென்னியந்தப் பச்சைநிறத் தான்படையைக்
கையுமெய்யு மாடாமல் கட்டிவைத்தா ரம்மானை.

### விருத்தம்

வேல்பாகன் குன்றழிக்கும் வீராதி வீரற்கும்
கால்ச்சொல்லுங் கவந்த னுயக்கு... ...
மூலசொற் பெற்ற மாதா முதலுக்கும்
வாலிக்குமே அயன் றனக்கும் வானேற வலியதம்மா

### நடை

## இந்திரசித்துத் தன்வெற்றியைத் தந்தையிடம் கூறல்

சீரா யிலங்கை அரக்கன்முன்னே சென்றுநின்று
நாரா யணன்தளத்தை நாகபா சத்தாலே.
வாராமல் கட்டிவைத்து வந்தேனுன் மன்னவனே
நேராக நான்போய் நெகிழ்த்தா லொழியவனை
ஆராகிலுங் கூடி அவிழ்க்கமுடி யாதென்றான்

மெய்யென்று சொல்லுமந்த மேகநாதன் சொற்கேட்டு
ஐயிரண்டு சென்னி அரக்கன் மனமகிழ்ந்து
கண்கள் களிகூர்ந்து கையாலே எடுத்துத்
திங்கள் முகத்தானைத் திருமார்பிலே அணைத்துப்
பூமிமகள் பொருது புண்டரிகத் தாள்பணிந்தார்.

நேமி உலகளந்த நீண்டாரும் பாத்திருந்து

## கருடனால் நாகபாசம் நீங்கச் செய்தல்

அஞ்சாம லிப்போ அரக்கனோடா கட்டிவிற்பன்
நஞ்சேனை தன்னை இந்த நாகமோ கட்டுமென்று
அண்டர் தொழவந்த கெருடன் தனை அழைத்து
கட்டரவங் கட்டி நெகிழ்ந்தோடும் படியாக

அப்போ பெருமாள் அரவின்மே லும்வரவே
தப்பாமல் கெருடன் தானேங்க என்றோடிச்
சென்று கெருடன் சிறகினா லேயடிக்க்
ஒன்றுபடக் கட்டுநெகிழ்ந் தோடலுற்ற தந்நாகம்
மீண்டபடை மூண்டெழுந்தார் வேங்கடவா ணர்தளத்தார்

(ஓலையின் ஒரு பகுதி ஒடிந்துவிட்டது)

மூண்ட படைவெள்ளம் ஆர்ப்பரவந் தான்கேட்டு
திடுக்குற்றுக் கலங்கித் திகைத்தங் கிராவணனும்
மட்டுறு வாய்மகனே நாகபா சத்தாலே
கட்டிவைத்தே னென்று சொன்னாய் கடும்பாவி

**இராவணன் போருக்குப் புறப்படல்**

வெற்றித் தளத்துடனே வேந்தன் இராவணனும்
கொற்றச் சிலேயும் நிறைவாளுங் கைவேலும்
தாண்டும் பரித்தேரும் தாமொரு கோடிவரவே
பூண்டுமத யானேபோல் புறப்பட்டான் வாளரக்கன்
துய்ய இராவணனுந் தோன்றுஞ் சிலேவாங்கி
எய்தான் விபூஷணனே ஏற்ருர் இலட்சுமணர்

மண்ணு மறைநாலும் வானவரும் தேவர்களும்
எண்ணும் பெருமாளுக் கிளேயபெரு மாள்வரவே
மண்ணுண்டார் தாமும் மயங்கி விழுந்ததற்பின்
கரங்களிரு பதுடைய இராவ ணன்தான்
தரங்கள் முயன்றரக்கன் தானெடுக்க மாட்டாமல்

கனகச்சடை யானிருக்குங் கயிலேமலே தானுமல்ல
கடல்வளேந்த மண்ணுமல்ல விண்ணு மல்ல
சுடர்மிக்க மதியுமல்ல சூரியஞர் தானுமல்ல
எண்ணு வியமனல்ல இந்திரஞர் தானுமல்ல
தம்பிநீ யெனக்குக் கனமா யிருந்துதென்ருன்

... ... குதித்துநின்று கையுமெய்யு மாடாமல்
... ... குறைந்து நின்ரு னிராவணனும்
வாழி மிகமெலிந்து மண்மேல் விழுந்தவரை
தாவிக் குதித்தனுமான் தரையில் தரியாமல்
கோவித் தனுமான் குத்திஞன் மார்புதன்னில்

குத்துப்பட் டாரதிகை கொம்புள்ள அத்தனேயும்
மெத்தக் கழன்று விழுந்ததுவே யம்மானே
மாந்த விழிகழன்று வாளரக்கன் தான்மயங்கி

வேந்தர் பெருமாள் மிகவெறுப்பார் நம்மையின்று
அந்த அனுமான் அணுகநின்று எண்ணுகையில்

மெச்சிக் குரங்கை மிகநோக்கி என்சொலுவான்
அச்சந் தெளிந்தரக்கன் அவனைமுக நோக்கித்
தன்னுடைய கைதான் இருப்புலக்கை யோஅனுமான்
முடிசிந்தப் பொறிகலங்க முகத்தில் குத்தினையே
மெச்ச வேண்டாம் இலங்கை ராவணனே

உன்னை மெச்சவேணும் உலகளந்தோன் தன்னுணை
என்று சினந்து எழுந்தா னிராவணனும்
அப்போ திராவணனும் அகன்றுவிட்டுப் போனதற்பின்
... ... மிகமெலிந்து மண்ணில் விழுந்தவனை
தூக்கும் புகழனுமான் தூக்கிஒரு கையாலே

அண்ட முலகளந்த அச்சுதனார் தம்முடன்
கொண்டுசென்று முன்வைத்துக் கும்பிட்டு நின்றனுமான்

**மயக்கமுற்ற இலக்குவனைக் கண்டு இராமன் வருந்தி அழல்**

**விருத்தம்**

மனைவி தேடலாம் மக்களைத் தேடலாம்
புரவி நாடகம் பூதலந் தேடலாம்
வினையில் தேடொணா மெய்யுற்ற தம்பிநீ
உனையி ழந்துநான் உய்யுமா றெங்ஙனே

கடல்கி டந்தபுக் கரக்கனார்க் கருவொடுகலக்
கிடர்கி டந்தியான் இருப்பநீ நல்கியதோ
உடல்க டந்தனவோ உனைஅரக்கன் வில்லுதைத்த
அடல்க டந்தனவோ என்னஅக் குலத்தழுதார்

அன்னையும் பிதாவும் வேறாய் அயோத்தியும் அரசும் விட்டு
மின்னையும் பிரிந்து வேத விதியையும் பிரியாத தம்பி
உன்னையும் இழந்து நானும் உயங்கற்கு உலகுதன்னில்
என்னையு மறிந்துன் னாவி கொள்வனோ தமியன் னென்றார்.

நடை

தம்பியை யின்றித் தனித்திருக்க வல்லேனே
எம்பியை இல்லாமல் அரசாள வல்லேனே
என்று பெருமாள் இரண்டுகண்ணும் நீர்த்ததும்ப
கன்றிழந்த கன்றுப்போல் கதறினர்கா ணம்மானை.
கந்தக் குழலாள் கமண்டலத்தில் நீர்கொடுபோய்
எந்தம் பிரானேஎன் றிருகையால் தான்கொடுத்தாள்

அப்போது வாங்கி அரியதொரு நாரணரும்
இப்போது நீயிங்கே எழுந்திருக்க வேணுமென்றார்
படருமணி யுடம்பைப் பச்சைவண்ணர் கையாலே
தடவ உயிர்பெற் றெழுந்திருந்தார் தம்பியரும்
பெய்யு முகில்போலப் பெருமாள் எழுந்திருந்து

கையிலே வில்லெடுத்துக் கனகமணிச் சரத்தால்
குரக்குப் படையார்ப்பக் குவலயமே தானதிர
அரக்கர் படையை அறுத்தார் அவரொழிய

## இராம இராவணப் போர்

போது புறங்கொள்ளும் புற்பகத்தின் மேலேறி
சோதி இராவணனும் தோன்றினன்கா ணம்மானை.

புண்ணியமும் பாவமும் போர்செய்தா லாமோதாம்
மண்ணி லிராகவனும் வாளரக்கர் கோமானும்
விண்ணுந் திசையும் விரிகடலும் நின்றதிர
பத்துக் கரத்துடனே பாரச்சிலை யெடுத்துப்
பத்திரட்டிக் கையில் பகவாழி தனைக்கொடுத்து

வெள்ளம் பொழிந்ததுபோல் வேந்தன் இராவணனும்
வள்ளல் இராகவன்மேல் வாளிதனைத் தொடுத்தான்
பாரேழும் போற்றும் பரசிராமன் கொடுத்த
வீரச்சிலை வளைத்து வெற்றிக்கணை தொடுத்தார்
ஆனை பவிஞ்சும் அடல்பரியுங் காலாளும்
சேனைக் கடல்கவுந்து சேனைத் திரள்மேலும்
வாளரக்கன் மேலும் சகோதரனார் தன்மேலும்

தோளிலக் கணையைத் தொடுத்துவிட்டா ரம்மானை.

### இராவணன் தோற்று நிற்றல்

வெற்றிப் படையோட வெள்ளானை தானோட
உற்ற பெரும்படையும் அற்றதுகா ணம்மானை

சித்திரத் தேர்குலையத் தெய்வப் படைகுலைய
வைத்த அணிகுலைய வாளரக்கன் கைகுலைய
மெத்தத் தவங்குலைய மெய்க்கவசந் தான்குலைய
கொற்றமும் பத்தும் குலைந்தது காணம்மானை
காதிற் குலைபோட்டுக் கையிற் சிலைபோட்டு

மீதிற் சிரம்போட்டு மெய்க்கவசந் தான்போட்டு
போதிற்புலன் போட்டுப் புத்திவிசாரம் போட்டு
வேதித்து நின்றரக்கன் வெட்கிநின்றா னம்மானை

### இராமன் கருணை

பாளைவருங் கமுகைப் பாத்துச் சினந்தெழுந்து
வாளைதா வுங்கோசல நாடுடைய வள்ளலுந்தான்

ஈனமதி கோமானே இன்றுபோய் நாளைவாஎன்று
கோசல நாடுடையார் சொன்னார் ராவணனை

### விருத்தம்

ஆளை யாஉனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நவின்றனன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடைய வள்ளல்

### தோற்ற இராவணன் துயரொடு கிடத்தல்

அறங்க டந்தவர் செயலிதென்று உலகெலா மார்ப்பத்
திறங்க டந்துதன் நீலமால் வரையொடு நின்றான்
இறங்கு கண்ணினன் எல்லழி[1] முகத்தினன் மாள
வெறுங்கை நின்றனன் விழுதுடை யாலெனு மெய்யான்.

---

1 ஒளியிழந்த

### நடை

அம்மருவுஞ் செங்கதிரோன் அத்தவுடல் பார்க்கக்
கண்மலர வாழியந்த காகுத்தன் தனைப்பார்க்கத்
தேன்மருவு வளநாடு தென்னிலங்கை தான்பார்க்கப்
பூமியைப் பாத்தரக்கன் போயினன்கா ணம்மானை
வல்லியர்கா தல்விட்டு வண்டோ தரியும்விட்டு

செல்வந் தனையும்விட்டு தெய்வச் சபையும்விட்டு
மெல்லணையில் மேலரக்கன் மேவினன்கா ணம்மானை
மெல்லணையில் மேல்படுப்பன் விழுவன் எழுந்திருப்பன்
மெய்க்குள் நடுங்கிடுவன் மேல்மூச்சுத் தானெறிவன்
கைக்குள் முகத்தைவைப்பன் கங்குல்விடி யாதெனவே

மெலிவுமுல குள்ளதெல்லாம் வேனலாய்த் தோன்றிடுமாம்
காலியு மாயவரைக் காணலாய்த் தோணிடுமே

### இராவணன் மாலியவானிடம் நிகழ்ந்தது கூறல்

மாலியவான் பேரவைக்குள் வந்தனர்கா ணம்மானை
வந்தமயக் கங்கேட்டு மாலியவான் தானும்வந்தான்
வந்தவனைத் தன்னருகே வாவென்றரு கழைத்துப்

பந்த முடனே படைவெட்டப் போனதுவும்
நானு மிராகவனும் நாடிப்படை பொருதும்
வானுலகந் தூள்பறக்க மண்டிப் பொருததுவும்
சிந்தையிலே சென்றுநின்று செப்பினர்கா ணம்மானை

### மாலியவான் அறிவுரை

வாளரக்கன் சொன்னதெல்லாம் மாலியவான் தான்கேட்டு

காளமுற்ற கண்ணாள்தன் கடுஞ்சிறையை விட்டுவிடாய்
நாள்படவே வாழாமல் நல்முகுத்த முண்டாகும்
ஏடகத்தை விட்டுவிடாய் என்றுசொன்னான் மாலியவான்
இன்பமற்ற புத்தி இராவணனுக் கென்சொலுவான்

### மகோதரன் கூற்று

வானவர்கள் கொண்டாடும் மகோதரனுக்
கென்சொலுவான்

தேன்மருவும் வார்குழலாள் சீதைசிறை விட்டுவிடாய்
நானிலத்தோ ரெல்லாரும் நகைப்பரே என்றுசொன்னான்
அத்திலுள்ள சேனை ஆயிரவெள் ளமிருக்க
கூற்றுவன்போ லேமிகுத்த கும்பகனார் தாமிருக்க
ஏற்ற அதிகாயன் இந்திரசெயிற்றுத் தானிருக்க

தோற்பா னிராவணனோ என்றுசொன்னா ரம்மானை
சென்று புகுந்தான் திருமா ளிகைதனிலே
கோவென் றெழுந்திருந்தார் கோனேரியார் தளத்தார்
மேகநாதன் தன்னை விரையஅழைத்து வாளரக்கன்
கோவன் றெழுந்திருந்தார் குரக்குத் தளத்துடனே

மாணடவர் தானுமிங்கே வாரதுதான் பாத்திருந்து

### இந்திரசித்தைப் போருக்கனுப்பல்

இந்திர செயிற்றுக் கிலைபிளவு[1]ந் தான்கொடுத்து
இன்று தெரியு மிந்திரசெயிற் றுன்சமத்து
வென்றுவா வென்று விடைகொடுத்தான் மேலரக்கன்
ஆகமிகக் கொதித்து ஐயரே பாருமினி

வேக மதகிரியும் வீரவச்சி ரமுடியும்
சேரப் படைத்தலைவர் சென்றனர்கா ணம்மானை
எட்டுத்திக்கு நின்றதிர எழுபதுவெள் ளங்குரங்கு
மட்டுத்த பூந்துளசி மாயன் தளத்தாரும்
மோதினார் வேகமுடன் மேகநாதன் தன்னுடனே

சாடினார் குன்றெடுத்துத் தாரணியில் தூளெழவே
நாடினார் வானரங்கள் வால்குலைறந்து நின்றனவே
வெத்தி மிகுத்தெழுந்து வென்றி இலட்சுமணர்
எத்திசையு மெண்ணும் இராவணன்தன் சேனைஎல்லாம்
கொக்கரித்துக் குத்தித் தவிடுபொடி யாக்கி

எக்களிக்கக் கொன்றுழக்கி ஆர்ப்பரித்தா ரம்மானை.

### இலக்குவன் இந்திரசித்துப் போர்

ஏருற்ற மேகத்திலே இந்திரசெயிற்றுத் தானெழுந்து

1 வெற்றிலைப்பாக்கு

பாரச் கிலேயுடனே பாய்ந்தனன்கா ணம்மானே
அவ்வளவில் இலட்சுமணர் அங்குதன்தோள் மேலேறி
மெய்க்கவசம் விழுந்த வில்லுமம்புந் தானெடுத்து

மற்போர் செய்த மகோதர னிந்திரனுர்
தேசத்தார்க் கெல்லாந் தெய்வ வடிவாக
எண்டிசையு மெண்ணும் இலட்சுமணன் மேல்போரவே
கண்டு குரங்கு கலங்கியதே அம்மானே.
மன்னுக வந்த விருமாஸ்தி[1] ரந்தொடுக்க

முன்னர் குரங்குவெள்ளம் மாண்டதுகா ணம்மானே
போரரக்கன் விட்ட பூவாளியினம் பயந்து
சீராமர் பாதம் தெண்டனிட்ட தம்மானே
எங்கும்ப ரந்துவந்து எழுபதுவெள் ளஞ்சேனே
பங்கயத்தோன் வாளி[2]யினுல் பட்டதுகா ணம்மானே

## பிரமாத்திரத்தால் அனைவரும் மயங்கிக் கிடத்தல்

தாரார் இலட்சுமணன் சுக்ரீபன் சாம்புவனும்
போராடும் வாளியினுல் மாண்டதுகா ணம்மானே
கையா லவனியினில் காய்கிழங்கு கொண்டுவர
தெய்வ விபூஷணனுர் சென்று ரவரொழிந்து
வட்ட வுலகளந்த மாயன்படை அத்தனையும்

ஒட்டொழிய வெட்டி உருண்டு புரண்டோட

## இந்திரசித்து தந்தையிடம் தன் வெற்றி கூறுதல்

பெட்டியும் மூடியும்போல் வெட்டிவந்தேன் பேரரசே
மெய்யென்று சொல்லியந்த மேகநாதன் சொற்கேட்டு
ஐயிரண்டு சென்னி அரக்கன் மனமகிழ்ந்து
வம்புற்ற மாத்தவர்கள்[3] மாண்டா ரெனக்கேட்டு
இன்பக் களியாட்டம் இட்டனர்கா ணம்மானே

## இராமன் தன் ஆட்களைத் தேடிவரல்

வெத்தி இலட்சுமணன் வில்லோசை கேளாமல்

---

1, 2 பிரமாஸ்திரம் 3 மாற்றுர்கள்—பகைவர்கள்

காத்த அனுமான்தன் கொக்கரிப்புக் கேளாமல்
அந்தப் படையில் ஆர்ப்பரவங் கேளாமல்
சிந்தைநொந்து சீராமன் தேடிவந்தா ரம்மானை

## இறந்தவர்களைக் கண்டு இராமன் அழுதல்

தனுவாங்குஞ் சீராமன் தன்முன்னே பட்டவனை
அனுமானைக் கண்டு அழுதனர்கா ணம்மானை
அந்தமுள்ள வாலி அடைக்கலமாய் ஒப்புவித்த
அங்குதனைக் கண்டு அழுதனர்கா ணம்மானை
பிற்கழியாமல் வந்து பிரமாஸ்திரத் தால்பட்ட

சுக்ரீபனைக் கண்டு சோம்பித்தா ரம்மானை
அன்பாகச் சொல்லி அனேகநாள் தானிருந்த
சாம்புவனைக் கண்டுதள் ளாடினர்கா ணம்மானை
எண்ணாயல் பட்ட எழுபதுவெள் ளம்படையை
கண்ணாரக் கண்டு கதறினர்கா ணம்மானை

அண்ணல் இலட்சுமணர் அவர்பட்ட பாடுகண்டு
வெம்பி மனம்தளர்ந்து விம்மினர்கா ணம்மானை
தம்பிதனை எடுத்துத் தன்மடியி லேகிடத்தி
அவனைமிகப் பார்த்து அலறினர்கா ணம்மானை
கையில் பொருளைக் கடலிற் கவிழ்த்தாப்போல்

மெய்யில் துயரொழிந்து விட்டனர்கா ணம்மானை
தாயார் சிமித்திரையார் தன்வார்த்தை கேட்டேனே
அன்னை சிமித்திரையாள் அன்பாகத் தாள்பணிந்து
என்னசொல்லப் போறேனென் றுஅழுதா ரம்மானை
சிந்தையில் பட்டதுயர் தேத்திளனைக் கூட்டிவந்து

காந்து படைநடுவே கைவிட்டாய் தம்பியரே
தம்பி யிலட்சுமணன் தன்னை மிகத்தழுவி
வெம்பி யுயிரடங்கி விட்டனர்கா ணம்மானை
ஏரா மனசிராமன் இலட்சுமணன் பட்டதென்று
தோற்கு மிராவணற்குச் சொல்லத் துடங்கினராம்

## இலக்குவன் முதலியோர் கிடக்கும் களங்காணச் சீதையை இராவணன் அனுப்பல்

ஏற்றெடுத்த வெத்தி எழுபதுவெள் ளஞ்சேனை
பட்டசெ ருக்களத்தைப் பாத்துவர வேணுமென்று
திட்டமுள்ள கற்பான சீதையி லட்சுமியை
புஷ்பகத்தேர் மேலேறிப் போகவிட்டா னம்மானை
சமையும்எழு பதுவெள்ளஞ் சேனைகள் பட்டதுவும்

இமயம் வீழ்ந்தாற்போல் இலட்சுமணர் பட்டதுவும்
அந்தஅனு மான்மேலே அம்புதான் பட்டதுவும்
புந்தியினால் கண்டு புலம்பினள்கா ணம்மானை
எண்டிசையு மீரேழு இலட்சுமணன் சீராமன்
கண்டு புலம்பிக் கதறினள்கா ணம்மானை

குங்குமஞ் சேர்தோளான் கோசல நாடுடையான்
வங்கார[1] மாஎன்னை மாலையிட்டுக் கொண்டுவந்த
பூங்கா வனத்திருந்த பொன்மானை எய்தவனே
எங்கே ஒளித்திருந்தீர் என்றழுதா ளம்மானை
கன்னல்வயல் நாடுவிட்டுக் காடுறைய விட்டதுவும்

தென்னவர்கள் எண்ணுமந்தத் திசதரனார் செத்ததுவும்
முன்னமிரா மர்தம்பி இலட்சுமணர் பட்ட துவும்
காயாம்பூ மேனியனார் கண்ணாளா கட்டழகா
என்னைமணஞ் செய்தியளே எங்கேஎன வழுதாள்
இங்கே யிலட்சுமியே இருந்துவிட்டால் நம்மையினி

அங்கே இராவணன்தான் ஆக்கினையள்[2] செய்குவனே
பாங்காகச் சீதைதனை புஷ்பகத்தேர் மேலேற்றி
சிங்காரத் தேர்மேலே சென்றனர்கா ணம்மானை
பாதகரைத் தாங்காது பத்தாவை[3] யில்லாத
மாதாவைத் தாங்காது மன்னவனை யில்லாத

போதகத்தைத் தாங்காது புஷ்பகத்தே ரென்றுசொல்லி
சீதை மனந்தேற்றிச் திருச்சடையைக் கூட்டிவந்து

---

1 தங்கம் 2 தண்டனைகள் 3 கணவன்

அந்நேரம் புஷ்பகத்தின் மேலேதான் சென்றிரங்கி
சிங்காரத் தோப்புதனில் சென்றிருந்தாள் மாதாவும்

### சீதை வருந்தி அழுதல்

வங்கார மார்பழகா மாயவரே நீறிறந்தால்
கோசல நாடு குடிபோமே என்றழுதாள்
ஆசார மானதம்பி அன்றுன்னைப் பத்திவந்த
வாசாலை[1] யானதம்பி மாண்டதுவுங் கண்டீரோ
குங்குமஞ்சேர் தோளான் குணமுடைய தம்பியுந்தான்
அங்கை வடிவீரன் அசந்ததுவும் கண்டீரோ
கைகொண்டு காட்டவொண்ணுக் கனகமணி லங்கையிலே
மெய்கொண்ட விபூஷணரை வெற்றிமுடி சூட்டி
வைக்கவென்று வந்தது மறந்தனையே வென்றழுதாள்.
சந்திரர்கள் சூரியர்கள் காணுதி லங்கையிலே
வந்துகண்டு போனதொரு மாருதியைத் தோற்றீரோ

### திரிசடை தேற்றுதல்

என்று புலம்பி இருக்குந் தறுவாயில்
செந்தா மரையாள் திருச்சடையாள் என்சொலுவாள்
என்தாயே இலட்சுமியே என்னுடைய விண்ணப்பங்கேள்
மாயவருந் தம்பியரும் மாண்டார்க ளென்றுசொல்லி
வஞ்சமரி லேபொருதான் விட்டுவிடுவா னேகண்டீர்
அப்படியே தானுரைத்து ஆன திரிசடையும்
செப்பமுள்ள மாதாவைத் தேற்றியே வைத்திருந்தாள்
மன்னுரு மாகமங்கள் மெய்க்கவே காத்திருந்து

### வீடணன் இராமனைக் காண வருதல்

அந்நேரம் விபூஷணனுர் ஆர்ப்பாரங் கேட்டுக்
காயுங் கிழங்குங் கனியுமிக வேயெடுத்துப்
போயுமலர்க் காவுதனில் புஷ்பங்கள் தானெடுத்து
மாயன்பால் விபூஷணரும் வந்தனர்கா ணம்மானை

---

1 பேச்சாற்றல் மிக்க

விபந்தியா ளாடும்எங்கும் வேதாளம் தாளமொற்றிக்
கவந்தங்க ளாடுமது கண்டனர்கா ணம்மானை
ஆறுசி ரற்றவெள்ளம் ஆனைபிணம் மீனிழுக்கக்

கார்க்கடல் போல்பெருகிக் கரைகண்டா ரம்மானை
விண்ணோரெண் சாம்புவனை வந்துகண்டா ரம்மானை
கண்ணீரா றுய்ப்பெருகக் காலால் வழிதேடி
பொங்கும் படை த்தலைவன் சுக்ரீபன் பாடுகண்டு
அங்குதனைக் கண்டு அழுதனர்கா ணம்மானை

நீலன் குமுதனுந்தான் நேரொக்கத் தான்கிடந்து
ஆதித்த னைக்கண்டு அழுதுமிக விரங்கிப்
பேதித்து விபூஷணனும் பிணத்தின்மே லேநடந்தான்,
துமிந்தன் திமிந்தனையும் மயிந்தனையும் வந்துகண்டான்
வசந்த னரக்கனையும் வாகுடனே வந்துகண்டான்

கலங்காமல் பட்டணத்தைக் கண்ணுற வேபாத்து
மலங்கவே கொன்றதொரு மாருதியை வந்துகண்டான்
குலுங்க அவன்மேலே கோத்துமிக அம்புபட்டுக்
கண்டதொரு விபூஷணனும் கலங்கிமிக அம்புபட்டு
இந்த நேரத்தில் இராமர்பா தந்தேடி

வந்த தலந்தனிலே மாயவரும் தம்பியரும்
அங்கே இலட்சுமணர் பட்டதொரு மேனியிலே
செங்கையிறு லேயணைத்துத் தியங்க மிகவிருந்தான்
அந்தத் தலந்தனிலே அரிய விபூஷணனும்
செங்கை முகத்தறைந்து தெய்வமே என்றழுது

வந்து அழுதவனை வாய்திறந்து கேட்கலுற்றார்
துங்க முடிவேந்தே சோதிமணி விளக்கே
உங்கள் படையெல்லாம் உபாயத்தால் கொல்லுவித்த
அந்த விபூஷணன்தான் ஆமென்று ரம்மானை
வாராய் விபூஷணனே என்று மனமகிழ்ந்து

வார்த்தை பிழையுரையாய் மன்னு விபூஷணனே

## அனுமனைத்தேடல்

ஆராத வெற்றி அனுமானைத் தேடுமென்றார்
கூறாத வெற்றிக் குரக்கரசனைத்தேட
பட்ட களந்தனிலே பருவதம்போலேகிடந்தான்
நட்டமாய்த் தானிலங்கை நன்றாகச் சுட்டுவந்த

ஆகம் படக்கிடந்த அனுமானைத் தான்தாங்கி
மேகநா தன்விட்ட அம்புதனைப் பறித்துச்

## அனுமனை வீடணன் இராமன்பால் கொண்டுவரல்

செப்பமுடன் கிளர்ந்து சிவந்தெழுந்த சூரியன்போல்
இருந்த விடங்கண்டு இயலான மாருதியே
ஆரணனார் உம்மை அழைத்துவரச் சொன்னார்காண்

மாருதியே வாருமென்று வலக்கையாலேதாங்கி
மன்னர் பெருமாள் திருமுன்னே கூட்டிவந்தான்
பொன்னான மேனியனார் புகழ்சேர் அனுமானைக்
கண்ணான மாருதியைக் கையாலே தான்தடவி
அம்பின் வழிவந்த அருவியெல்லாந் தான்மறைய

செம்பொன் ஒளிபோல திடமான ஒளியெல்லாம்
தாமரைக் கண்ணன் தடவவே அம்புபட்ட
வம்புபட்டு நின்றதொரு மாருதிதன் மேனியெல்லாம்
காயம்பட்ட மேனுடம்பு காணாமல் போனதுவாம்
அன்றுதான் மாயவரும் அதிய துயரமுற்று

எண்ணாமல் மாருதியே இத்தனையும் பட்டாயே

## இராமன் அனுமனிடன் சஞ்சீவி கொண்டுவருமாறு கூறல்

நாமொன்று சொல்லுகைக்கு நல்லனுமானேகேளாய்
சீரார் புரமெரித்த சிவன்கயிலை தான்தோன்றும்
சீருடனே சென்றால் சிறந்தமலை தன்னுடனே
வானமுட்ட நின்ற மகமேருக் கப்பாலே

வானவர்கள் வைத்த மருத்துமலை அம்மலையில்
தாண்டியொரு நாழிகையில் சஞ்சீவி கொண்டுவந்தால்
மாண்டவர்க ளெல்லாம் வருவரென்றா ரம்மானை
அந்நேர மெழுந்து அனுமானு மென்சொலுவான்
சீராமன் தன்மனத்தைத் தேத்துங்கோ ளென்றுசொல்லி

## அனுமன் மருத்து மலையை நோக்கித் தாவுதல்

தாரணையுந் தோளனுமான் தாண்டலுற்றா ரம்மானை
ஆமெனவே தாண்டி அனுமான் வருகையிலே
மாலிபன் மாலியவான் வந்து தவசிருந்தார்
சால அனுமானும் தண்ணீர் மிகக்கேட்டு
மாலியவா னைக்கேட்டு வந்தனர்கா ணம்மானை

விண்ணுடர் கெங்கையிலும் மேலான கங்கையது
தண்ணீர் குடித்துமிகத் தாபந் தணித்துவந்தால்
கண்ணாக நீர்போம் காரியங்கள் நன்றாகும்
எண்ணா வரந்தருவர் என்றுரைத்தா ரம்மானை
அந்தமுனி சொற்கேட்டு அனுமான் மனமகிழ்ந்து

## பொய்கையில் நீரருந்திய அனுமனை முதலை விழுங்கல்

சந்தனஞ்சேர் பொய்கையிலே தண்ணீர் குடிக்கலுற்றான்
மைக்குவளைப் பொய்கையிலே வாழும் பெருமுதலை
மிக்க அனுமானை விழுங்கியதே அம்மானை
முந்த அனுமான் முதலைவயிற் றைப்பீறி
அந்த மடுக்கரையில் ஆர்ப்பரித்தா ரம்மானை

பெருமுத லையொரு பெண்வடிவு தானாகக்
கூறாக னுமானைக் கும்பிட்டா ரம்மானை.
எண்ணா முதலையாய் என்னை விழுங்கியநீ

## பெண்ணாக மாறிய முதலை தன்வரலாறு கூறுதல்

பெண்வடிவாய் நின்றதனைப் பேசென்றா ரம்மானை
தண்டகமா முனிவன் தானுமி ராவணனை

முன்னுகின்ற பாவமினி நீங்கவே என்றுசொல்லிச்
சாந்திபண்ண வேணுமென்று சந்தனஞ்சேர் பொய்கையிலே
தண்ணீரெடுக்க வந்த தையல்நல்லாள் புத்திரனை
அப்பொ குமாரன் அதிகாயனை எடுத்துச்
சீராடி நானும் தெருவில்விளை யாடிவிட்டேன்

இந்நேரந் தாழ்த்ததென்ன என்றுமிகச் சினந்து
முந்தமுனி என்னை முதலை வடிவாக்கி
இந்த மடுத்தனிலே இருப்பதென்று சாபமிட்டான்
அப்போ முனியை அடிவணங்கி யானும்வந்தேன்
எப்போ சாபம்இனி நீங்குமென்று அடிபணிந்தேன்

எடுத்தா ரனுமானை எடுத்து விழுங்கியபின்
வாய்த்த வடிவாய் வருகவென்று சாபமிட்டான்
நானிலத்தில் முன்னாள் நான்செய்த பாபமெல்லாம்
போனதென்று சொல்லிப் போற்றிநின்ரு ளம்மானை
பூங்கா வனஞ்சூழ்ந்த பொய்கைக் கரைதனிலே

நீங்காத மாமுனியை நீதா னறிந்திலையே
எய்தா விலங்கை இராவணனைப் பெற்றெடுத்த
கைகேசியைப் பயந்த காரணன்கா ணம்மானை
மற்போர்த் தோளான் மயில்ரா வணனைவென்ற
சொற்போ ரனுமானே சொல்லுகிறேன் நீர்கேளாய்

மாலியவான் என்னுயிரை வாங்கிவந்தா னென்றுசொல்லி
பூங்கொடியைத் தெண்டனிட்டுப் போயினர்கா ணம்மானை
மற்றை யரக்கருடன் மாலியவான் மாண்டிடவே
சொற்றமிகு அனுமான் கொன்றனன்கா ணம்மானை

### அனுமன் மலைபல தாண்டல்

அந்நேரந் தானனுமான் அறிவுமிக வுணர்ந்து

இந்நாழிகையில் இயல்புடனே பாய வென்று
கெங்கைக் கரைகடந்தான் கேதாரம் தான்கடந்தான்
எங்கு மிகவந்த இமயகிரி தான்கடந்தான்

கண்ணுதலோன் மேவும் கயிலாசந் தான்கடந்தான்
விண்ணவர்கள் வீற்றிருக்கும் மேருவரை கைதொழுதான்

அங்கே பிரதக்ஷணம் ஆதித்தனைக் கண்டனுமான்
இங்கே விடிந்ததென்று ஏங்கினன்கா ணனுமான்
செஞ்சுடரோன் வாராதென்று தெளிந்தா னனுமானும்

## மருந்தை மறந்த அனுமான் மலையையே எடுத்துவரல்

திருந்தும் அயோத்திவந்த சீராமன் தன்தூதன்
மருந்து மலையருகே வந்தனர்கா ணம்மானை

வந்தவுட னேயனுமான் மருந்து மறந்துவிட்டான்
இந்தமலை கண்டு இனிமீண்டு போகவென்றால்
வான்பெரிய விபூஷணனும் மற்றுமுள்ள சாம்புவனும்
காரணமாய் நின்றருளுங் கண்ணீர் சலிப்பரென்று
நாரணனே ஓம்நமோ நாராயணா வென்று

சீராமா என்னச் செப்பி மலைபிடுங்கி
வாரா மலையெடுத்து வந்தனர்கா ணம்மானை
அவ்வளவில் விபூஷணனும் அன்பான சாம்புவனும்
... ... சீராமன் சீர்பாதம் தான்வருந்த
... ... இலட்சுமணன் அசத்தனைப் பாத்திருந்து
... ... ... ... எழுந்திருந்தா ரம்மானை

## இராமன் வருந்திப் புலம்பல்

தம்பிதனைக் கண்டிரங்கித் தாமரைக்கண் நீர்ததும்ப
செம்பவள வாய்திறந்து செப்பினர்கா ணம்மானை.
சீதைசிறை யாக்கிவிட்டேன் சேனையெல்லாம் பட்டுவிட்டார்
தாதைதனைக் கொன்றுவிட்டேன் தம்பியோ பட்டுவிட்டார்

அங்குதனைக் கொன்றேன் அனுமானைத் தோற்றுவிட்டேன்
துங்கமிகு நாடுவிட்டேன் சுக்ரீபன் படைவிட்டான்
மாநிலத்தோர் யாவரையும் வாளினால் கொன்றுழக்கி

வாஞுலகம் போவேனென மாயன் புலம்பலுற்ருன்
சீராமன் சொல்கேட்டுச் சிந்தை மிகத்தளர்ந்து

தப்பாம லிப்பொழுது சஞ்சீவியைக் கொண்டுவர
அப்போதேசென்ற அனுமான் வரப் போருன்
எல்லாரும் பழைய வடிவாய் விடுவார்கள்
வேதாவே கோபமினி வேண்டா மெனமொழிந்தார்
மேதாவி அனுமான் மருத்துமலை கொண்டுவந்தான்

கண்ணுன எம்பெருமான் கண்கலக்கந் தீரவென்று
இன்னு ரென்னுமல் எழுந்திருந்து வானரங்கள்
மாண்டவர்கள் எல்லாரும் மாயவரைத் தாள்பணிந்து
பூண்டுகொண்டு கையாரப் புல்கினர் காணம்மானை.
சிலையிற் பெரிதான சீராமன் தன்தூதன்

மலையை எடுத்தங்கே வைத்துவந்தா னம்மானை

## இராமன் படை உயிர்பெற்றதை இராவணன் காணல்

ஈண்டுகின்ற அயோத்தி எழுபதுவெள் ளஞ்சேனை
ஆண்ட படைத்தலைவர் அல்லாரும் வந்துகண்டார்.
நீண்ட இராவணன்தன் நீள்மதிலைச் சென்றுகிட்டி
கோட்டை மதிலேறிக் கொக்கரித்தா ரம்மானை

மற்பிடி மேகநாதன் வாளியினுல் பட்டவர்கள்
எப்படியே வந்தார்கள் என்ருனி ராவணன்தான்
ஏத்தமுள்ள வெற்றி எழுபதுவெள் ளஞ்சேனை
விரைவில் சென்று விருசணம் பண்ணுமுன்னே
மாருதி சென்று மருத்துமலை கொண்டுவந்தான்

பேருலகில் எல்லாரும் பிழைத்தனர்கா ணம்மானை
கொல்லவொண் ணுதிந்தக் கொடும்படையை நம்மாலே
வெல்ல வொண்ணுரென விளம்பினர்கா ணம்மானை
மாரீசன் மாலியவான் மற்ற அதிகாயன்
பாரோசை யாமரக்கர் பட்டவர்கள் எல்லாரும்

இன்றுவரை வேண்டுமென்று இந்திரசெயித் தெழுந்து
வென்றி யிலங்கைநகர் மேலைவா சல்தனிலே
சீதாங்கனி யைவெட்டித் தெய்வத்தேர் மேலேற்றி
போதார் அயோத்தியிலே போங்கோ ளெனவுரைத்தார்

## இந்திரசித்து நிகும்பலை யாகம் செய்யச் செல்லல்

... ... நிகும்பலை யாகம் வளர்க்க

... ... மேகநாதன் சென்றனர்கா ணம்மானை
வேதங்கள் போற்றும் விபூஷணனார் தாமறிந்து
காதங்கள் சேரும் மதிலிலங்கை போய்ப்புகுந்து
சீதையைக் கண்டிறைஞ்சித் தென்னிலங்கை விபூஷணனும்
யாகம் நடத்தும்வகை என்றுமறிந்து கொண்டு

## நிகும்பலை யாகத்தை அழித்தல்

அந்த விபூஷணனார் அனுமானுக் கென்சொல்லுவார்
இந்திர செயிற்றின் யாகம்அழி யாதிருந்தால்
ஆயிதத் தாலேஅவன் ஆய்விடுவன் என்றுசொல்லி
அரக்கன் விபூஷணனும் அனுமானு மங்குதனும்
அரக்கனி யாகம் அழித்துவிட்டா ரம்மானை

மெத்த விபூஷணனும் மேகநாத னுமாதித்தனும்
குத்தி யமர்பொருது கொக்கரித்தா ரம்மானை

## இந்திரசித்து வீடணன் போர்

மாறுகொண்ட மாயவற்கு வழியுந் திசைகாட்டி
ஏறிக் கடல்கடந்து எழுநூற்றுக் காதவழி
சீறிவந்தா யென்றுசொல்லி மேகநாதனும் எதிர்த்துச்

சீறியமர் பொருதான் சிறிய தகப்பனுடன்
கேட்டங் கிளைய பெருமாள் எழுந்தருளி
ஓட்டமும் நடையுமாய் ஓடிவந்தா ரம்மானை.

## வீடணனொடு இலக்குவன் சேர்ந்து போர்செய்தல்

இந்திர செயிற்றோட லட்சுமணர் வந்தெதிர்த்தார்
அந்தரத்தே செந்தூள் பறக்க அமர்பொருதார்

மேகம் புகுந்தேற்றும் மேகநாத னும்பொருதார்
ஆகம் திமிர்ந்தனுமான் அஞ்சாதே வாருமென்று
வாழ கிரிபோல மகிழ்ந்தனுமான் மன்னவனைத்
தோளில் எடுத்துச் சுமந்துநின்றா ரம்மானை

## இலக்குவன் இந்திரசித்துவின் தலையறுத்தல்

இந்திரன்தன் ஆயுதத்தை இளையபெரு மாளெடுத்து
அந்தரத்தே விட்டு அவன்தலையைத் தான்துணித்து
இந்திரலோகம் புகுந்து எல்லார்க்குந் தான்காட்டி
முந்தவன்றன் தந்தைமுன்னே வைத்தனர்கா ணம்மானை
முன்னைச் சிலையான் மணிமுடியைக் கண்டார்த்தே

## இராவணன் இறந்த மகனைக் கண்டு கதறல்

தன்கை முகத்தில் அறைந்தழுதா னம்மானை
வாய்த்த துணையே மகன்பெரிய சேவகனே
ஏற்றிய வில்லி இந்திரசித் தென்றழுதான்
பத்துத் தலையும் பதைக்க அவன்வயிற்றில்
குத்தி யிரத்தம் குழம்ப விழுந்தழுதான்
பட்டணத்தி லுள்ள பலசாதி அத்தனையும்
கெட்டோமோ வென்று கிலேசமுற்றா ரம்மானை.
தேசந் திறையிடவே சென்று திசைநடுங்க
அஞ்ஞூறு வெள்ளம் அரியதொரு வில்லியமும்
வெள்ளிக்கல் லணை[1]யிட்ட வெள்ளைப் புரவிகளும்
பொன்னின் மணியசையப் போந்த கரியுடனே
(தூபக்கன் பதக்கன்) துயரமறி யாதவரும்
செந்தூள் பறக்கத் திசைகள் பொடிபடவே
எந்தன் கொலுவில்வர என்றுதான் காண்பேனோ
கன்றாத மேனியனே கலங்காத வன்துணையே
மாற்றானைக் கண்டால் மதம்பொழியும் வாரணமே

1 சேணம்

கூற்றுவனுர் இந்திரனைக் கோட்டிகொள்ளுங் காரணமே
எங்கே மகனே இந்திரசெயிற்றே என்றழுதான்
உன்னை இழந்து உயிர்வாழ்வேன் என்மகனே
நானும் வருவேன் நாயகமே என்றழுதான்
எல்லையிலாச் சேனைகொண்டு இந்திரனுர் தன்கொடியை

ஒல்லையிலே வெட்டிவென்ற உம்பரர சாள்பவனே
என்றுநான் காண்பேன் இந்திரசெயிற்றே என்றழுதான்.
மூவுலகு மெச்சும் முடிவேந்தா என்றழுதான்
நாவலோ கத்தீவில் நாலுதிக்கு வேந்தர்களும்
தரியாமல் வந்து சரணமென்று தாள்பணிய

அரிதான மண்டபத்தி லாக்கிறமங் கேளேனே
குன்றுபோ லிராவணன்தான் குமுறி அழுதலித்துத்
தங்கப்பொன் மேடைதன்னில் சலித்து இருக்கையிலே

## மகன் இறந்த செய்தியை மண்டோதரி கேட்டல்

பளிங்குமா மேடைதனில் பஞ்சணைமே லேஇருந்து
துலக்கமுடன் தாதியளும் சொல்லுக்கு மூப்பியளும்

ஆனபணி யாபரணம் அழகுபெறப் பூண்டுகொண்டு
சேனை யுடனே சிறந்து இருக்கையிலே
வண்டாடும் பூங்குழலாள் வண்டோ தரித்தாயே
உன்னுடைய புத்திரன்தான் ஓவியமே பட்டார்காண்
கொண்டாடும் மந்திரியே கோவையிதழ் வாயமுதே

## மண்டோதரி அழுது புலம்பல்

அந்நேரம் வண்டோதரி அழுது மிகஅலறி
என்கண்ணே மணியே கருதலர்கள் கோளரியே
என்னே மகனே எழுந்தொரு சூரியனே
கண்ணே கடலே கருதுவார் காரிடியே
என்று எழுந்திருந்து இருகண் புனல்சொரிய

சென்றுவெள்ள மாதருடன் திருவிசை கொண்டாளே.
கண்டுதிரு மேனிதன்னைக் கண்ணிலொற்றி யேயழுதாள்

வாய்த்தவில்லுங் கொண்டுமணி மண்டபத்தே வாராயோ
ஆர்த்த படையுடனே ஆர்ப்பா ரத்துடனே
கல்லான நெஞ்சே கருணாகர மணியே

சொல்லாத வானரத்தைத் தொலையவே வென்றுகொண்டு
வந்தேனான் என்றிலையோ மட்டுப் படாக்களிறே
எங்கே இறந்துவிட்டாய் என்மகனே என்றழுதாள்
கனகம் பொதிந்ததொரு கண்ணான மேனியனே
இலங்கை அழியுதுகாண் இந்திரசெயிற்றே என்றழுதாள்

சேனை கலங்கிதுகாண் திக்குவேறாகிதுகாண்
மூல பெலத்தாரும் முகம்சோம்பி வாடுதுகாண்
ஓட்டப் படையோடே ஓடிவரக் காணேனே
பரும்பவளத் தூணிருந்து பள்ளிக்கூடந்தனிலே
கையோடு பொத்தகமும் கண்ணாளா காண்பேனே

தெய்வலோகத்திருந்த சேந்த படையோடே
எக்காளம் பேரிகையும் இரண்டருகும் நின்றதிர
விரபட்டமும்புனைந்து மெய்சோரத் தோரமிட்டு
சித்திரக் கையும் சிறந்த மணிமார்பும்
வில்லொடு கையும் விரைந்துவரக் காணேனே

என்றுமுகத் தறைந்து இருந்தபெருஞ் சேனைஎல்லாம்
என்ன படைப்போர் இனிநாம் பொரப்போறோம்
மன்னவ ரெல்லாம் மாளுவது நிச்சயங்காண்
மண்டோ தரிஅழுது மாளிகையிற் சென்றுபுக்காள்
கண்டாருஞ் சேனை கரிபரிகள் காலாளும்

மூல பெலத்தாரும் மூவுலகில் வன்னியரும்
ஆலோலகமாய்அழுது அவரவரே சென்றுபுக்கார்
அந்நேர மிராவணனும் அழுதுமிக நினைந்து

## இராவணன் கும்பகர்ணனை எழுப்பச் செய்தல்

அயிரா பதத்தைஅன்று ஆகாசமே எடுத்துத்
திசையான தம்பியரைச் சென்றெழுப்ப வேணுமென்று

மல்லர்களைத் தானழைத்து வாருங்கோ ளென்றுசொல்லிச்
செல்லெனவே மல்லர் இரண்டுநூ றாயிரம்பேர்
அட்டகஜக் கொம்பை அழுத்தும் இராவணன் தான்
திட்டெனவே மல்லர்களைச் சேரவே தானழைத்து
வானமுட்ட நின்ற மதகரியுந் தானழைத்து

ஆனைதொரு மாவுத்தர் அத்தனையும் வாருமென்று
வட்டமாக மிதித்து மண்டியே கும்பகனை
திட்டெனவே எல்லாரும் சென்றெழுப்பி வாருமென்று
அந்நேரம் கூடி ஆனைமல்லர் எல்லாரும்

## மல்லர் கும்பகர்ணனை எழுப்பல்

சென்றார்கள் கும்பகன்னன் திருமாளிகை தனிலே

இந்திரசெ யிற்றும்பட்டு இலங்கை அழியுதென்று
முந்தரக்கர் சென்று முறையிட்டார் கும்பகற்கு
கலங்கி அரக்கரெல்லாம் கால்சாய்ந்து போகுதுகாண்
இலங்கை அழியுதுகாண் எழுந்திரடா கும்பகனே
உறங்குகின்ற கும்பகனே உங்கள்பெருஞ் சேனைஎல்லாம்

இறந்து விடுகுதுகாண் எழுந்திரடா கும்பகனே

### விருத்தம்

உறங்கு கின்ற கும்பகன்ன உங்கள் மாய வாழ்வெலாம்
இறங்கு கின்ற தின்றுகாண் எழுந்தி ராயெ ழுந்திராய்
கறங்கு போல வந்தெதிர்த்த கால தூதர் கையினால்
உறங்கு வாயு றங்குவாய் இனிக்கி டந்து றங்குவாய்

என்று சொல்ல அன்னவன் எழுந்தி ராமல் கண்டுபோய்
மன்றல் தங்கு மாலைமார்ப வன்து யில்எ ழுப்பலம்
அன்று கொள்கை கேண்மினென்று மாவொ டாளி ஏவினான்
ஒன்றன் மேல்ஓர் ஆயிரம் உழக்கி விட்டெ ழுப்புவீர்

### நடை

உறங்குகின்ற கும்பகனே உங்கள்பெருஞ் சேனைஎல்லாம்

இறந்து விடுகுதுகாண் எழுந்திரடா கும்பகனே
நித்திரை கொண்டேட நீங்கநெடுங் கும்பகற்கு
மத்தளங்கள் தாளம் மணிமுரசு பேரிகையும்
எத்துந் துடிமுரசு எக்காளந் தாரைசின்னம்
வானம் பலதுணிய வான்முழக்க மேமுழங்க

### விருத்தம்

கட்டுறு கவன மாவோர் ஆயிரங் கடிதின் வந்து
மட்டற உறங்கு வான்தன் மனந்தனில் வருத்த மாற
விட்டுற நடத்தி யெட்டுச் சாரதி விரைவின் வந்தார்
தட்டுறு குறங்கு போலத் தடந்துயில் கொள்வ தானன்

### நடை

மதவானை தான்கோடி வான்பரிகள் தான்கோடி
இதமான மார்பி லெறிவட்ட மிட்டெழுப்பச்
சுகமான நித்திரையாய்த் தூங்கலுற்றார் கும்பகனார்
அகமலர்ந்து மல்லரெல்லாம் அரக்கன்முன்னே வந்துநின்று
இருப்புலக்கை கொண்டு இரண்டுநூ றாயிரம்பேர்
திருத்தமுட னேசென்று செவித்தாடை யிலேயடித்தார்

அடித்தமல்லர் தான்சலித்து அறவே மிகமெலிந்து
எடுத்துலக்கை ஏந்திக் கிடக்கலுற்றா ரம்மானை
கொட்டுடனே கூந்தாரி கூரியவாய்ச் சோடாலி
வெட்டித் திறந்தார் விழிபூளை கும்பகற்கு
அழுந்த இலங்கையுள்ள ஆடுமா டத்தனையும்

இங்கிவன்மேல்ச் சாய்த்தார் எழுந்திருந்தார் கும்பகனார்
மூரி நிமிர்ந்து நெடுமூச்சுத் தானெறிந்து
அனந்தல் தெளிந்துமெத்த ஆர்ப்பரவம் தான்கேட்டு
இலங்கை மதிக்க எழுந்திருந்து தானெறிந்து
வாரி எழுந்திருந்தார் வையந் துணுக்கெனவே

கோபப்பசி தீரக் கொழுக்கட்டை யுஞ்சோறும்

## விருத்தம்

இங்கிவன் தன்னையாம் இன்றெ
முப்பலாம் உபாய முன்னித்
துங்கவன் வாயும் மூக்குங்
கண்டுமே துணுக்க முற்று
அங்கைகள் தீண்ட அஞ்சி
ஆழ்செவி யதனி னுள்ளே
சங்கொடு தாரை சின்னஞ்
சமைவுறச் சாற்ற லுற்றார்.

கோடிபேர் தண்டு குந்தங்
குலமழு வல்லோர் கூடித்
தாடைகள் சந்து மார்பும்
தலையெனு மவையிற் றாக்கி
வாடிய கைய ராகி
வலியுற மாண்டு நின்று
நீடிய பரிக ளெல்லாம்
நிரப்பிடும் விரவி னென்றான்

## கும்பகர்ணன் உறக்கத்தினின்றெழுதல்

மூவகை உலகும் உட்க
முரட்டிசைப் பணைக்கை யானை
சேவகந் தீர்ந்த தென்னை
திசைகளுந் திடுக்கிட் டேங்கப்
பூவுளான் புணரி மேலான்
பொருப்புளான் முதல்வ ராய
யாவருந் துணுக்குற் றேங்க
எளிதினின் எழுந்தான் வீரன்

வான ரப்பெருந் தானையர் மானிடர்
கோந கர்ப்புறம் சுற்றினார் கொற்றமும்
ஏனை யுற்றனர் தீயவ னின்னுயிர்
போன கத்தொழில் முற்றுதி போயென்றான்.

கிட்டிய தோசெரு கிளர்பொற் சீதையைச்
சுட்டிய தோமுனம் சொன்ன சொற்களால்
திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோஇது விதியின் வன்மையே.

தேர்செலக் கரிசெல நெருக்கிச் செம்முகக்
கார்செலத் தேர்செலப் புரவிக் கால்செலத்
தார்செலக் கடைசெலச் சென்ற தானையிற்
பார்செலற் கரிதென விசும்பிற் பாய்ந்ததால்

அன்னது கண்டவன் தம்பி யானவன்
பொன்னடி வணங்கியே பொறுத்தி யாலெனா
வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினான்
இன்னும்ஒன் றுரையுள தென்று கூறினான்.

**கும்பகர்ணன் உரை**

**நடை**

தாபத்துட னாயிரஞ் சரடதிலே தான்பிடித்து
வள்ள லிருக்கும் மலைபோலே தான்குவித்துப்
பள்ள மடைதிறந்து பாய்ச்சினால் போல்மதுவும்

**விருத்தம்**

ஆறு நூறு சகடத்து அடிசிலும்
நூறு நூறு குடங்களும் நுங்கினான்
ஏறு கின்ற பசியை எழுப்பினான்
சீறு கின்ற முகத்திரு செங்கணான்.

எருமை ஏற்றையோர் ஏழிரு நூற்றையும்
அருமை யின்றியே தின்றுஇறை ஆற்றினான்
பெருமை பெற்றது கோடுமென் றேபிறங்கு
உருமை ஏற்றைப் பிசைந்துஎரி ஊதுவான்.

## கும்பகர்ணன் அண்ணனிடம் வினவல்

நடை

கோப்பறக்கத் தின்றவனுங் கொள்ளை பசிதீர
மண்ணோர் புகழவரும் வாளரக்கன் முன்சென்று
அண்ணாவி என்னை அழைத்த பணிவிடைஎன்
விண்ணோர் புகழவரும் மேகநாதன் சென்னிகண்டு
கண்ணீர் சொரியக் கதறி விழுந்தான்

என்வார்த்தை கேளாமல் இத்தனையும் பட்டோமே
உன்வார்த்தை மேலாய் உயிரிழந்து விட்டோமே
இலங்கை யழியாமல் எவ்வுயிரும் வாடாமல்
இலங்கைக்கு ராசாவே இலட்சுமியை விட்டுவிடீர்
பிலங்கள் குறைந்தாலும் பேர்மாண்டு போனாலும்

இலங்கை யழிந்தாலும் இலட்சுமியை விட்டுவிடேன்
சொல்லிச் சினந்தெழுந்தான் தோளிரண்டு பத்துடையான்
சொல்லப் பயந்துநின்றான் சொற்பெரிய கும்பகனார்
வேகமளங் கன்னி மெய்வெதும்பிக் கும்பகனார்
ஆக மிகப்பெரிய அண்ணே பொறுத்தருளீர்

## இலக்குவனை அழித்துவருமாறு கும்பகர்ணனை ஏவல்

வட்டமிட்ட வாளும் வயிர மணித்தடியும்
நட்டமிட்டு வாரு(ம்)மென்று நல்லா யுதமெடுத்து
வென்றுசிறை மீட்கவந்த வேடரிரு வரையும்
கொன்று குரங்குதளம் படையைத் தூள்பறக்க
வென்றுவா வென்று விடைகொடுத்தான் மேலரக்கன்

## கும்பகர்ணன் போர்க்குப் புறப்படல்

இடியம்பு நாகரசம் எக்காள தாரைசின்னம்
படைமன்ன ருள்ளதெல்லாம் பார்மதிக்க வேகூடி
எத்துக் கரியும் எண்ணா யிரங்கோடி
செந்தூள் பறக்கத் திசைகள் பொடிபடவே
வந்து புறப்பட்டான் மதம்பெரிய கும்பகனார்

### கும்பகர்ணனை யாரென்று இராமன் கேட்க வீடணன் கூறல்

சென்று புறப்பட்டான் சீராமன் படைக்கெதிரே
குன்றுபோல் வந்தெதித்த கும்பகனைக் கோவிந்தனுர்
நின்றிவனு ரென்முர் விபூஷண ரென்சொலுவார்.

### விருத்தம்

ஆரியன் இனைய கூற அடியிணை இறைஞ்சி ஐயா
பேரியல் இலங்கை வேந்தன் பின்னவன் எனக்கு முன்னேன்
காரியல் காலன் அன்ன கழல்கும்ப கருண னென்போன்
கூரிய சூலத்தான் என்று அவன் நிலை கூறலுற்முன்.

### நடை

அந்தரக்க னுக்கிளையோன் அடியேற்கு முன்பிறந்தோன்
இந்திர செயிற்றேடே இறக்கவென்று வாரான்காண்

### கும்பகர்ணனைத் தம்பக்கம் அழைத்துவருமாறு வீடணனை அனுப்பல்

வீணே உயிரிழந்து மெத்தநொந்து போகாமல் 3190

நீபோய் அவனை அழையுமென்முர் மேலோனும்

### வீடணன் கும்பகருணனை வேண்டுதல்

மேலோ னுரைக்க விபூஷணனுஞ் சென்றுகண்டு
சேலை ஒதுக்கிச் சென்றுநின்று வாய்புதைத்து
என்அண்ணனே நாயகனே இலங்கை அழியிதுகாண்
அன்றுமுதல் அண்ணருக்குச் சொன்னேன் அறிந்திலரே 3195

ஆருத பாவியுடன் அங்கிருந்து மாளாமல்
வாரீரோ அண்ணுவி மாயவரைக் கண்டிருப்போம்
எல்லையற்ற மன்னன் இந்திரசெயிற் றையிழந்து
அல்லைஒத்த தம்பி அதிகாய னைஇழந்து
வாசமுற்ற சோலை மதிலிலங்கை வாழ்விழந்து 3200

பூசலுற்றுப் பொரிந்து போவர்களோ போர்வேந்தே
கிள்ளை யிலங்கை கிளையற்றுப் போகாமல்
கொள்ளைப்பெருஞ் சேனையுடன் கோமானு மில்லாமல்
உள்ள போரில்நீ ஒருவனா கிலும்பிழைத்து
எள்ளுநீரு மிறைக்க இருவென்றார் கும்பகனார்

## வரமறுத்த கும்பகர்ணன் வானரப் படையைத் துன்புறுத்தல்

அரக்கன் விபூஷணனும் மாயரைவந் தேதொழுது
இரக்கமிலான் பின்பிறந்தான் இதத்துக்கு வந்தானிலே
கொண்டாடிச் சீராமன் குரக்குப் படைகலங்க
எங்குங் குரங்கை எடுத்துவிழுங் கலுற்றான்
ஓங்குசெவி வாயிலே ஓடியதே யம்மானை.

## கும்பகர்ணன் இலக்குவன் போர்

அப்போ இளைய பெருமாள் நடந்துவந்து
தப்பாமல் வில்லெடுத்துத் தாக்கினா ரம்மானை
அண்டங் கலங்க அரக்கர் படைகலங்க
கண்டதுண்ட மாகக் கணைதொடுத்தா ரம்மானை.
எம்பெருமான் தம்பி இளைய பெருமாளைக்

கும்பகணன் வந்து குறுகினன்கா ணம்மானை.
வந்துபோர் செய்யவந்த வசந்தனைப் பிடித்துச்
சிந்தூர மாய்த்தேய்த்துத் திலதமிட்டா ரம்மானை.
எந்தனுடன் பிறந்த என்னுடைய தங்கையவள்
உங்களுக்குச் செய்தகுற்றம் ஒன்றுமில்லை யானாலும்

மெய்குழலைத் தான்பிடித்து மூக்கை அறுத்தஉன்னைக்
கைதுணிய வெட்டுவன்காண் என்றுசொன்னான் கும்பகனும்
வில்லினாற் கொல்வதன்றி வெறுகளம் போலே
சொல்லினாற் சொல்லவே கற்றிலன்என் றார்லக்ஷுமணனும்
காராழி தன்னைக் கடுங்கணையா லேயறுத்த

சீராமரெங்கேயென்று தேடினான் கும்பகனும்
எண்ணுஞ்சீ ராமர்தம்பி இலட்சுமணர் வந்தெதிர்த்தார்

## கும்பகர்ணன் இராமன் போர்

தாரார் இராவணன் தம்பியென்னுங் கும்பகனும்
வீரரக்கன் மேலே வில்லி கணைதொடுத்தார்
போராட லாடல் புரிந்தனர்கா ணம்மானை.

கோத்தசிலை வளைத்துக் கும்பகன்ன னெய்யலுற்றான்
கும்பகன்னன் விட்ட கொடுங்கணைஎல் லாமறுத்து
வெத்தி யிலட்சுமணன் மேல்மடியத் தான்பொருதான்
அம்பைத் தொடுத்துவிட்டு ஆர்ப்பரித்தா ரம்மானை
எட்டுவரை யதிரஉல கீரேழுந் தானதிர

வட்ட வுலகசைய வானகந் தானசைய
கொட்டமிட்ட தென்னிலங்கை கும்பகண்ண னார்வளைத்துத்
தொட்ட க்ணைமாரி தொடுத்துவிட்டா ரம்மானை.
வேந்த னிலட்சுமணன் மேனியெல்லாம் புண்பட்டு
நிற்குநிலை தள்ளாடி நின்றனர்கா ணம்மானை

## எதிர்த்த சுக்ரீவனைப் பற்றிக் கவர்ந்து இலங்கை ஏகுதல்

அப்போது சுக்ரீபன் ஆர்ப்பரித்து வந்தெதுத்துத்
தப்பாமல் வெற்றிபெறத் தாக்கினான் அம்மானை
வில்லை வளைத்தரக்கன் வெய்யகணை தொடவே
கொல்லுகின்ற சுக்ரீவன் கோம்பிநின்றா ரம்மானை
அந்நேரஞ் சுக்ரிபனை ஆர்ப்பரித்துத் தான்பிடித்துத்

தென்னிலங்கை தன்னில் சென்றுபுக்கான் கும்பகனும்
எத்தலமு மெண்ணும் எழுபதுவெள் ளஞ்சேனை
அந்தரா மர்பாதம் அடிதொழுதா ரம்மானை
வள்ள லிராகவனும் மன்னவரும் பின்தொடர
உள்ள மிகக்கலங்கி ஓடிவந்தா ரம்மானை

குரக்குத் தன்படையைக் கும்பகண்ணன் தான்விழுங்கி
இமைத்து விழிப்பளவில் நீலவண்ணன் சேனைமுன்னே
கோலமுடன் வந்தெதுத்தார் கும்பகனார் அம்மானை.

கோலிக் குரக்குத்தளப் படையைத் தான்விழுங்க
சேலையுடை யனுமான் செவியிற்பிற் பட்டோடி

பரக்கும் புவியளந்த பச்சைநிறத் தான்படையை
துரத்திப் பொருதானைச் சுக்ரீபனை ப்பிடித்துத்
தூக்கி எடுத்தவனைத் தோள்மேலே வைத்திலங்கை
நோக்கி வழிநடந்தான் நூலுடைய கும்பகனுர்
கும்பகன்னன் போகாமல் கோட்டை யுள்முகத்தை

அம்பைத் தொடுத்து அடைத்துவிட்டா ரம்மானை.
பொன்னிலங்கை மாநகர்க்குப் போகவழி யில்லாமல்
மின்னியவேல் கும்பகன்னன் மீண்டனன்கா ணம்மானை
கொல்லுகின்ற சூலமுடன் கும்பகன்னன் நெத்தியிலே
செல்லுமென நீண்ட அம்பு தொடுத்தனன்கா ணம்மானை

## அம்புபட்டு மயங்கிய கும்பகர்ணன் மூக்கினைச் சுக்ரீவன் பறித்தல்

ஆங்கந்த நெற்றியும் அம்புபட்டுக் கும்பகற்கு
நீங்காக் கணையோடி நின்றனர்கா ணம்மானை
கும்பகன்னன் நாசியையும் கோலக்குழைக் காதிரண்டும்
எக்கி யுடலை இருத்திப் பிடித்திறுகத்
தாக்குடைய கும்பகனை மூக்கரிந்தான் சுக்ரீபன்

பங்கப்பட மூக்கைப் பறித்துவந்தா னம்மானை.
வட்டாரஞ் சூழ்ந்த மனிதரெல்லாம் பாத்திருக்க
விட்டான் குதித்தோடி மீண்டுவந்தா னம்மானை
திண்டேர் முகத்தைச் சீரழித்தா னப்போது

## மூக்கிழந்த கும்பகர்ணன் வானரப்படையைச் சிதறடித்தல்

சண்டாளன் நம்மைச் சதித்தானே என்றுசொல்லிச்

சூர்ப்பணகை மூக்கறுத்த சொல்லுக்கு நாணிநின்றோம்
அரக்கனவன் மூக்கறுந்து வாடிநின்ற னம்மானை
தாக்குடைய கும்பகனுந் தானிலங்கை நாணமுற

முகத்த திருக்க முடியாதே யென்றுசொல்லிக்
குத்தித்துக் கொக்கரித்து மிக்கபடை வானரத்தைப்
பத்திபத்தி யாகப் பதறடித்தா னம்மானை

**இராமன் அம்பினால் கைகளை அறுக்கக் கால்களால் பொருதல்**

கத்துங்கடல் மேனியனார் கையிரண்டுந் துள்ளவெய்தார்
வெத்திபெறுங் காலிரண்டால் விசிமிகப் பொருதான்
வட்டமிட்ட தோளான் வளைந்துபொர வானரங்கள்
பட்டறவே நொந்துகவி பற்காட்டித் தானோட

**இராமசரம் காலைத் துணிக்க அம்மிக் குழவிபோல் உருண்டு அழித்தல்**

மாலோன் மிகவெருண்டு வாளரக்கன் தம்பியரைக்
காலிரண்டும் வீழக் கணைதொடுத்தா ரம்மானை
நீலமலை போலே நிலத்தில் விழுந்தவனும்
மாலவன்தன் சேனை வானரங்கள் தான்மாள
அம்புவி யெங்கும் அகலமுள்ள அம்மியுமாய்க்
கும்பகனார் அம்மிக் குழவியுமாய் உருண்டார்

**வீடணன் வேண்டிக்கொள்ள இராமன் கும்பகர்ணனின் தலையறுத்துக் கடலில் வீழ்த்தல்**

ஆயனே எங்கள் அரனே அருளாளா
மாயனே யந்த மதிகேடன் செய்தபிழை
சேரப் பொறுத்தருளீர் சென்னி கடல்விழவே
ஏவிக் கடுஞ்சரத்தை எய்துவிட வேணுமென்று
மேவி விபூஷணரும் விண்ணப்பம் செய்யலுற்றார்
பாவி யுடன்பிறந்து பட்டதுதான் போதுமென்று
மூக்கிலான் சென்னி முழுக்கடலில் போய்விழவே
போக்கினா லாகுமென்று புண்டரிகத் தாள்பணிந்தார்
அப்படியே செய்வோமென்று அம்பைத் தெரிந்தெடுத்துத்

தப்பாம லெய்தார் தலைதெறிக்க அம்மானை
ஆலைவயல் கச்சி யருளாள ரம்புவிட
கோலமுடி துணித்துக் கும்பகனும் பட்டுவிட்டான்
அம்பு தலைக்கொடுபோய் ஆழிதனி லேபோட
கம்பு[1]லங்கள் ஏற்றிக் கரைபுரண்ட தம்மானை

விரிந்துகடல் சிரசி[2]யிலும் மிக்கதலை வாய்தனிலும்
பரந்த கடல்சுவறிப் பாதிநீ ரானதுவே
அம்மானம் போலே அகன்றகட லத்தனையும்
செம்மானம் போலே சிவந்ததுகா ணம்மானை
குன்றனைய திண்டோளான் கும்பகனார் பட்டபின்பு

### இராவணன் தன் தம்பியை நினைத்து அழுதல்

அன்று கலங்கி அரக்கன் மனந்தளர்ந்து
என்றையிலும் வாடியினி யென்செய்வே னென்றழுதான்
வங்கார மானமணி மண்டபத்தி லேயிருந்து
சிங்கார மான திருத்தூணில் தான்பார்த்தான்
பளிங்குமா மண்டபத்தில் பக்கந்தனி லேயிருந்து

விளங்கவே புத்திசொல்ல வேண்டாமோ தம்பியரை
ஈசுரனார் தாமிருந்த இலகுகயி லாயந்தனை
தேசமெங்கு மெச்சத் திசையரக்கன் தானெடுத்தான்
அந்நேர மீசுரனார் அரிய துயரமுற்று
பொன்னனை மேனிப் பூவையருந் தானதிர்ந்து

காலினா லேமிதித்தார் கலங்கியே நான்தெளிந்து
மெய்யில் நரம்பெடுத்து வீணைதனைப் பாடுகையில்
அம்மை திருச்செவியில் அந்தராகந் தான்கேட்டு
செம்மையுடன் பலன்கள் சேரவே தான்கொடுத்தார்
அன்றுதான் நானும் அரியபலன் பெறவே

வானுலகத் தேவர்களும் வந்துகண்டு நிற்கையிலே
பூமி நடுங்கவந்து போற்றி யிருக்கையிலே
நேமி உலகளந்த நீண்டான்தான் வந்தாலும்

---

1 தண்ணீர்.  2 தலை.

மண்டி மிகப்பொருது வானுலக மேற்றிடுவேன்
என்றுசொன்ன தம்பியரை இறந்தலையோ என்றழுதான்

வந்துகண்டு கைதொழுது வணங்காத மன்னவரை
சிந்திவிழக் கொன்று திறையிட் டவர்வணங்கத்
திக்கு விசையம் திரிந்துநான் போய்வாரேன்
அந்நேரந் தானுன் அதிகபில மாகவென்று
என்னேஎன் தம்பியரே யிந்த இலங்கைதனைக்

கண்ணுனை தம்பியரே காத்திருந்தீ ரென்றுரைத்தான்
முன்னுனை முப்பத்து முக்கோடி பேர்வரினும்
இந்த இலங்கையிலே எவன்வந்தா லும்போதும்
என்றுசொன்ன தம்பியரை எங்கே இனிக்காண்பேன்
குங்குமஞ்சேர் மார்பழகா கும்பகனே தம்பியரை

எந்தப் பிறப்பிலினிக் காண்பே னென்றழுதான்
அப்போ யிலங்கையிலே அரியதொரு இந்திரன்தான்
செப்பமுள்ள சிங்காரம் பார்க்கவென்று தானும்வந்தான்
அயிரா பதத்தி லானதொரு யிந்திரனை
ஆகாச முட்டிநிற்கும் ஆனையிலே ஏறிவந்தார்

வலுவானம் பார்க்கவந்த மதவானை யண்டாமல்
வாகான தெண்டா யுதமெடுத்து வந்துநின்று
சூதாக யானைதனைத் தூள்பறக்க வேயடித்து
ஆனைதனை வால்பிடித்து ஆகாசமே யெறிந்து
வீரப்பட்டந் தான்பறித்த வீரா வென்றழுதான்

**மாலியவான் கூற்றுப்படி இராவணன் எல்லா அரசர்களையும் அழைத்தல்**

மன்றலங்குந் திண்டோளான் மாலியவா னும்வந்தான்
கேளா யிராவணனே கீழுள்ள அத்தனையும்
ஆளும் இராவணனே அழையுமென்று ரம்மானை
மன்ன னழைக்கமயில் ராவணனும் வந்தான்

**வந்த மயில்ராவாணன் கூற்று**

தென்னிலங்கை மன்னன் திருமுகம்பார்த் தேதுசொல்வான்

தன்னந் தளந்தாயே தம்பியரைத் தோற்ருயே
தம்பியரைத் தோற்ருயே தளங்குலைந்து விட்டாயே
வம்புத்த தோளானே மாண்டவர்கள் மாளாமல்
என்னை யழைத்திலையே யிலங்கை இராவணனே
சென்றுநா னிப்போசீ ராமனையுந் தம்பியையும்

கொண்டு வரவோ தான் கொற்றவனே என்றுரைத்தார்.

### இராமலக்குவரைப் பாதாளத்து வைக்குமாறு இராவணன் கூறல்

அல்லாறு மேனி யரக்கன் மனமகிழ்ந்து
நல்லவனே பாதாள நாட்டுக்கு நாயகமே
எல்லாருங் காணுமல் இராமனையும் தம்பியையும்
சொல்லாமல் நீயெடுத்துக் கொண்டுவர வேண்டுமென்ருர்

### அதனை அறிந்த வீடணன் அதனை அனுமனிடம் கூறி எச்சரித்தல்

சொன்ன விசேஷம் விபூஷணற்குத் தூதுவர்கள்
மின்னி மறைந்ததுபோல் விசேஷமிட் டாரம்மானை
வீறி நடந்து விபூஷணரும் அப்போது
கூடி நடந்துவந்து கோமானுக் கென்சொலுவான்
மாதா புயனே மாயவரே இன்றிரவு

சூதான முண்டா யிருமென்று ரம்மானை
அந்த விசேஷ மடவுடனே தான்கேட்டு
இந்த விசேஷ மாயவற்குச் சொல்லாதே
அந்நேரம் விபூஷணன்தான் ஆன துயரமுற்று
இந்நேர மாருதிக்கு இணக்கமுடன் சொல்லவென்று

வாளுடனே யந்த மயிலரக்க னின்றிரவு
காலம் வருவன் கவியனுமான் கண்டாயே
வாலாலே கோட்டையிட்டு வாரான் மயிலரக்கன்
அந்தம் படச்சிந்து ஆதித்தனும் போய்மறைந்தான்

### அனுமான் கோட்டை அமைக்குமுன் மயில்ராவணன் வீடணன் வடிவில் வருதல்

கொந்தலரு மந்தனுமான் கோட்டையிட லுற்றானே
மேலோகக் கோட்டையிட்டான் விண்ணுள்ளு மண்ணுள்ளும்
வாலால் வளைந்தனுமான் கோட்டையிடு வதன்முன்
விந்தைதரும் புயத்தான் விபூஷணரைப் போலேதான்
வந்தான் மயிலரக்கன் மாயன் விடுதியிலே
மாணிக்கப் பொட்டியிலே மாயவருந் தம்பியரும்
தூணிலே நின்றாரும் துஞ்சினார் பஞ்சணையில்
அந்தி மிகச்சென்று அணுகிநின்று தான்தெளிந்து

### உறங்கும் இராம இலக்குவரை மாயப்பொடியால் மயக்கமுறச் செய்தல்

சிந்தினான் மாயப் பொடியைத் திருமால்முன்
ஆயனுந் தம்பியுந்தான் அந்நேரங் கண்துயின்றார்
மாயனையும் தம்பியையும் மாணிக்கப் பாயலுடன்
கட்டி யெடுத்தணைத்துக் காய மலுங்காமல்
பெட்டியுடன் தானெடுத்துப் பேசாமல் கொண்டுவந்து

### அனுமான் கோட்டையில் வெளிவர வழிதெரியாமல் அவனிடம் கேட்டல்

வட்ட மதில்சுற்றி வழியெங்குங் காணாமல்
வீசுபுக ழானே விபூஷணரைப் போலேதான்
ஆசுவனம் [1]பண்ண அனுமான் வழிவிடென்றான்
என்னெச் செவியைத் திறந்தா னியலனுமான்
மன்னன் புகுந்து வழிகடந்து போகலுற்றான்
அந்த உருக்கொண்டு அவனரக்கன் போனபின்பு

### வீடணன் அனுமானுக்கு எச்சரிக்கை செய்தல்

சூதானம் சூதானம் என்றார் விபூஷணரும்
எச்சரிக்கை யுண்டாய் இருமனுமான் என்றார்.

---

1 மந்திரங்கூறி மும்முறை நீரருந்தி வந்தனம் செய்தல்.

இப்போது நீபுறம் போனது எவ்வழிகாண்
ஏங்கி விழுந்தழுது நின்று ரிருவருந்தான்
பகைவன் கதித்தானே பாவியேன் என்றுசொல்லி

## ஏமாற்றமடைந்த இருவரும் வருந்தல்

உபய தளத்தார்க்கும் ஒருவற்குஞ் சொல்லாமல்
இருந்தவிடம் பார்த்து இருவரையும் காணுமல்

பருந்தெடுக்கும் மாயவரைப் பார்த்தெங்கும் காணுமல்
மாயவரைத் தோற்றுவிட்டோம் அந்திலங்கை
நாடுவிட்டோம்
வாசமுற்ற சோலை மதிலிலங்கை வாழ்விழந்தோம்
ஆசையுற்று எமை வளர்த்த அய்யரையுந் தம்பியையும்
இழந்து விட்டோமென்று ஏங்கி விபூஷணனும்

மாய மயிலரக்கன் வருகிறு னென்றேனே
என்றுசொன்ன வார்த்தை இயலனுமான் கேளாமல்
வந்தே யெடுத்தான்காண் மயிலரக்கன் என்ருன்காண்

## விருத்தம்

சந்திர னில்லா வானம் தாமரை யில்லாப் பொய்கை
மந்திரி யில்லா அரசன் மதகரி யில்லா வெம்போர்
தந்தியில் லாத வீணை தனமிலா இளைய பாவை
இந்திர னில்லாக் கேள்வி இராமனில் லாதசேனை

மூப்பிலாக் குமரி போல முனையிலா னிருந்த சேனை
காப்பிலாக் கடிய சோலை கடைவிலா நிறைந்த ஏரி
கோப்பிலான் கொண்ட கோலம் குருவிலா னறிந்த
ஞானம்
ஆப்பிலாச் சகடை போலு மாசிலா நகரந் தானே.

## நடை

## அனுமன் பாதாள வழிகேட்டுத் தேடிப்புறப்படல்

கன்றிமுகம் வாடிக் கண்ணிரண்டும் நீர்சொரிய
அப்போ தனுமான் அவனை மனந்தேற்றி

மண்ணுலகும் விண்ணுலகும் வானுலகுந் தேடி
கண்ணரையுந் தம்பியையுங் கண்டுகொண்டு வாரேன்

மண்ணுலகுங் கீழே வழிகாட்ட வல்லீரோ
தாமரைத் தண்டில் தாவும் புகைபோலே
என்றுவழி விடுத்தான் இயலா விபூஷணனும்

## அனுமன் அணுவுருக் கொண்டு அக்கினிக் கோட்டையினை அடைதல்

அந்தஉரு மாறி அனுமான் அணுவுருவாய்
அக்கினிக் கோட்டை அணுகநின்றா ரம்மானை

சிங்காரத் தோப்பில் சிறையிருக்கு மாதாவே
கற்றைக் குழலாரும் கண்ண திருத் தேவியரும்
மேலுக்கனு மானுக்கு வேண்டும் வரங்கொடுத்து
சற்றுஞ் சுடாதபடி சாபமிட்டா ரம்மானை
எக்காலு நான்மறவேன் என்னைச் சுடாதபடி

முக்கால மக்கினியில் மூழ்கிவர வேணுமென்று
திக்காலும் பாய்ந்து தெருக்கடந்து போகலுற்றான்

## இராமலக்குவரைக் காணாமல் வருத்தமுறல்

அக்கோட்டை தான்கடந்து அப்பாலே சென்றுநின்று
தேடி யனுமான் இருவரையுங் காணாமல்
வாடி மனந்தளர்ந்து வந்தான் குளக்கரைக்கே

மாய மயிலரக்கன் வந்தா னரமனையில்
மயிலரக்கன் தானும் மருமகனைத் தான்பிடித்துக்
காளிக்குப் பெலிகுடுக்கக் காவல்வைத்தா னம்மானை
சித்தங் கலங்கி விழுந்தானே திண்கோவில்
அச்சந் தெளிந்து அனுமான் எழுந்திருந்து

மச்சேந் திரனை மதிப்பாகத் தானோக்கி
ஆர்புத்திர னென்று அனுமான் மிகக்கேட்டார்
மற்பொருந் திண்டோளான் மச்சேந்திர னென்சொலுவான்

(ஏடு ஒடிந்து கெட்டது)

பச்சைமுகில் வண்ணனை பாரளந்த... ...
மெச்சி யலையடைத்த வீரனும்... ...

என்றமொழி கேட்டு இயலனுமான்... ...
நன்றுமொழி என்றுநகைத்... ... ...
நல்லவனே பாதாள நாட்டுக்கு
வெல்லக் கணைதொடுக்கும்... ... ...
இந்த வுலகில் இராவணன்தான்... ...

சிந்துமுகில் வண்ணர்தமைத் தேடிவந்தே னென்மகனே
என்று னனுமான் எழுந்திருந்தான் மச்சேந்திரன்
அன்று இறைஞ்சி அடிபணிந்து வாய்புதைத்து
மங்கை யிராவணந்தான் வழிபாதியுந் தானழிந்து
கொங்கை யிராமனையுங் கொண்டு வருவேனுன்

## தண்ணீர் எடுக்கவந்த மயில்ராவணன் தங்கையிடம் அனுமன் செய்தி அறிதல்

வாரைவென்ற பூண்முலையாள் மயிலரக்கன் தங்கையவள்
தாரைவிழி நீர்சொரியத் தண்ணீர் எடுக்கவந்தாள்
மாருதியும் அக்கரையில் வந்துநின்று ரம்மானே
மங்கையரே என்னுடைய மாதாவே நீகேளாய்
எங்கள் உலகிலிருந்து இருவர்வரக் கண்டீரோ

இன்றிரண்டு பேரை எடுத்துவந்தா னிப்போது
மண்ணில் பெரியதொரு மாகாளி என்னுமொரு
பெண்ணுக் கிருவரையும் பெலிகுடுக்க வேநினைத்து
மெலியுங் கொடியிடையாள் வீரமாகா ளிக்கின்று
பெலிகுடுக்க வென்றார் பின்னையோ நானறியேன்

வேதக் கவியனுமான் மெய்யென்று தானறிந்து

## தண்ணீர்க் குடத்தில் மறைந்து அனுமான் கோட்டையுட்புகுதல்

எதுக்கு மஞ்சாதே என்பேர் அனுமான்காண்
மண்புரக்குங் கையாரே உன்மகனையும் நான்மீட்டு

சேரபட்டங் கட்டிநல்ல சிங்காதனத்தில் வைப்பேன்
பாரே முலகாளப் பட்டங்கட்டி வைக்கவல்லேன்

தடக்கை யுடையானே தண்ணீர்க் குடத்துடனே
அடக்கிக் கொடுபோக வல்லையே ஆரணங்கே
தாரிறுக்குந் தோளானே தண்ணீர்க் குடத்துடனே
நீர்நிறுத்துக் கொள்வார்காண் நெஷ்டூர கெட்டேனே
பெண்ணணங்கே யஞ்சாதே பேரனுமான் தன்னுடலை

விண்ணுற ஓங்கி மிகவளர்ந்து காட்டலுற்றான்
கண்களிக்கக் கண்டு கனகமன மகிழ்ந்து
தன்றார் மொழிமயிலாள் தானின்றங் கேதுசொல்வாள்
கொடுபோக வல்லேன்நான் கோமானே வாராய்நீ
தண்டாமரைப் புயத்தான் தன்னுடலைத் தான்சிறுக்கிக்

கோப்பழிக்க வந்தனுமான் குடத்திலடங் கிவிட்டான்
தண்ணமரும் பூங்குழலாள் தண்ணீர் முகந்தெடுத்து
எண்ணரிய மாயன் இராவணன்வா சல்புகுந்து
தண்ணீர்க் குடத்துடனே போகலுற்றான் தானனுமான்

## ஐயமுற்று நீர்க்குடத்தை நிறுத்த காவலர்களை அனுமான் அடித்து நொறுக்கல்

கண்ணே கருணையில் கபடம் வருகுதென்று

தண்ணீர்க் குடத்துடனே தராசில் நிறுக்கலுற்றார்
தண்ணீர்க் குடமும் முடுகினது தான்கண்டார்
அப்போ தனுமான் குடத்தையடித் துடைத்துக்
கொக்கரித்து மார்புதட்டிக் குவடு கிடுகிடெனத்
தக்கரக்கன் பட்டணத்தைத் தவிடு பொடியாக்கி

மின்னி மறைந்ததுபோல் வேதக் கவியனுமான்
உன்னிப் பொருதான் ஒருகோடி சேனைபட
மலைபோ லனுமான் வாளரக்கன் சேனையெல்லாம்
தலைபோக மிதித்துத் தரணி விழப்போட்டான்
பாங்குடனே குத்திப் படையழைத்தா னம்மானை

ஆங்கவர்கள் வாழும் தெருவெல்லாங் கடந்து
கொன்றுழக்கி நின்றதிர்த்தான் கோலக் கவியனுமான்
அக்கோட்டை தான்கடந்து அப்பாலே சென்று
மதியா மயிலரக்கன் வாழு நகரியிலே
அழியா நகரியிலே அனுமானும் உட்புகுந்து

மண்ணுலகும் விண்ணுலகும் மறையவே தானெழுந்து
கண்ணுக்கு நோக்கவென்று கால்மூக்கை யத்தனையும்
குரங்கு மதியாமல் கொல்லுமோ என்றுசொல்லித்
தரங்கள் மிகுத்தரங்கன் தானெதுத்தா னம்மானை
கரத்தை யிறுக்கியவன் கையா லொடித்திட்டு

அரக்கர் குலத்தை அறுக்கவந்தான் காணனுமான்
கூற்றுவனோ வென்று குலைகுலைந்து நிற்கலுற்றார்

## அனுமன் அரண்மனையின் உட்புகுந்து மயில்ராவணனை கழுத்தறுத்தல்

ஆற்றுமலோர் அரமனையி லுட்பு குந்தார்
அடித்துழக்கி யேயனுமான் அணிமதில்கள் அத்தனையும்
இடித்துப் பொடியாக்கி எங்கும் எரிக்கலுற்றான்

மாளிகையில் புகுந்து மயிலரக் கனைப்பிடித்துக்
காளிக்கு முன்போட்டுக் கழுத்தறுத்தா னம்மானை
பேர்பெரிய மாகாளி பெலியாகக் கொண்டதற்பின்
தார்புனையும் பூங்குழலாள் தண்ணீர்க் குடத்துடனே
கீழ்புவிக்குப் பேரரசாய்க் கீழுலகை ஆளுமென்றார்

கும்பிட்டு மன்னர் குறைவறவே சேவிக்க
செம்பட்டங் கட்டிநல்ல சிங்காதனத் தில்வைத்துப்

## இராமலக்குவரை எடுத்து, விடியுமுன் அனுமன் தங்கள் விடுதி சேரல்

பாதாளம் வாழவென்று பட்டங்கட்டித் தான்வைத்து
மாயரையும் தம்பியையும் வந்து தொழுதெடுத்துப்
போன வழிமீண்டு புகுந்தனர்கா ணம்மானை.

ஆழி யுலகளந்த ஆயரையும் தம்பியையும்
கோழிகூவு முன்னேமாயன் விடுதியிலே கொண்டுவந்து
ஆணிப்பொன் ஞன அழகனையும் தம்பியையும்
மாணிக்க மானஅனுமான் வைத்தனர்கா ணம்மானை
வெட்டு மயிரரக்கன் விபூஷணனுர் கண்டார்த்தே

கட்டி எடுத்தணைத்துக் கண்ணுறல் கருணைசெய்து
கோலமிக் கனுமாற்கு வேண்டும் வரிசைசெய்து
ஆலாற்றி சுற்றி அலங்கரித்தா ரம்மானை
மேலோருந் தம்பியரும் விடிந்திரண்டு நாழிகையில்
வானரங்கள் தான்சூழ மாளிகையில் வந்திருந்தார்

இலங்கைக் கரசே விபூஷணனே நீகேளாய்
மாய மயிரரக்கன் வருகின்ருன் கண்டாயே
செய்ய விபூஷணனும் திருமுகம்பார்த் தென்சொலுவான்
மன்னன் விபூஷணனுர் வந்தபடி வாய்புதைத்துச்
சொன்ஞனே அன்பா ரிராமருக்கும் தம்பியர்க்கும்

அந்தரக்கன் முன்னே அவன்வீறு சொல்லாமல்
இன்றைக்கு வந்திலனே இனிவாரான் காணுமென்று
எண்ணரிய வானரங்கள் எழுபதுவெள் ளஞ்சேனை
விண்ணோர்கள் தான்காண மிக்க விடுதூதன்
அப்போது வானரங்கள் ஆயரையுஞ் சூழ்ந்திருந்தார்

## இலங்கையில் அழுகுரல் கேட்டல்

அப்போ திலங்கையிலே அழுகைக் குரல்கேட்டார்
இருபது நாலு படைத்தலை வருஞ்சூழ
மறுவத்த மேனியரும் வாழும் விபூஷணரும்
எழுபதுவெள் ளம்படை இயல்புடனே தான்கூட
தொழுது கொலுவில் துலங்கவே தானிருந்தார்

இப்போது இந்தழுகை இல்லையென்று தாமுரைத்தார்
அந்நேரந் தூதுவர்கள் அழியுமி லங்கையிலே
இந்நேரஞ் சென்றுதான் இந்தவிசே ஷங்கேட்டு

வாருங்கோ ளென்று மாயவனார் தாமுரைத்தார்
ஒற்றர்கள் சென்று ஒருநொடியில் தான்கேட்டுக்

கற்றாக்கன் முன்னே கடுகவந்து தாமுரைத்தார்
மாய இராவணனும் மற்றுமுள்ள சேனைகளும்
காயாம்பூ மேனிக் கருணா கரனேகேள்
முன்னே இலங்கைநகர் மூதா ரழித்தனுமான்

### மயில்ராவணனை அனுமன் அழித்தமை பற்றி இலங்கையர் பேசுதல்

இந்நே ரஞ்சென்று இயல்புடனே கீழுலகில்

கொன்று விட்டானென்று கொடியரக்கர் பேசுகிறார்
அந்நேரம் விபூஷணரை ஆயனார் தாமழைத்து

### வீடணன் வாயிலாக இராமன் விவரம் அறிதல்

இப்படி வந்ததென்ன என்றுரைத்தார் மாயவரும்
அப்போது நானும் அனுமானும் கோட்டையிட்டு
செப்பமுடன் காத்திருந்தோம் தேவரீர் தன்னையன்று

என்வடிவாய் வந்து எடுத்துக்கொடு போயினன்காண்
அந்நேரந் தான்விழித்து அனுமான் அணுவுருவாய்க்
கீழுலகில் புகுந்து கீழ்மயில் ராவணனை
காளியுட சன்னிதியில் களப்பெலியு மிட்டனன்காண்
அந்நா ழிகையில் அனுமான் விரைந்தெடுத்துக்

கோழிகூ வுமுன்னே கொண்டுவந்தான் கண்டீரே
அந்நேரம் மாயன் அனுமாரைத் தான்மகிழ்ந்தே
என்னருமை செய்தேன் இயல்புடைய நாரணரே

### விருத்தம்

காட்டினில் கழுகு வேந்தன்[1] செய்ததோ செய்ய மாட்டேன்
நாட்டிலே அரசன்[2] செய்த நன்மையே நயக்க மாட்டேன்

---

1 சடாயு 2 குகன்

கேட்டிலேன் இன்று கண்டு கிளிமொழிச் சீதை தன்னை
மீட்டிலேன் தலைகள் பத்தும் கொய்திலேன் மேகமேனி[1]

### நடை

## இலங்கை மீது போர்புரியப் படையினை ஏவுதல்

அந்த வுரைகேட்டு ஆயனுர் தாமகிழ்ந்து
இந்த இலங்கையிலே இந்நேரஞ் செல்லுமென்றார்
எண்ணரிய வானரங்கள் எழுபதுவெள் ளஞ்சேனை

விண்ணுள்ளோர் தான்காண மிக்கவிடு தூதன்
குரக்குத்தளப் படைகள் கோவென் றிராவணன்மேல்
புரக்கும் புவியளந்தார் போர்பொரவிட் டேயிருந்தார்

## இருவர்படையும் எதிர்பொருதல்

வேலை உலகளந்த வேங்கடவா ணரெதிரே
மூல பெலம்வந்து மூண்டதுவே யம்மானை

எழுபதுவெள் ளஞ்சேனை யுடன்இருந்தா ரிராமனுந்தான்
பார்நிறைந்த சேனையுடன் படியளந்தார் தன்னெதிரே
அப்போது சுக்ரீபன் அங்குதனும் சாம்புவனும்
செப்பரிய நீலன் குமுதனுடன் சேய்கரியும்
மைந்தாகி வேகரியும் வருத்தமுடன் துந்துமியும்

வேறுதனி ராவணனும் வீரமுள்ள மந்திரியும்
படைத்தலைவ ருமெதுத்துப் படைபோயிருந் தாரம்மானை
கோலமலை பிடுங்கிக் கோனேரியார் தளத்தார்
மூல பலத்தை மோதினர்கா ணம்மானை
மாமரங்கள் பூமரங்கள் மாள அடிபிடுங்கித்

தோமரங்கள்[2] சேரச் சிதறடித் தாரம்மானை
ஆளிப் பொருதடர்ந்த ஆயன்படைத் தளத்தை
மூல பெலத்தாரும் மோதினர்கா ணம்மானை

---

1 இராமபிரானே (விளி)  2 தண்டாயுதங்கள்

மூல பெலத்தாரும் மோதிப் பொருகையிலே
நீண்ட சிலையாரும் நின்றவாளுங் கையிறுகப்

பூண்டு கட்டிவந்து புறப்பட்டான் தேருடனே
பெட்டிப் பணியெடுத்துப் பேரரக்கன் பூண்டுகொண்டு
பட்டினாற் கச்சைகட்டிப் பாரமலை போல்வில்லெடுத்து
வட்ட விடையெழுதி வயிரக் களமுடியில்
விட்டபனி நீர்புழுகும் வேடிக்கை யுமழகும்

கொண்டே யரக்கன் குலைகளத்தே சென்றுநின்று
குரக்குத் தளமெல்லாம் குலையவே பொருதான்
எழுபதுவெள் ளஞ்சேனை இடிபட்டுத் தான்முறிந்து
பதறியே ஓடலுற்றார் பள்ளிகொண்டார் தம்மைவிட்டுக்
கண்டு குரக்குப்படை கலங்கியே தானோட

ஓண்டி ஒருவனாகி நின்றார் உலகளந்தார்
மூலபெலம் வந்துஅடர்ந்து முடுகிப் பொருதலுற்று
ஓலமுடன் வந்தபடை உலகளந்தான் பார்த்து
ஏரச் சிலையை இராகவனே தானெடுக்கப்
பாரெங்கும் வந்தபடை பட்டதுகா ணம்மானை

## விருத்தம்

ஆனை யாயிரம் தேர்பதி னாயிரம்
அடல் பரிஒரு கோடி
சேனை காவலர் ஆயிரம் பேர்படின்
கவந்தம் ஒன்றெழுந் தாடும்
கானம் ஆயிரம் கவந்தம்நின் றாடிடின்
கவின்மணி கணில் என்னும்
ஏனை யம்மணி ஏழரை நாழிகை
இடைவிடாம லாடிய தன்றே

## நடை

உறுக்குஞ் சிலையி லொருமணிக ளோசைபட

குறைத்தலைக ளென்றெடுத்துக் கூத்தாடு மம்மானை
அப்படிஓர் காலுக்கு ஆயிரங்கோ டித்தலைகள்
செப்பமுட னெழுந்து திறமாக ஆடியதே
நீள்வரை போலே நீண்டார் சிலைமணிகள்
ஏழரைநா ழிகைமுழங்கி யாடியதே யம்மானை

வாள்படை யெடுத்த வாளரக்கன் சேனையெல்லாம்
மாளப்படுத் திவானேற விட்டனர்கா ணம்மானை
வெள்ளிச் சிலைப்பெருமாள் மிகுத்தரக்கர் தன்குடலை
துள்ளி விழப்பகழி தொட்டுவிட்டா ரம்மானை
ஆறாக ஓடி அலையெறிந்த செங்குருதிச்

சேறாக வேகடலில் நெடிதுயிற்றுப் போய்விழவே

## இந்திரன் அனுப்பிய தேர்ஏறி இராமன் செல்லல்

ஆண்டு பதினாலுஞ் செல்லளவி லப்பொழுது
மீண்டுந் திருத்தேர் வரவிட்டா ரிந்திரரும்
வீறுஞ் சிலைப்பெருமாள் மேதினியில் நில்லாமல்
ஏறித் திருத்தேர் நடத்தினா ரெம்பெருமாள்

## இராவணன் எதிர்வரல்

இந்திரன் போல்முடியான் இராவணன் எழுந்திருந்து
வந்தா னிலங்கை வடக்குவா சல்தனிலே
மண்ணோர் புகழ்வர மாயன் படைக்கெதிரே
தொண்ணூறா யிரங்குடை பிடிக்கவே தோன்றிநின்றான்
நின்றா னிராவணன் நெடுமூச் செறிந்துநின்றான்

கண்டே இலட்சுமணர் கடுஞ்சிலையைத் தான்தெரிந்து
தொண்ணூறா யிரங்குடையும் துணித்துவிட்டா ரம்மானை
அப்போ திராவணனும் அதிகோப மாயெழுந்து
தப்பாமல் ராகவனைத் தானடைந்து கொல்லவென்று

### விருத்தம்

வென்றிலேன் என்ற போதும்
வேதம்உள் ளளவும் யானும்

நின்றுளென் அன்றே மற்றவ்
விராமன் பேர்நிற் குமாயின்
பொன்றுதல் ஒருகா லத்துந்
தவிருமோ பொதுமைத் தன்றே
இன்றுளார் நாளை மாள்வர்
புகழுக்கும் இறுதி உண்டோ

## நடை

வாழ்வு கண்டு தாழ்வெண்ண வொண்ணாதே
வாழுமிராவணனும் வழுவிலா ராகவனும்

இன்றுளார் நாளைமாள்வார் புகழுக்கு மிறுதியில்லை
என்று துணிந்து இராவணன் எழுந்திருந்து
இருநூறு வெள்ளம் படையுடனே சென்றெதிர்த்தான்

## இருவர் படையும் எதிர்பொருதல்

சென்னிமுடி பத்திலொளி தேசமெங்கு மின்னிடவே
செம்பொன் மணித்தேரேறிச் சென்றா னிராவணனும்

மாயன் படைத்தலைவர் வானரங்கள் சேரவந்து
வரைகுவடு தான்பிடுங்கி வாளரக்கன் சேனையெல்லாம்
சிரமுடிகள் சிந்தச் சிதறடித்தா ரம்மானை
ஆயரிட தளமும் அரக்கரிட தளமும்
தென்திசையுங் கீழ்திசையுந் தெரியாமலே பொருதார்

பூமரங்கள் மாமரங்கள் புன்னைமரங் கள்பிடுங்கி
காய்மரங்கள் உள்ளவெல்லாம் கால்மாள வேபிடுங்கி
அடித்தார்கள் வானரங்கள் அரக்கர்படை தூள்எழவே
இந்திர லோகத்தாரும் ஏங்கியுடன் வாடினரே
அரக்கன் படைமாண்டு அவனொருவ னாகிநின்றான்

இருந்தநாள் தானமையும் என்று இராவணன்தான்
உன்னி மனத்தை ஒருமித்துத் தானெழுந்த
மாணிக்கத் தேரேறிச் சென்றான் இராமன்முன்னே

பத்திர மான பருவரக்கர் மாள வென்று
உத்திர மான மணிமுடிகள் தான்பறக்க

எத்தலமு மெண்ணு இராகவனே சுரன்சினந்து
முக்காலு மூன்றுசீ ராமபாணம் விடவே
எறிக்குங் கதிர்முடிபோல் இருக்கும் தலைதெறித்தார்
மறுத்து முடிகள் வளர்ந்தனவே யம்மானை
விபூஷணனர் அப்பொழுது மேகவண்ணர்க்
கென்சொலுவார்

சரமத் துரோகிதலை விண்ண தாகுமென்று
அடையாளஞ் சொல்லி அகலநின்ரு ரம்மானை
முத்தின் வயல்சூழும் மூதூரில் வாளரக்கன்
கொத்து முடியாமல் வந்துநின்ற தம்மானை
சங்கைக் குறித்தார் சமுத்திரமே மும்முழங்க

துங்கமுடி பத்துடனே தோன்றினன் வாளரக்கன்
பட்டையமு நல்ல பருகரும்பும் சேர்ந்தாப்போல்
நெட்டை நெடியரக்கன் நீண்டுவந்து நின்றதற்பின்
வீறுதமிழ்ப் பெருமாள் மேதினியில் நில்லாமல்
என்று திருத்தேர் நடத்தினு ரெம்பெருமாள்

## இராவணன் தலைகள் பத்தையும் அறுத்து வீழ்த்தல்

எறிக்குங் கதிர்போல் இருக்கு மணிமுடி
பறக்க இராமசரம் பட்டுக முக்காலும்
முத்து வயல்சூழும் மூதூரில் வாளரக்கன்
கொத்து முடிபத்தும் முளையாமல் போம்படிக்குச்
செங்கண் சிவந்து சினந்துமிக வில்லெடுத்தார்

சங்கு முழங்கச் சமுத்திரமே மும்முழங்கச்
செங்கைப் பெருமாள் சீராம சரந்தொடுக்க
அங்கை முடிபத்தும் அறுத்தளர்கா ணம்மானை.

### விருத்தம்

ஆர்கின்ற முனிவோரும் வானவரும் அந்தணரும் ஆசி கூறத்
தூர்கின்ற மலர்மாரி தொடர்ந்துபாற் கடலில் துயில்நீ
ராடித்
தேர்கின்ற இராவணன்தன் செங்குருதிப் பெரும்பரவை
திரளச்சென்று
கார்க்குன்ற மனையான்தன் கடுங்கணைப் புட்டில் அடர்க்க
ரந்ததம்மா

### நடை

வெம்புலவுந் தென்னிலங்கை மன்னவனார் தன்தலையை
அம்புதலைக் கொடுபோய் ஆடுங்கா ணம்மானை

### கதறும் வீடணனுக்கு இராமன் கூறுதல்

கண்டு விபூஷணரும் கதறினர்கா ணம்மானை

கண்டு பெருமாள் விபூஷணரைத் தான்பார்த்து
ஒக்க விழுந்தழுது ஒண்ணுக்கு மஞ்சாதே
துக்கங்கொண் டாடுமென்று சொன்னார் விபூஷணரை
அப்போ விபூஷணரும் அவர்பாதத் தைத்தொழுதே

### வீடணன் வேண்டியவாறு நீரில் முழுகிய இராவணன் தலைகளை உடலொடு பொருந்தச் செய்தல்

இரணிய னவையில் இனிய குமரனுக்காய்

மானமே செய்யவென்று மணிக்குடலைத் தான்பிடுங்கி
மாலையிட்டுக் கொண்டருளு மாயனே நீர்கேளிர்
மூல பெலத்தோடே முடிவேந்தர் தன்னுடனே
வாளுந் துணிந்து மடிந்த இராவணனை
காந்தி யழுது கதறுவேன் நானடியேன்

இராமபா ணந்தொடுத்து எங்குந்தலை காணாமல்
மராமரத்தை யெய்து வானரத்தை யாண்டவனே
குலைபாத கன்தலையைக் கொண்டுவந்து தான்பொருதி

அலையிலே கண் துயிலும் ஆயரே நாயடியேன்
அப்போது சென்று அவன்மேல் விழுந்தழுவேன்

தப்பாது என்று தான்தொழுது நிற்கலுற்றான்
மண்ணிலே தான்கிடந்த வாளரக்கன் தன்தலையைக்
கண்ணனார் அம்பு கடுகி யெடுத்துவந்து
ஆயனார் சொற்படிக்கு அரக்கன் தலைபொருதி
மாயவரை அம்பு வணங்கியதே அம்மானை

## வீடணன் கதறிப் புலம்பல்

கண்ட பொழுது கதறினர்கா ணம்மானை.
அண்டர் பெருமாள் அவற்கங் கருள்புரிந்தார்
ஆயனார் சொற்படிக்கு அந்நேரஞ் சென்றுகண்டு
வாரி யெடுத்து மடிமே லுறவணைத்துச்
சொன்ன பொழுது துக்கிச்சுத் தானழுது

என்பிறப்பே அண்ணாவி என்வார்த்தை கேட்டிலையே
உன்வார்த்தை மேலாய் உயிரிழந்து விட்டீரே
ஆன படையுடனே அரசுபதி யாளாமல்
காசினியில் வாழ்க்கைக் கடன்கழித்து விட்டீரே
தேனிருக்குஞ் செல்வம்போல் செலுத்தியரே சாளாமல்

மாணிக்கப் பொன்னிலங்கை வாழ்விழந்து விட்டீரே
அன்று பெருமாளை அடிபணி பார்த்தளவில்
இன்று பெருமாள் திருவடியைச் சேருமென்றான்
என்று மிலங்கை யிராவணனார் பட்டபின்பு
குன்றி லிளந்தென்றல் கோகனகச் செங்கழுநீர்

மல்லிகை யிருவாட்சி பிச்சிவந்து மணம்வீச
அல்லிமலர் புன்னை அருகு நிழல்சாக
கங்குல் வெருண்டோடக் கனகநில வெறிப்பச்
செங்கதிரோன் வந்து சிங்காதனம் புகுந்தான்

## மண்டோதரி புலம்பல்

பார்மீதில் ராவணனும் பட்டா னெனக்கேட்டு

வார்மேவு கொங்கை நல்லாள் மண்டோ தரிதானும்
பார்மேல் இராவணன் பட்ட செருக்களத்தைக்
காரார் குழலாள் ராவணனை நாடிவந்தாள்
வருகையிலே பின்தொடர்ந்து வந்த மடந்தையர்கள்
இருகண் புனல் சொரிய இரண்டுவெள்ள மாதருடன்

மதிலிலிலங்கை மன்னன் மணிமுடியுங் கண்டபின்பு
அதிமதுர வாய்திறந்து ஆருதுணை யென்றழுதாள்
மண்டோ தரிதானும் மண்ணிற் புரண்டழுதாள்
உண்டோ உன்போலே ஓங்கும் புகழானே
வல்லானே எந்தன் மணவாளா வல்லரக்கா

மெல்லியலாள் வந்து மிகவழுது தான்புலம்பிக்
குன்றிரண்டு கொங்கையிலுங் குத்தி விழுந்தழுது
தென்னிலங்கை செங்கோல் செலுத்தியர சாளாமல்
வானிலங்கை மன்னவனே மாயனுடன் மாறுகொண்டு
தேனிலங்கை விட்டுச் சிவலோகஞ் சேர்ந்தீரோ

வாழு முலைகறிய வண்டோ தரியழுது
மண்ணை யளந்தருளும் மாயவரைத் தாம்பார்த்து
கண்ணீர் சொரியநின்றாள் கார்வண்ணன் தான்காண
ஏத்தமுடன் வாழ்ந்த இரண்டுவெள்ளம் மாதருடன்
தோத்தமுள்ள ராவணனைச் சுத்தி விழுந்தழுதாள்

அம்புவனங் கள்வாழும் அனைத்துலகத் தோரும்
வானவர்கள் கேட்க மயங்கி விழுந்தழுதாள்
வீராதி வீரன் விபூஷணனுஞ் சென்றணுகத்
தோருத அண்ணாவி சொன்னபுத்தி கேட்டிலையே

## விருத்தம்

தமர்முழுது மணிமுத்தின் பந்த லூடே
தக்ககாலந் தனுவிலக்கித் தளைத்த செம்பொற்
கனமுதிர அலர்குழலாள் கவரி வீசக்
கழுவியபூ மலரணையிற் றுயின்ற கண்கள்

ஒழுகியசெம் பருந்துடனே கழுகும் பேயும்
ஓங்கியிடு காவணத்தி லும்பர் காண
அலையுதிர பெரும்புனலில் அமளியென்னத்
துயின்றவரே அரக்கர்கோவே
தோடுழுத நறுந்தொடையல் தொகைஉழுத
கிளைவண்டின் சுழியத் தொங்கல்
பாடுழுத படர்வெரிநின் பணிஉழுத
அணிநிகர்ப்பப் பகர்நல் யானை

கோடுழுத நெடுந்தளும்பின் குவைதழுவி
எழுமேகக் குழுவின் கோவைக்
காடுழுத இளம்பிறையின் கறைகழன்று
கிடந்தனபோல் கிடப்பக் கண்டான்.
பூதலத்தது ஆக்குவா யாகஇனிப்
பொலந்தேரை என்ற போதில்
மாதலிப்பே ரவன்கடவ மண்தலத்தின்
அப்போதே வருத லோடும்

மீதலைத்த பெருந்தாரை விசும்புஅளப்பக்
கிடந்தான்தன் மேனி முற்றும்
காதலித்த உருவாகி அறம்வளர்க்கும்
கண்ணுளன் தெரியக் கண்டான்
உண்ணாதே உயிர்உண்ணாது ஒருநஞ்சு
சனகிஎனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர்நீயும் களப்பட் டாயே

எண்ணாதேன் எண்ணியசொல் இன்றினித்தான்
எண்ணுதியோ எண்ணில் ஆற்றல்
அண்ணாவோ அண்ணாவோ அசுரர்கள்தம்
பிரளயமே அமரர் கூற்றே.
போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
தழுவியகை பொருமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்கும்
தம்மோயைத் தெய்வக் கற்பின்

பேர்மகளைத் தழுவவென்று உயிர்கொடுத்துப்
பழிப்புண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ திசையானை
பணையிறுத்த பருதி மார்பா.
மூவுலகு முன்னவ னுடைய ஆணை ஆணை
முக்கோடி அரைக்கோடி வாணாள் வாணாள்
தேவர்கள் சிறையிருக்கும் கோட்டம் கோட்டம்
செங்கதிரோன் ஊடாடாக் கோட்டை கோட்டை

வேலவற்குப் புறம்பிடாத் தோற்றம் தோற்றம்
வெள்ளிமா மலையெடுத்த திண்டோள் திண்டோள்
காவலரில் ஓரரக்கன் உன்னைப் போலக்
கடலனைத்தும் உலகனைத்துங் கண்டிலேனே.
வீர நாடுற் றாயோ விரிஞ்சனும்
யாவர்க்கும் மேலாம் முன்பன்
பேரன் நாடுற் றாயோ பிறைசூடும்
பிஞ்ஞகன்தன் புரம்பெற் றாயோ

ஆர்அ ணாஉன் உயிரை அஞ்சாதே
கொண்டகன்றார் அதுவெலாம் நிற்க
மார னார்வலி யாட்டம் தவிர்ந்தாரோ
குளிர்ந்தானோ மதிய மென்பான்
கொல்லாத மைத்துனனைக் கொன்றா யென்று
அவளொருத்தி கொடுமை கூற
பல்லாலே இதழ்அ துக்கும் கொடும்பாவி
நெடும்பாரப் பகைதீர்த் தாளோ

நல்லாரும் தீயாரும் நரகத் தாரும்
சொர்க்கத்தார் நம்பி நம்மோடு
எல்லாரும் பகைஞரே யார்மு கத்தே
விழிக்கின்றாய் எளியை யானாய்
ஓராசை ஒருவன்மேல் உயிர்ஆசை
குலமகள்மேல் வைத்த காதல்
தீராசைப் பழியென்றேன் எனைமுனிந்து
முனிவாறித் தேறி னாயோ

பேராசைப் பட்டெழுந்து நிலமுற்றும்
பொன்றவுந்தான் பொங்கி நின்ற
பேராசை பெயர்ந்ததோ பெயர்ந்தாசைக்
கரிஇரியப் புருவம் பேர்த்தாய்
என்றேங்கி யரற்றுவான் தனையெடுத்து
சாம்பனென நின்ற வேந்தன்
குன்றோங்கு நெடுந்தோளான் விதிநிலையை
மதியாத கொள்கைத் தாகி

சென்றோங்கு முணர்வினர்போல் தேறுது
வருந்துதியோ என்னத் தேறி
நின்றான்அப் புறத்துஅரக்கன் நிலைகேட்டாள்
மயன்மகளாம் நெடுங்கண் பாவை

நடை

## பிற்கடன் செய்யுமாறு வீடணனை ஏவுதல்

இப்படியே விபூஷணன்தான் இரங்குவதைத் தான்பார்த்து

வெற்றிகொண்ட இராமன் விபூஷணரைத் தானழைத்துக்
கொற்ற மிகமுழங்கக் குலத்தியலுக் குண்டான
தீக்கடனும் நீர்க்கடனும் செய்துவா வென்றுரைத்தார்
போர்க்களத்திற் பட்டவன்பாற் போகவிட்டா ரம்மானை

## சூர்ப்பனகை புலம்பியழல்

அந்நேரஞ் சூர்ப்பணகை அக்களத்தில் தானும்வந்தாள்

என்னண்ணே வீரா இலங்கைக்கு ராசாவே
சேனைப் படைஎங்கே திசையான தம்பியெங்கே
வானுலக மாண்ட மகனெங்கே தம்பியெங்கே
ஆனஅதி காயன்எங்கே அக்ஷகுமர னெங்கே
மூலபெல மெங்கே முடிவேந்தர் தாமெங்கே

கோலவிழி நீர்சொரியக் குமுறி விழுந்தழுதாள்
சோனை முகனையாள் சூர்ப்பணகை தான்புலம்பி

வானவர்கள் கொண்டாடும் வாளரக்க னென்றழுதாள்
தேனிருக்குஞ் சேவடியாள் சீதைபொருட் டாலே
மானிடவர் கையால் மடிந்தனையோ என்றழுதாள்

தெண்டரையில் வாரிதிசூழ் தென்னிலங்கைப் பட்டணத்தார்
எண்டிசையோர் வந்திறைஞ்சு ஏத்தமிகு வாழ்விலையோ
கற்புடைய சீதையுட கண்ணீர்தான் சுட்டதென்று
சூர்ப்பணகை தான்புலம்பிக் கத்திவி ழுந்தழுதாள்
வெண்டோ தரிபுலம்பி வாழ்த்தினர்கா ணம்மானை

அண்டரெல்லாம் மெச்சு மதிவீரா என்றழுதாள்
அந்நேரஞ் சூர்ப்பணகை அண்டமெல்லாந் தானுருகி
விண்டு திருச்சடையை வினவியழ வும்வந்தாள்
அன்று திருச்சடைதான் ஆகப்போய் நின்றுகொண்டு

## திரிசடை சூர்ப்பணகையை இகழ்தல்

### விருத்தம்

பொன்கழுத்து மாரீசன் தன்னைக் கொன்றாய்
பொய்த்ததுன் மூக்குப் பொருத வாலி
தன்கழுத்து மராமரமும் உருவ வெய்தாய்
தாபதரோ மன்றெமக்குச் சகாய மானாய்
வெங்கழுத்தில் விறலரக்கி வீசி சூரி
விறலரக்கர் குலங்களைத் தவிர்த்த நங்காய்
உன்கழுத்து மென்கழுத்து மொக்கு மென்றே
உபதேசங் கொடுத்தாயுங் களன்னார் மார்க்கெலாம்

### நடை

அந்நேரம் விபூஷணனும் அஞ்ஞவி யையெடுத்து
சொன்னவில்வேள் கும்பகற்கும் கும்பநி கும்பனுக்கும்

என்னு மரக்கருக்கும் இந்திரசெயிற் றுத்தனக்கும்
மெய்யாக விபூஷணனும் வேதநெறி தன்னாலே
செய்யுஞ் சடங்கறுதி செய்தனர்கா ணம்மானை

## மண்டோதரி கணவனுடன் தானுமிறக்க அனுமதி வேண்டல்

அப்போது தானரக்கி ஆயவரைவந் தேதொழுது
ஆபாதன் தானும்மை அறியாதான் தன்னுடனே

சாகத்தீத் தாவென்று தான்மொழிந்தா ளம்மானை
தன்னாலே கெட்டரக்கத் தாரமே நீகேளாய்
என்னால் பொறுக்குமது எல்லாம் பொறுத்தோமே
எல்லா மனுபவித்து இருந்தங்கு வாழாமல்
என்னோடு தான்பகைத்து இயமபுரம் போனான்

அன்ன நடையாரை அஞ்சாதே என்றழைத்து
மின்னே ரிடையாற்கு வெற்றிலை பாக்களித்து
அந்நா ளிகையி லரக்கியையுந் தானனுப்பி

## இராவணன் உடலைத் தீயிலிடுதல்

இந்நாள் ஈடேற்ற என்றுசமர்த்தி யிட்டார்
ஆழக்குழி பறித்து அழகான கட்டையிட்டு

நேமிக் குழியில்விழத் தள்ளுவித்தா ரம்மானை
அக்கினியில் விழுந்து ஆகாசம் போனதற்பின்
சொக்கலோ கத்தாரும் சூழ்ந்த முனிவர்களும்
வானவரும் விண்ணோரும் வாழ்த்திமிகக் கொக்கரித்தார்
தானதன்ம மெல்லாம் தழைக்குமே யென்றுரைத்தார்

கலங்கி மிகப்பொருது காமாண்டு போனதற்பின்
சொல்நெறி தவறாது துய்ய விபூஷணற்கு
மன்னுகின்ற பட்டங்கட்டி வைக்கவே வேணுமென்று
எத்தலமு மெண்ணும் எழுபதுவெள் ளஞ்சேனை
புத்திசொல்லிச் சீராமர் போகவிட்டா ரம்மானை

தன்னிக ரொன்றில்லாச் சாம்ப ரிவர்கள்
துன்னு சந்தணப் பூஞ்சோலை பிடித்துவர
எந்நிலமு மெண்ணு மிலட்சுமணர் வில்பிடிக்க

### வீடணற்கு முடி சூட்டல்

தடம்பெரிய விபூஷணரைத் தானழைத்துக் கொண்டுவந்து
பட்டம்கட்டித் தாம்வைத்துப் பாரித்தா ரம்மானே

சீரிய செங்கோல் செலுத்தியர சாளுமென்றார்
சொரியு முகில்நிறத்தான் சொன்ன மிகக்கொடுத்து
மன்னவரென விபூஷணரைச் சிங்கா தனத்திருத்தி
மன்னரெல்லாம் பட்டங்கட்டி வைத்தனர்கா ணம்மானே
வேத விபூஷணரை மேலாக வைத்ததற்பின்

### அனுமனிடம் சீதையை அழைத்துவரச் சொல்லல்

ஆதி முதலோனும் அனுமானைத் தானழைத்துச்
செந்தாமரை யாரைத் தேடியருகு சென்று
அந்தத் திருவை யழைத்து சேஷமெல்லாம்
இலங்கை நகர இராவணன்தன் சேனையும்
கலங்கி மிகப்பொருது காமாண்டு போனபின்பு

அந்தக் குலமெல்லாம் ஆள்செத்துப் போனபின்பு
வந்தேனான் என்றுசொல்லி வகையுடனே தான்பேசி
அந்தத் திருவை அழைத்துவா என்றுரைத்தார்

### அனுமன் சீதையை அழைத்துவரல்

முன்னே இலங்கைநகர் கண்ட அனுமானும்
சொன்ன ஒருநொடியில் சோகவனம் புகுந்துச்

செயமுடனே சென்று திருவி னடிபணிந்து
தேவர் தொழுங்கற்பாள் சீதைதனைத் தெண்டனிட்டுச்
சோபனங்கள் பாடித் தொழுதா னனுமானும்
மாண்டா னரக்கன் மகாசேனை அத்தனையும்
நீண்டா ரழைத்துவரச் சொன்னார் எழுந்தருளீர்

கரிய குழலாள் அரிய மொழிகேட்டு
மன்னர் சீராமன் மலர்ப்பாதங் காணவென்று
என்னுடைய தாயே எழுந்தருள வேணுமென்றார்
பிரியமுடனே புறப்பட்டாள் பெண்ண ணங்கும்

## சீதையை ஒப்பனை செய்து அழைத்துவரல்

அரிய மருந்தே ஆரணங்கே தாயாரே

இந்தச் சிறைக்கோலம் இராகவனுக் காகாதே
அந்தத் திருமால் அருள்பாதங் காணுமுன்னே
முந்தவே பொய்கையிலே முழுகிவர வேணுமென்றார்
அப்போது மாதாவு ம்அனுமான்முக நோக்கிச்
செப்பரிய சிங்கமே தென்னிலங்கை கண்டவனே

இந்தச்சிறைக் கோலம் இயல்புடனே காணாராய்
வருந்தி யிருந்தமனம் வேறாமே தானனுமான்
நானே யவற்கு நலமுடனே தானுரைப்பேன்
தேனேநீர் பொய்கைதனில் சென்று முழுகுமென்றார்
அந்நேர மாதா அனுமான் மொழிகேட்டுத்

தெய்வீகச் சீதை சிறைக்கோலந்தானீங்கி
மொய்பூஞ் சுனைதனில் மூழ்கினள்கா ணம்மானை
அப்போது பூஞ்சுனை மூழ்கிக் கரையேறி
இப்போது தானம் இனிக்கொடுக்க வேணுமென்று
சித்தம் மகிழ்ந்து திரும்பி வருகையிலே

பத்தியுடன் தானம் பரிந்துமிக வளித்தாள்
தானதன்ம மெல்லாம் தான்கொடுத்தா ளம்மானை
வானுலகு மெச்ச மடவார்திருச் சடைக்குச்
சீதைதிருக் கையாலே திருமேனி யிலணைத்து
ஆதரவு சொல்லி அவளைமிகக் கொண்டாடி

இந்தமலர்க் காவுதனில் இயல்புடனே வந்திருந்து
வந்தநேர மெல்லாம் வகையுடனே தான்பேசித்
தேறுதலைச் சொல்லித் திகையாம லென்மனத்தை
ஆறுதலை சொல்லி அருகிருந்த பெண்கொடியே
நாரா யணனேஉனை நான்மறவேன் கண்டாயே

ஆரணங்கள் கல்வி அறிந்ததொரு ஆயிழையே
பொன்னரிய ஆபரணம் பூண்டுகொண்டு நீயிருந்து

சொன்னமிகக் கொடுத்துத் துலங்குமணி கொடுத்து
இந்திராணிப் பட்டு இயல்புடனே தான்கொடுத்து
அந்த இலைபிளவு அரியதொரு கையாலே

இலங்கைக் குடையானை இருநீ யெனவுரைத்து
அலங்கலுடன் வாழ்த்தி அனுப்பினார் மாதாவும்

**சீதை இராமனைக் கண்டு திருவடி தொழுதல்**

நாரணனைக் காணவென்று நடந்தாள் திருவனையாள்
வானோர் மடவாரும் மண்ணில் மடவாரும்
தேனார்மொழி யாரைச் சேவித்தா ரம்மானை

சேலனைய கண்மடவாள் சீராமன் செங்கமலக்
காலில் விழுந்தழுது கதறினர்கா ணம்மானை

**சீதையின் ஒப்பனை கண்டு இராமன் இகழ்தல்**

திங்கள் நுதலோனும் செம்பவள வாய்துடிப்பச்
செங்கண் சிவந்தெழுந்தார் சீராம ரம்மானை
சாதி முறையாய்த் தாய்வயிற்றில் வந்தறியாய்

மேதினியில் மெச்சறியாய் மேல்வந் ததையறியாய்
பூதலத்தில் தோன்றும் புழுப்போலே தோன்றியவள்
நீதிமறந் தாயிலை நீயென்றார் மாயவரும்

**சீதை தீமூழ்கி வருவதாகக் கூறல்**

ஆதி யருளே யருள்மணியே நாரணரே
சோதிமணி விளக்கே சொல்லுகிறேன் கேளுமென்றாள்

செந்தாமரை யானே சிறைக்கோல மாகாதே
நாரணரே நீரில் மூழ்கிவந்தேன் கண்டீரோ
கண்ணரே காரணரே காயாம்பூ மேனியரே
அடியேன் தன்பேரில் அழுக்குமிக வுண்டானால்
கொடியதொரு அக்கினியைக் குழியில் வளர்த்துமிக

சந்தாயம் தீய்ந்து வருவேனான் சாரதியே
கொந்தலரும் பூங்குழலாள் கூறினாள் மாயர்முன்னே

## சுக்ரீபன் கூற அனுமன் தீ அமைத்துக் கொடுத்தல்

அந்நேரஞ் சுக்ரீபன் அனுமானைக் கூவி
இந்நேர மக்கினியுண் டாக்குமென்றாள் மாதாவும்
ஏமகிரி போலே எழுபதுவெள் ளஞ்சேனை

ஓமகுண்டம் மூட்டி வைத்தனர்கா ணம்மானை
சுக்ரீபன் தானனுமான் சுத்தமுள்ள விபூஷணனும்
மற்றுமுள்ள சேனைபடை வானரங்கள் தான்காண
உத்தமன் தான்காண ஓமகுண்டத் தக்கினியில்
முத்துநகைச் சீதை முழுகினர்கா ணம்மானை

கல்லார வார்தனத்தாள் கற்பு நெருப்பதனால்
நல்லான தேவர் நடுங்கினர்கா ணம்மானை
செங்கனலின் பொய்கையிலே சீதை முழுகிடவே
கங்கை யழுதாள் கலைமடந்தை தானழுதாள்
மங்கை யழுதாள் மண்ணளந்தார் தான்மாயன்

செங்கனலில் பொய்கையிலே சீதைமிக மூழ்கி
வந்திறைஞ்சு மாயவரும் பார்த்திருந்தா ரம்மானை
சங்கு தரித்தோனும்[1] தாமரையில் வாழ்ந்தோனும்[2]
திங்கள் சடையோனும்[3] தேவேந் திரனாரும்[4]
அதிகாயன் சேனையுடன் அக்ஷகு மாரனையும்

மூல பெலத்தாரும் மோதுங் கரிபரியும்
சேர வுகமுடிந்து சேனையெல்லாம் தான்மாண்டு
காரனைய கையான் கருவறவே கொன்றுவிட்டுக்
கோசல நாடுடையான் குரக்குத் தளத்துடனே
ஆசலம் தீர்ந்திடும் அயோத்திக் கெழுந்தருளி

---

1 திருமால் 2 நான்முகன் 3 சிவன் 4 இந்திரன்

நீருந் திசதரரே நீண்டாரைக் காண்பதற்கும்
வாரு மென்றுசொல்லி மகிழ்ந்திருந்தா ரம்மானை
கார்மேனி ராமனையுங் கண்டனர்கா ணம்மானை
கற்றாவைக் கண்டுருகும் கன்றுதனைப் போலக்
கொற்றமிகு தாதைதனைக் கும்பிட்டா ரம்மானை

ஏற்றமுள்ள கைகேசி வார்த்தை தனைமீறாமல்
... ... மகுடஞ் சூட்டாமல் போந்தா னென்றழுதாள்
... ... சென்றாயே என்றமைச்சர் கட்டுரைக்க
... ... அடைந்தேன் என்றுசொன்ன
... ... பதினாலு வருஷம்... ...துயர்

... ... மகுடம் பெற்றானென வுரைத்தார்
பொன்னுலகில் மன்னர் போயினர்கா ணம்மானை
அந்நேர நாரணரும் அயோத்திக் கொழுந்தருளிப்
பால்கடலில் வானரங்கள் கட்டும் திருவணையை
ஓச்சமுள்ள வில்நாணின் உடைத்து விட்டாரம்மானை.



# பிழை திருத்தம்

| வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 220 | புகுந்துடிக்கிக் | புகுந்துழக்கிக் |
| 256 | சிதறிமுக | சிதறிமிக |
| 266 | கன்னிவிரரல் | கன்னிவிரால் |
| 649 | நுதலாய | நுதலாய் |
| 664 | மூக்கறிந்தா | மூக்கரிந்தா |
| 749 | நீர்சொறிய | நீர்சொரிய |
| 821 | முனையாரைக் | முலையாரைக் |
| 846 | யானைக் | யாளைக் |
| 985 | முலகரிய | முலகறிய |
| 1307 | அரக்கம்தர் | அரக்கர்தம் |
| 1543 | ஓத்து | ஒத்து |
| 1627 | சினகான் | சினகரன் |
| 1649 | புகுந்தகளி | புகுந்ததனி |
| 1664 | கடைஞ்சல் | இடைஞ்சல் |
| 1670 | லேயிருந்தேன் | லேயிருந்தேன் |
| 1681 | வீசு | வீச |
| 1710 | மாதர | மாதா |
| 1739 | ஓருபது | ஒருப்து |
| 1748 | மேட்டில | மேட்டில் |
| 1751 | கரத்துறு | களத்துறு |
| 1858 | வெடிக்கும | வெடிக்கும் |
| 2161 | அடள்படு | அடல்படு |
| 2210 | தஞ்செனக | தஞ்செனக் |
| 2230 | யென்றுபயம்ஆற்றி | யென்றபயமாற்றி |

| வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 2247 | முட்டாக்கன் | முட்டரக்கன் |
| 2393 | துளெழுவே | தூளெழுவே |
| 2495 | மணிமுடியும் | மணிமுடியும் |
| 2681 | மாணடவர் | மாண்டவர் |
| 2780 | நீறிறந்தால் | நீரிறந்தால் |
| 2786 | லங்கையிவே | லங்கையிலே |
| 3108 | சோடாலி | கோடாலி |
| 3199 | அல்லேஒத்த | அல்லேஒத்த |
| 3283 | காலிரணடால் | காலிரண்டால் |
| 3362 | அல்லாறு | அல்லாரு |
| 3403 | கதித்தானே | கலித்தானே |
| 3404 | ஒருவர்க்கு | ஒருவர்க்கு |
| 3483 | தன்றூர் | தண்ணூர் |
| 3509 | மிகுத்தரங்கன் | மிகுத்தரக்கன் |
| 3730 | செலுத்தியரே | செலுத்தியர |
| 3771 | நெடுந்தளும்பின் | நெடுந்தழும்பின் |
| 3959 | திங்க்ள் | திங்கள் |

பக், 65 வரி. 21 சிதையைியிடம் — சிதையிடம்

பக். 147 5585 — 3585

,, 5590 — 3590

பக். 157 வரி. 20 சூர்ப்பனகை — சூர்ப்பணகை

,, 154 இப்பக்கத்திலிருந்து தொடங்கும் பத்து விருத்தங்களையும் எதுகை நோக்கி நான்கு நான்கு அடிகளாகச் சரிசெய்து கொள்க.

